# விம் உங்கள் வீட்டிற்கு அவசியம்

## —சீக்கிரமாக, பிரகாசமாக சுத்தம் செய்ய






மிகுந்த அழுக்கையும், என்ணெய்ப் பசையையும் வெகு சீக்கிரமாகநீக்க, விஞ்ஞான முறையில் சுத்தம் செய்யும் விம்மை ஒரு ஈரத்துணியில் தூவி, தேய்த்து, அலம்பி, உலர விட வேண்டியதுதான். என்ன பள பளப்பு பாருங்கள். சமையல் பாத்திரங்கள், எவர்சில்வர் பாத்திரங்கள், சாதாரண பீங்கான் சாமான்கள், கண்ணாடிப் பாத்திரங்கள், கைகள், பாத்திரங்கள் துலக்கும் பேஸின்கள், பளிங்குத் தரைகள் முதலியன சுத்தம் செய்ய விம் உபயோகியுங்கள். மென்மையானதா? சந்தேகமில்லாமல்! ஒரு துளி விம் வெகுவாக சுத்தம் செய்கிறது!










**விஞ்ஞான முறையில் சுத்தம் செய்யும் பவுடர் விம்**

V. 86A-50 TM




ஸிம்ஸன் & கோ லிட்.

மதராஸ்-2



# அது ஜெயிக்க முடியாதது

### ஏனெனில்

★ **சிக்கனம்** — ஸ்டாண்டர்ட் சூபர் டென் ஓட்டும் நிலைமைக்குத் தகுந்தவாறு ஒரு காலன் பெட்ரோலுக்குச் சராசரி 35 மைல்களோ அதற்கு அதிகமாகவோ செல்லுகிறது.

★ **நம்பிக்கை** — பெரிய சர்வதேசப் போட்டிப் பந்தயங்களில் ஸ்டாண்டர்ட் டென் அடைந்துள்ள வெற்றிக்கு சரிநிகராக, இந்தக் கார் ரகத்தைச் சேர்ந்த வேறு எந்த மோட்டார்களுக்கும் கிடைத்ததில்லை. ஸ்டாண்டர்ட் டென்தான் 1955ல் இங்கிலாந்தைச் சுற்றும் ஆர். ஏ. ஸி. பந்தயத்தில் முதன்மையாகவும், 1955ல் ஆஸ்திரேலியா பொன் விழாவின் சிறிய மோட்டார் பரீட்சையில் முதலாவதாகவும் இரண்டாவதாகவும் சென்றது. மேலும் 1956ல் இங்கிலாந்தைச் சுற்றும் பந்தயத்தில் முதல் வகுப்பில் முதலாவதாகச் சென்றது. இதுபோல் இன்னும் 50 இதர பந்தயங்களில் வெற்றி பெற்றுள்ளது. இவற்றைக் காட்டிலும் ஸ்டாண்டர்ட் டென் உறுதிக்கும், பத்திரத்துக்கும், நீண்டகால உழைப்புக்கும், சீர்த்திக்கும் வேறு சிறந்த சாட்சியம் என்ன வேண்டும்?

★ **உழைப்பு** — சுலபமாக மாற்றக்கூடிய, நாலு வேகமுள்ள கியர் பாக்ஸ், சிறந்த வேக சக்தியுடன் கூடிய 948 ஸி.ஸி. ஓவர்ஹெட் வால்வ் இஞ்ஜினுடன் விளங்கும் ஸ்டாண்டர்ட் சூபர் டென்னுக்கு ஈடு இணை கிடையாது. சவாரியில் பயமின்மை, எவ்விடத்திலும் சுலபமாய் ஓட்டிச் சமாளிக்கவும் பார்க் செய்யவும் வசதி, ஆகிய விசேஷ அம்சங்களைப் பிரதானமாகக் கொண்டு தயாரிக்கப்படுகிறது.

**STANDARD Supèr Ten**

**யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிட்.**

சென்னை - பெங்களூர் - உதகமண்டலம்

# கல்கி

## ஜவாஹர் ஜயந்தி மலர்

## பொருளடக்கம்

மலர் 16 இதழ் 16 | நவம்பர் 18, 1956 | துன்முகி ஸ்ரீ கார்த்திகை 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.







# WATER CLOCKS

## were all very well—

ஜலாதார் மணி காட்டிகள் புராதன எகிப்தில் நன்றாக இயங்கி வந்தன.



ஒரு பெரிய பாத்திரத்தின் அடிப்பாகத்தில் உள்ள ஒரு சிறு துவாரத்திலிருந்து தண்ணீர் ஒரே அளவில் ஒழுகும். பாத்திரத்தின் உட்புறத்தில் வர்ணத்தால் குறிக்கப்பட்ட நேரங்கள் எஞ்சியுள்ள தண்ணீர் மட்டத்தைக் கொண்டு மணியைக் குறிக்கும். இது கிட்டத்தட்ட சரியான நேரத்தைக் காட்டுவதாயிருந்தாலும் அது நிச்சயமற்ற சிரமமிருந்த முறை என்பதில் சந்தேகமில்லை.



இன்று ஒரு வெஸ்ட் எண்ட் கடிகாரத்தை வைத்திருப்பவர் கையில் ஒரு அடக்கமான இம்மியும் பிசகாத மணி காட்டியைக் கூடவே அணிந்து செல்கிறார். இந்த மணி காட்டி நேரத்தை நிமிஷக் கணக்கில், ஏன் வினாடிகளாகவும் அளந்து காட்டுகிறது! இந்த உறுதியான அழகான கடிகாரங்கள் இந்திய சீதோஷ்ண நிலையைத் தாங்குவதற்கென விசேஷமாகத் தயாரிக்கப் படுகின்றன. நீங்கள் எந்த விலையில் கடிகாரத்தை வாங்கினாலும் ஒவ்வொன்றின் மீதும் இருக்கும் எங்கள் முழுப் பெயர் உங்கள் பண மதிப்புக்கு உத்திரவாதமாக நிற்கிறது.

**The THEMIS**

எவர்பிரைட் கேஸ் ரூ. 130
ரோல்டு கோல்டு ரூ. 150
9 காரட் தங்கம் ரூ. 325
18 காரட் தங்கம் ரூ. 425

*Accurate timing today depends on*

# WEST END WATCHES




*Write for FREE Catalogue*

WEST END WATCH CO. BOMBAY AND CALCUTTA



மலர் 16 | இதழ் 16

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி௵ கார்த்திகை 3

# உலகம் உய்ய வழிகாட்டும் ஒளிச் சுடர்!

மனித குலத்தின் மாணிக்கமாக, பாரதத்தின் முடிசூடா மன்னராக விளங்கும் பண்டித ஜவாஹர்லால் நேருவின் அறுபத்தெட்டாவது ஜெயந்தி வைபவத்தை நவம்பர் மாதம் பதினாலாம் தேதி அகில உலகமும் கொண்டாடுகின்றது.

பண்டைய காலத்தில் சூரிய, சந்திர குலத்து அரசர்கள் பாரதநாட்டுக்கு மகத்தான பெருமை அளிக்கக்கூடிய பல காரியங்களைச் செய்தார்கள்.

சத்தியத்தை நிலைநிறுத்துவதற்காக ஹரிச்சந்திரன் பட்ட கஷ்டங்களும், ஒரு புறுவின் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரையே அர்ப்பணம் செய்ய முன் வந்த சிபிச் சக்கரவர்த்தியின் தியாகமும் எவரையும் மெய்சிலிர்க்க வைக்கும்.

நீதி நெறி வழுவாத சோழ மன்னன் நீதியை நிலைநிறுத்துவதற்காகத் தனது புதல்வனைப் பலி கொடுக்கத் தயங்கவில்லை.

வெற்றி மேல் வெற்றி கண்ட அசோக சக்கரவர்த்தி தமது வெற்றிக்குக் காரணமான போரைக் கைவிட்டு ராஜ ரிஷியாகத் திகழ்ந்தார்.

அசோகரின் அச் செய்கைக்கு உலக சரித்திரத்திலேயே உவமை இல்லை என்று உலக சரித்திராசிரியர்கள் போற்றிப் புகழ்ந்துள்ளனர். அசோகர் தாம் சம்பந்தப்பட்ட வரையில் யுத்தத்தை வெறுத்துத் தமது கருணை உள்ளத்தைத் திறந்து காட்டினார்.

ஆனால், ஜவாஹர்லால்ஜி யுத்தமே செய்யாமல் இலட்சியங்களுள் மகோன்னத ஸ்தானத்தை வகிக்கும் சுதந்திரத்தை அடைய வழிகாட்டிய பாரதத் தவப் புதல்வர்களின் முன்னணியில் இடம் பெற்றார்.

அது மாத்திரமல்ல, இன்று உலகமே யுத்த அந்தகாரத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு வழிகாட்டும் ஒளிச் சுடராகவும் விளங்கி வருகிறார்; யுத்த அரக்கனை அழிக்கவல்ல அவதார புருஷராகத் திகழ்ந்து வருகிறார்.

எவ்வளவு சிக்கலான உலகப் பிரச்னையாயினும், அதைச் சுமுகமாகவும் சமாதானமாகவுமே தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று இடைவிடாது வலியுறுத்தி வருகிறார்.

காந்திமகான் இந்தியாவுக்குக் காட்டிய வழியை இப்போது ஜவாஹர்லால்ஜி அகில உலகத்துக்கும் காட்ட முற்பட்டு, அதில் ஓரளவு வெற்றியும் பெற்று வருகிறார்.

வல்லரசுகள் போரை அறவே மறந்து பிரச்னைகளைச் சமாதான முறையில் அணுக வேண்டும் என்ற நேருஜியின் உயர்ந்த இலட்சியத்தை உலகிலுள்ள பெரும்பாலான நாடுகளும் ஆதரிக்கத் தொடங்கியிருக்கின்றன.

உலகத்தை அல்லல்படுத்தும் பிரச்னைகள் பற்றி நேருஜியின் கருத்து என்ன என்பதை அறிந்து கொள்வதில் இணையற்ற ஆயுத வலிமை பொருந்திய வல்லரசுகள் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றன. மேற்படி வல்லரசுகளால் கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகும் சிறிய நாடுகளும் நேருஜியின் ஆதரவை எதிர்பார்த்து நிற்கின்றன.

இவ்விதமாக நேருஜியின் புகழ் வானோங்கி வளர்ந்து வருகிறது.

இப் புகழும் பெருமையும் கோடிக்கணக்கான பாரத மக்களுக்கும் அந்தத் தவப் புதல்வரைப் பெற்றெடுத்த பாரத அன்னைக்கும் பேரானந்தத்தைக் கொடுக்கின்றன.

குழந்தைகளைக் கண்டால் அகமும் முகமும் மலர்ந்து கொஞ்சும் அன்பு உள்ளம் படைத்த நேருஜியின் இவ்வருஷ ஜெயந்தி வைபவத்தை அகில இந்தியக் குழந்தைகள் தினமாகக் கொண்டாடுகிறார்கள்.

சென்னையிலும் மேற்படி ஜெயந்தி வைபவம் 14-ந் தேதியிலிருந்து 18-ந் தேதி வரையில் குழந்தைகளின் குதூகல விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

இவ்வாறாக, மனித குலத்தின், குழந்தைக் குலத்தின் அன்புக்கும், மதிப்புக்கும் பாத்திரரான ஜவாஹர்லால் நேரு இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து, யுத்தம் ஒழிந்து சமாதானம் நிலவவும், உலக மக்கள் யாவரும் இன்புற்றிருக்கவும் வழிகாட்டி வர அருள் புரியுமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

இந்தக் ''கல்கி'' மலரின் அட்டையை ஜவாஹர்லால் நேருவின் திருவுருவப் படம் அலங்கரிக்கிறது. அசோகரின் ஜோதி வடிவமும் ஸ்தூபியும், சமாதானப் புறாவும், புது தில்லியில் கம்பீரமாகக் காட்சி யளிக்கும் மக்கள் சபையும் இம்மலருக்கு அழகும் மணமும் அளிப்பதாக இருக்கின்றன அல்லவா?

# யார் புது கவர்னர்?

சென்னை ராஜ்யத்தின் கவர்னராக இது காறும் பதவி வகித்து நமது அன்பைக் கவர்ந்த ஸ்ரீ பிரகாசா அவர்கள் பம்பாய்க் கவர்னராகப் போகிறார் என்று கேள்விப் பட்டது முதல் நாம் அனைவரும் சென்னையின் அடுத்த கவர்னர் யார் என்பதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறோம். ஸ்ரீ பிரகாசாவைப் போன்ற ஒரு நல்ல கவர்னர் கிடைப்பாரா என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். மற்ற எல்லா மாகாணங்களுக்கும் கவர்னர் பதவி நியமனமாகி விட்டது. ஆனால் சென்னையின் கவலை மட்டும் இன்னும் தீர்ந்தபாடில்லை.

பிரதமர் நேருவுக்காவது ஜனாதிபதிக்காவது நமது சென்னை ராஜ்யத்துக்குத் தகுந்த கவர்னரைத் தேர்ந்தெடுப்பதில் ஒன்றும் கஷ்டமிருக்காது. இருப்பினும் இது வரை எந்தக் கவர்னரும் நியமிக்கப்படவில்லை. இந்தக் கால தாமதத்தைப் பார்க்கும் போது, ஊரில் பொதுவாகப் பேசிக் கொள்ளும் விஷயம் உண்மையோ என்ற ஐயப்பாடு எழுகிறது. அதாவது, சென்னை ராஜ்ய கவர்னருக்கு மேலிடத்தார் எந்தப் பிரமுகர் பெயரைக் குறிப்பிட்டாலும் நமது முதன் மந்திரி ''அவர் எனக்குச் சரியான நபராகத் தோன்றவில்லை'' என்று சொல்லி விடுகிறாராம். கவர்னர் நியமன விஷயத்தில் அந்த அந்த ராஜ்ய சர்க்கார் மந்திரி சபைகளை, மத்திய மந்திரி சபையார் உபசாரத்துக்கு ஒரு வார்த்தை கேட்பார்கள். மத்திய மந்திரி சபைக்கும் ராஜ்ய மந்திரி சபைக்கும் ஒரு சுமுகமான உறவு முறை நிலவுவதற்கு இப்படிக் கேட்டுக் கொண்டு ராஜ்ய கவர்னரை நியமிப்பது வழக்கம். ஆனாலும் இப்படி மத்திய மந்திரி சபை கேட்பதற்கும் ராஜ்ய மந்திரி சபை நிராகரிப்பதற்கும் ஒரு வரம்பு இருக்க வேண்டுமல்லவா! இப்பொழுது அந்த வரம்பு கடந்து போய் விட்டாற் போலவே தோன்றுகிறது.

கவர்னர் பதவி, கௌரவமும் அந்தஸ்தும் வாய்ந்த பதவி. கவர்னரின் கடமைகளும் தனி வகையானவை. இவைகளெல்லாம் கருதியே கவர்னர், மேலிடத்திலிருந்து நியமிக்கப்பட்டவராக இருக்க வேண்டும் என்ற சம்பிரதாயம் ஏற்படுத்தப் பட்டது. மந்திரி சபையே கவர்னரை நியமிப்பது என்று ஆகி விட்டால், கவர்னர் மந்திரி சபையின் தயவை எதிர்பார்க்க வேண்டியவராகி விடுவார். கவர்னர் மந்திரி சபையின் தயவையோ, மந்திரி சபை, கவர்னரின் தயவையோ எதிர்



## பூதேவியின் மடியில் பொற்குவியல்!

தென்னிந்தியாவிலிருந்து கிடைக்கும் சுரங்கச் செல்வங்களைப்பற்றி டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன் எழுதியுள்ள அருமையான கட்டுரை நவம்பர் 25-ந் தேதி 'கல்கி' இதழில் ஆரம்பமாகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். சுரங்கச் செல்வ ஆராய்ச்சியில் நிபுணரான டாக்டர் கிருஷ்ணனின் கட்டுரை தென்னிந்தியாவின் சுரங்கங்களுக்கு வாசக நேயர்களை அழைத்துச் சென்று அவர்கள் அக்காட்சிகளைக் கற்பனைக் கண்களால் பார்த்து மகிழ்வதற்கு உதவியாக இருக்கும். டாக்டர் கிருஷ்ணன் சென்னை பிரஸிடென்ஸி கலாசாலையில் பூதத்துவ ஆராய்ச்சியில் எம். ஏ. பட்டம் பெற்றவர். லண்டன் சர்வகலாசாலையிலும் பட்டம் பெற்றவர். அத்துறையில் பல உயர் பதவிகள் வகித்துள்ள டாக்டர் கிருஷ்ணன் தற்போது இந்திய சர்க்காரின் சுரங்கச் செல்வ ஆலோசகராகவும் விசேஷ அதிகாரியாகவும் இருந்து வருகிறார். பூதத்துவ ஆராய்ச்சியில் திளைத்துள்ள அவர் அதன் சம்பந்தமாகப் பல நூல்களும் பிரசுரங்களும் வெளியிட்டுள்ளார். அப்படிப்பட்ட பூதத்துவ ஆராய்ச்சி மேதையின் கட்டுரை பாரத நாட்டின் எதிர்கால சுபிட்சத்தில் அக்கறை கொண்ட சகலருக்கும் அரிய விருந்தாக இருக்கும் என்று நம்புகிறோம்.

# முடிவிலாப் புகழ் பெற்றாய்!


















பார்ப்பது உகந்ததல்ல. மந்திரி சபை, சட்ட சபைக்கும், கவர்னர் ராஷ்டிரபதிக்கும் மத்தியப் பிரதமருக்கும் அதாவது மத்திய மந்திரி சபைக்கும் பொறுப்பாளிகளாக இருக்க வேண்டும். இல்லையேல் கவர்னர் ஒரு தாசில் தார், அல்லது கலெக்டர்போல் ஆகி விடுவார். இதில் எல்லாருக்குமே நஷ்டம்.

கவர்னர் வேலை காலியாகும்போது, மற்றொரு கவர்னர் நியமிக்கப்படும் வரை ஒரு வாரம் இரண்டு வாரத்துக்கு, இடைக்கால கவர்னராக ஒருவரை நியமிக்க வேண்டியதாகிறது. நியாய மன்றங்களில் மேல் உத்தியோகங்களுக்கு ஆசைப்படாமல் வேலை செய்ய வேண்டிய நீதிபதிகள் இந்த இடைக்கால கவர்னர் வேலை பார்ப்பதற்கு ஆசைப்படுவதாகவும் முயற்சிகள் எடுப்பதாகவும் அறிகிறோம். இதுவும் அவ்வளவு நல்லதல்ல. பிரிட்டனில் நீதிபதியாகி விட்ட ஒருவர் வேறு எந்த உத்தியோகத்தையும் எதிர்பார்ப்பதில்லை. அவர்கள் சர்க்காரில் அதற்கு இடமும் கிடையாது. ஏன், நமது நாட்டில் கூட ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தேழாம் ஆண்டு அப்போது கவர்னர் ஜெனரலா யிருந்த மவுண்ட்பாட்டன் பிரபு லீவில் இங்கிலாந்து சென்றிருந்தபோது வங்கத்தில் கவர்னர் பதவி சில வாரங்கள் காலியாக இருந்தது. அப்போது இடைக்கால கவர்னராக ஸ்ரீ பி. எல். மித்தர்தான் நியமிக்கப் பட்டார். எந்த நீதிபதிக்கும் அந்த வேலை தரப்படவில்லை. சமீப காலத்தில் நீதிபதிகளுக்குப் புது உத்தியோகங்கள் கொடுத்து, அவர்கள் வேலையிலும் 'பிரமோஷன்' எதிர் பார்க்கலாம் என்று ஆசையை உண்டாக்கியிருக்கிறார்கள். இது நீதிபதிகளின் சுதந்திர உணர்ச்சிக்குப் பழுதுண்டாக்கும் என்பது நம்முடைய கருத்து.

# குமரி முனையில் காந்தி மண்டபம்

ராஜ்யச் சீரமைப்பு ஏற்பாட்டின்படி திருவாங்கூர் கொச்சி ராஜ்யத்திலிருந்து சில தாலூகாக்களைத் தமிழகத்துடன் சேர்த்துப் புதிய கன்யாகுமரி ஜில்லா உருவாகியுள்ளதை நேயர்கள் அறிவார்கள். புதிதாகச் சேர்ந்துள்ள பகுதிகளின் காரணமாகத் தமிழகம் விரிவாகப் பரந்து பெரிய ராஜ்யமாக மாறி விடவில்லையென்றாலும் பொருளாதார ரீதியாக நன்மையே அடைந்திருக்கிறது என்பதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். தமிழகத்துடன் புதிதாகச் சேர்ந்துள்ள பகுதிகளிலிருந்து நமக்கு அரிசியும், உப்பும், தோரியமும் கிடைக்கும் என்று அறிகிறோம். கேரளத்திலிருந்து ஒரு சிறு பகுதி தமிழகத்துடன் சேரும் போதே இத்தனை லாபங்கள் கண்ணுக்குத் தோன்றுகின்றன. தட்சிணப் பிரதேசம் அமைந்தால் அதன் பலன் எவ்வளவு பெரிதாயிருக்கும் என்பதை இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம்.

தமிழகத்தின் தெற்கு மூலைப் பகுதிகள் ஒன்று சேர்ந்து புதிய கன்யாகுமரி ஜில்லா உதயமாகியிருக்கிறது. முக்கடல் சூழ்ந்த தென் கோடி முனையில் குமரி அன்னை மோனத் தவம் புரியும் புனிதமான இடத்துக்கு 1937-ம் ஆண்டில் காந்தி மகாத்மா விஜயம் செய்தார். அந்த அபூர்வ சூழ்நிலையைக் கண்டு ஆனந்த பரவசமுற்ற காந்திஜி கூறியதைக் கேளுங்கள்:

"குமரி எல்லைக் கோடியில் கூடும் முக்கடலுக்கு எதிரில் இருந்தபடி இதை நான் எழுதுகிறேன். மூன்று கடல் நீரும் ஒன்று கூடும் இந்த இடம் உலகிலேயே இல்லாத ஒரு ஈடு இணையற்ற காட்சியைத் தருகிறது. காரணம், இங்கே கப்பல் துறைமுகம் இல்லை. குமரி அன்னையைப் போல் இங்கு சூழ்ந்துள்ள சமுத்திர ஜலமும் கன்னியாகவே இருக்கிறது."



1948ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 12ம் தேதியன்று இப்புனிதக் கன்யாகுமரிக் கடலில் காந்தி மகாத்மாவின் அஸ்தி கரைக்கப்பட்டது.

1954ம் ஆண்டு ஜூன் மாதம் 20ம்தேதியன்று ஆச்சாரியகிருபளானி இங்கே காந்தி மகாத்மாவின் ஞாபகார்த்தமாகக் கட்டப் பட்டுள்ள "காந்தி ஸ்மாரக்" என்னும் நினைவாலயத்துக்கு அஸ்திவாரக் கல் நாட்டினார்.

மூன்று லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள இந்த ஆலயத்தைத் தி. கொ. ராஜ்யத்தின் ஆலோசகர் ஸ்ரீ பி. எஸ். ராவ் கடந்த அக்டோபர் மாதம் 30-ம் தேதியன்று கோலாகலமாகத் திறந்துவைத்தார்;

# ஈடன் அக்கிரமம்

**ராஜாஜி**

உலகம் முழுதும் சுத்தத் தவறு என்று கண்டித்த பிறகு ஈடன் பிரபு தம்முடைய பெரிய அக்கிரமப் போரை நிறுத்தி விட்டார். அகம்பாவத்தையும் பொய்யையும் நீட்டிக் கொண்டே போவது தோல்வி யடைந்தவர்களுடைய வழக்கம். அந்த முறையில் இன்னும் சில பிரிட்டிஷ் அறிக்கைகள் வந்து கொண்டிருக்கின்றன. அதைப் பற்றிக் கவலையில்லை. பிரிட்டிஷ் பிரதமர் தம்முடைய உள்ளத்தைச் சோதித்துப் பார்த்தால் தோல்வியை நன்றாகக் காண்பார். அளவற்ற நஷ்டத்தை யடைந்த நாஸருடைய உள்ளத்தில் வெற்றி யுணர்ச்சியும், பிரிட்டிஷ் பிரதமர் உள்ளத்தில் படுதோல்வி யுணர்ச்சியும் இருந்து வருவதுபற்றி யாருக்கும் சந்தேகமில்லை. வீண் வேஷங்கள் யாதாயிருப்பினும் இது உண்மை.

பிரிட்டிஷார் யுத்தத்தை நிறுத்தியதற்குக் காரணம் என்ன? இதைப் பற்றிச் சிலர் மனத்தில் குழப்பம்.

இது வரையில் பிரிட்டிஷார் ஆரம்பித்த எந்த முயற்சியும் இந்த அளவில் பழிக்கப் பட்டதில்லை. உள் நாட்டில் தீவிர கண்டனங்கள், உலக சம்மேளனத்தில் ஏகோபித்த குற்றச்சாட்டு. இவ்விரண்டையும் சமாளித்துக் கொண்டு ஈடன் பிரபு அல்ல, நெப்போலியனாக இருந்தாலும் அலெக்ஸாண்டராக இருந்தாலும், ஒரு யுத்தத்தை நடத்த முடியாது. இதில் வேடிக்கை என்னவென்றால், 'நான் செய்தது சரி' என்று அவர் இன்னும் சொல்கிறார். அதற்கு அவருடைய சகாக்களும் வெட்கமின்றி ஒத்துப்பாடி வருகிறார்கள்.

சிலர் எண்ணுகிறார்கள், கடைசியாகப் புல்கானின் அனுப்பிய கடிதத்தைக் கண்டு பயந்து போய் யுத்தத்தை நிறுத்தி விட்டார் பிரிட்டிஷ் பிரதமர் என்று. இதை நான் ஒப்புக் கொள்ளவில்லை.

சத்தியம் எப்போதுமே வெல்லும் என்பதை மக்கள் ஒப்புக் கொள்ளா விட்டாலும் சில சமயங்களிலாவது வெல்லு மல்லவா? உலகம் முழுதும் ஏகோபித்துப் பழித்த ஒரு செயலை நிறுத்துவதற்கு வேறு காரணம் வேண்டியதில்லை. சத்தியத்தின் சக்தியை நாம் குறைத்து விட்டுப் புல்கானினுடைய கடிதத்துக்கு வெற்றிமாலை சூட்டவேண்டியதில்லை.

தம்மைப் பெருந் துணையாகக் கருதி வந்த எகிப்து மக்களுக்கு ஏதேனும் ஒன்று செய்ய வேண்டும் என்பதற்காகவும், ஓரளவு இருந்து வரும் நியாய உணர்ச்சியின் பயனாகவும் கடைசி அத்தியாயத்தில் இந்தக் கடிதத்தைப் புல்கானின் அனுப்பினார். "எகிப்தின் பேரில், அதாவது பலவீனமான ஒரு சிறு ராஜ்யத்தின் பேரில், யுத்த தளவாடங்கள் மிகப் பெரிய அளவில் வைத்துக் கொண்டு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் படையெடுத்ததே பெருங் குற்றமாகும்; அநீதியாகும். நாம் அணுகுண்டுகள் தொடுத்து ஆகாயத்தில் தானே இயங்கும் பாணமாக இங்கிலாந்தின் பேரில் எறிந்தால் என்ன நினைப்பீர்கள்? அதைப் போல அல்லவா எகிப்தின்பேரில் நீங்கள் நடத்தும் தாக்குதல்? நான் சும்மா இருக்க மாட்டேன். அரபி நாடுகளுக்கு உதவி செய்துதான் தீருவேன்" என்று புல்கானின் எழுதினார்.

இதை உலக யுத்தம் தொடங்குவதற்கு ஒரு அறிக்கையாகச் சிலர் பொருள்படுத்திக் கொண்டார்கள். என் அபிப்பிராயத்தில் இது சரியல்ல. அது அமெரிக்கத் தேர்தலுக்குப் பெரும் உதவியாகப் பயன்பட்டிருக்கலாம். அவ்வளவே யொழிய வேறில்லை. யுத்த பீதியை உண்டாக்கிக் கொண்டு, ராணுவ வீரராகிய ஐஸன்ஹோவருக்கு வோட்டுகள் சம்பாதிக்கப் பட்டன. உலக யுத்தம் ஆரம்பிக்கும் எண்ணம் எந்தக் கட்சிக்கும் இல்லை. அணுகுண்டு பிரயோகத்தில் லாபமில்லை—பிரயோகிப்பவர்களுக்கே அபாயம்—என்பதை ருஷ்யாவும் அறியும்; அமெரிக்காவும் அறியும்.

ஒரு சிறிய அந்நிய ராஜ்யத்தின் லாபத்துக்காகவும் அதனுடன் ஏற்பட்டிருக்கும் நட்பின் காரணமாகவும் எந்தக் காலத்திலும் யாரும் ஹைட்ரஜன் குண்டைப் பிரயோகிக்க மாட்டார்கள். பிரயோகிப்பதற்கு இடம் தரும் காரியங்களையும் செய்ய மாட்டார்கள். அணுகுண்டு பயத்தின் பயனாக ஏற்பட்ட நிலைமை இது. சிறு ராஜ்யங்களுக்கு வல்லரசுகள் இனி துணை வரமாட்டா.

பிரிட்டிஷார் யுத்தம் நிறுத்தியது ருஷ்யாவின் பயத்தினால் அல்ல. பெரும் பழியைத் தாங்க முடியாததாலும், அமெரிக்காவின் ஒத்துழைப்பும் அங்கீகாரமும் மறுக்கப்பட்டதாலும், பல நண்பர்களுடைய நட்பு சேதப்படும் என்பதைக் கண்டபடியாலும், பிரிட்டனிலேயே ஆதரவு இல்லாமல் எதிர்ப்பு வளர்ந்து விட்டபடியினாலும், பின்னால் தம் அதர்ம நோக்கத்தைச் சாமர்த்தியமாகச் சாதித்துக் கொள்ளலாம் என்கிற எண்ணத்தினாலும் அக்கிரமப் போர் நிறுத்தப்பட்டது.

உலக சம்மேளனத்துக் காரியதரிசி ஹாமர்ஷோல்டும், அமெரிக்க அரசாங்கமும் உறுதியோடு இனி செய்ய வேண்டியதைச் செய்தால் பிரிட்டனின் அக்கிரம எண்ணம் நிறைவேறாது. அமெரிக்காவின் மனம் மாறிவிட்டால் அக்கிரமம் நிறைவேறினாலும் நிறைவேறலாம். இந்த விஷயத்தில் இந்தியாவுக்கும் மற்ற நேச நாடுகளுக்கும் பெரிய பொறுப்பு இருந்து வருகிறது.

நம்முடைய பிரதமர் நேரு அவர்கள் தம்முடைய 68வது ஆண்டு விழாவில் பிரிட்டிஷ் அக்கிரமத்துக்கு இடந்தராமல் நியாயத்துக்கு வெற்றி சம்பாதிப்பாராக! நண்பனுக்குச் சகாயம் செய்து காப்பாற்றுவதே புகழ் தரும் வெற்றி யாகும்!

என்னுடைய ஆங்கிலேய நண்பர்கள் எனக்கு எழுதி வரும் கடிதங்களைப் பார்த்தால் அவர்கள் எவ்வளவு அவமானம் அடைந்திருக்கிறார்கள் என்பதையும், அவர்களுடைய உணர்ச்சி வேகத்தையும் கண்டு பரிதபிக்கிறேன். பொதுத் தேர்தல் சீக்கிரம் நடந்தால் இங்கிலாந்தில் அரசாட்சி மாறும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் உடனே பிரிட்டனின் பெயருக்கு ஏற்பட்டிருக்கும் களங்கம் ஓரளவு நீங்கி, பழியை மக்கள் மறக்க வேண்டுமானால் ஈடன் தம்முடைய பதவியை உடனே ராஜிநாமாச் செய்யும்படி அவருடைய டோரி நண்பர்கள் வற்புறுத்த வேண்டும். அது அந்த டோரிக் கட்சிக்கும் லாபத்தைத் தரும்.

# 'அனஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டுபண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
**'அனஸின்'**
வேண்டுமென்றே
கேளுங்கள்



# வாழ்க பல்லாண்டு



1. இரு பெருந் தலைவர்கள் 2. ஸ்ரீமான்கள் டி. டி. கே., கே. வி. கே. கே சேஷியாவான் முத லிய சென்னைப் பிரமுகர்களுடன் நேருஜி. 3. நேருஜியுடன் தமது தூதர் ஸ்ரீ வி. கே. கே. மேனன். 4. ஸ்ரீமதி எம் எஸ்., சரோஜினி தேவி இவர்களுடன் நேருஜி.



1. சமாதானப் பிரியர் நேரு, சமாதானப் புறாவைப் பறக்க விடுகிறார். 2. 'பில்லியர்டு' விளையாடுகிறார். 3. குதிரை சவாரி செய்கிறார். 4. முஸ்லிம் மதகுரு நேருவுக்குப் பரிவட்டம் சுற்றி மாலையணிவித்துக் கௌரவிக்கிறார். 5. ஒட்டக சவாரிக்கும் தயார்தான்.





6. இளம் கலைஞர்களிடையில் இந்தியப் பிரதமர். 7. பாரத சிங்கம் புலிக்குட்டியுடன் விளையாடும் ஒரு காட்சி. அருகில் இருப்பவர்தான் ஸ்ரீமதி ருக்மிணி தேவி அருண்டேல். 8. தில்லியில் நடைபெற்ற யுனெஸ்கோ மகாநாட்டில் நேரு. 9. 10. செங்கோல் செலுத்தும் நேரு கைக்கோல் சுற்றி விளையாடவும், கிரிக்கெட் விளையாடவும் நேரம் எப்படிக் கண்டு பிடித்தார்?

1. ருஷ்யாவில் சோவியத் தலைவர்களுடன். 2. கப்பற்படை வீரர்களுடன் நேரு குதூகலமாக அளவளாவுகிறார் 3. நேருஜிக்குக் குழந்தைகள் என்றால் உயிர். குழந்தைகளுடன் இருப்பதையே எப்பொழுதும் விரும்புவார். தமது ஜயந்தியையே குழந்தைகள் தினமாகக் கொண்டாடும்படி வேண்டுகோள் விட்டார். அவர் குழந்தைகளுடன் இருக்கும் சில காட்சிகளை இங்கே வெளியிட்டிருக்கிறோம். டில்லி ரேடியோ நிலையத்தில் குழந்தைகள் நிகழ்ச்சியில் 'நேரு மாமா'. 4. குழந்தைகள் நாடக நிகழ்ச்சியில் குழந்தைகளோடு குழந்தையாக நிற்கிறார். 5, 6 வெளிநாட்டுக் குழந்தைகளும் உள்நாட்டுக் குழந்தைகளும் பூச்செண்டுகளையும் மலர் மாலைகளையும் அளித்து ஒரேமாதிரி அன்பு செலுத்துகிறார்கள்



நவம்பர் 16௳ முதல்
சென்னை
மற்றும் தமிழ்நாடெங்கும்



ஆனந்தாவின்

# மறுமலர்ச்சி

ஜீ. வரலக்ஷ்மி. E.V. சரோஜா. ஸ்ரீராம்
நம்பியார்...... சகாதேவன்

FOR MADRAS CITY, N. ARCOT, S. ARCOT & CHINGLEPUT. KAMALA PICTURES MADRAS.

WORLD RIGHTS: RAJSHRI PICTURES (PRIVATE) LTD., MADRAS.2.

# மகான் அளித்த மகான்

**ஜனாதிபதி ராஜன்பாபு**

ஜவாஹர்லால் நேருவைப் பற்றிச் சொல்வது என்றால் சென்ற முப்பது வருஷத்திய சரித்திரத்தையே சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால் ஆயிரம் பக்கங்கள் கொண்ட நல்ல புத்தகமாகும். அவரைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வது என்பது மிகவும் கடினமான காரியம். எனினும் ஜவாஹர்லால் நேருவைப் பற்றி நினைக்கும் போது அவர் ஒரு 'மகான் அளித்த மகான்' என்ற நினைவே மேலோங்கி நிற்கிறது.

அந்நாட்களில் பண்டித மோதிலால் நேரு பெரிய வக்கீல் என்றும் பெரிய தேசபக்தர் என்றும் பெயர் பெற்றிருந்தார். காந்தி மகான் தலைமையில் தேசத்தில் பெரும் புரட்சி எழுந்தபோது, மோதிலால் தமது சொத்து, சுதந்திரம், வீடு வாசல் யாவும் தேசத்துக்காகத் தியாகம் செய்து இன்னும் பெரும் புகழ் அடைந்து விட்டார். அதன் பயனாக அவர் இருந்தவரை அவரே காங்கிரஸின் மிகப் பெருந் தலைவராக விளங்கி வந்தார். இவை யெல்லாவற்றையும் விட அவருக்குப் பெரும் புகழ் தருவது தம்மையும் விட மேலான ஒரு புதல்வனைப் பாரத தேசத்துக்கு ஈந்ததுதான்.

தம் மகன் தம்மைவிடக் கீர்த்திவானாக விளங்குவான் என்று மோதிலால் நேரு நன்கு உணர்ந்திருந்தார்.

லாகூர் காங்கிரஸின் தலைவராக ஜவாஹர்லால் நேரு தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார். அதற்கு முந்தைய காங்கிரஸ் மகாநாட்டின் தலைவர் மோதிலால் நேரு. பழைய தலைவர் புதிய தலைவரிடம் தலைமைப் பொறுப்பை ஒப்படைக்கும் சம்பிரதாயச் சடங்கு ஒன்று உண்டு. அந்தச் சடங்கின் போது மோதிலால் நேரு ஒரு பாரசீகப் பழமொழியைக் கூறி ஜவாஹரிடம் பதவியை ஒப்படைத்தார். அந்தப் பாரசீகப் பழமொழியின் கருத்து இதுதான்: "தந்தை செய்யத் தவறியதைத் தனயன் செய்து முடிப்பானாக!" தந்தையின் வாக்குப் பலித்தது. தனயனின் தலைமையில் பாரதம் சுதந்திர நாடாக மலர்ந்தது.

சுதந்திரப் போராட்டக் காலத்தில் நேரு முக்கியமான பாகம் வகித்தார். கஷ்டமும் சிக்கலும் நேர்ந்த சமய சந்தர்ப்பங்களில் இரத்தோடும் துணிச்சலோடும் தேசத்துக்கு வழிகாட்டி யிருக்கிறார். இதன் பயனாக நாம் சுதந்திரம் பெற்றோம். சுதந்திர பாரதத்துக்கு ஜவாஹர்லால் நேருவையே முதல் பிரதம மந்திரிப் பதவியில் ஏற்றி வைத்தோம்.

பாரதம் சுதந்திரம் அடைந்த புதிதில் எத்தனை தொல்லைகள், கஷ்டங்கள் நேர்ந்தன என்பது உங்களுக்குத் தெரியும். அவற்றை எவ்வளவு தைரியமாகச் சமாளித்து வந்திருக்கிறார் என்பது, நீங்களே அறிவீர்கள். சர்க்காரில் அவர் அறியாத இலாக்கா கிடையாது. அவருடன் கலந்து ஆலோசிக்காமல் எந்த முடிவும் செய்ததில்லை. இப்படி ஒவ்வொரு துறையிலும் அவர் சிரத்தை எடுத்து வேலை செய்வதைப் பார்க்கும்போது பெரு வியப்பாக இருக்கிறது. நல்லவேளையாகக் கடவுள் அவருக்கு நல்ல தேக ஆரோக்கியம் அளித்திருக்கிறார். இந்த வயதில் கூட இருபத்தைந்து வயது இளைஞனைப் போல் சுறுசுறுப்பாக வேலை செய்கிறார்.

உலகப் பெருந் தலைவர்களுடன் எப்படிப் பழகுவாரோ அப்படியே பொது மக்களிடையே பழகுவதைப் பார்த்திருப்பீர்கள். அவரது பேச்சும் எழுத்தும் அவர் என்ன நினைக்கிறார், என்ன கனவு காண்கிறார் என்பதை அப்படியே எடுத்துக் காட்டுகின்றன.

அவர் செய்துள்ள தொண்டுகளை எடுத்துச் சொல்லி முடியுமா! இவை யாவும் உங்களுக்கே தெரியும். இந்த யுகத்தின் சரித்திரத்தை எழுதும்போது, ஜவாஹர்லால் நேருவுக்கு முதல் ஸ்தானத்தை அளிக்க வேண்டியிருக்கும் என்று நினைக்கிறேன். ஒருகால் அவர் பெயர் இரண்டாவது ஸ்தானத்தை அடையலாம். ஆனால் முதல் ஸ்தானத்தில் மகாத்மா காந்தி யிருப்பார். ஆம்! காந்தி மகானுக்கு அடுத்தாற் போல் உலகத்துக்கு மகத்தான தொண்டு புரிந்தவர் நேருவே! இதை விட உயர்ந்த பெருமைப்படத் தக்க பதவி வேறு என்ன இருக்க முடியும்?

காந்திமகாத்மா தமக்கு அடுத்தாற்போல் நேரு என்று 'வாரிசு உரிமை' வழங்கியது அர்த்தமில்லாமல் இல்லை. மகாத்மாஜி நேருவின் பெருமையை உணர்ந்திருந்தார். தான் தொடங்கிய காரியம் நிறைவேறாமல் இருந்



பிரதமருக்கு ஜனாதிபதியின் வாழ்த்துக்கள்.

தால், அதை நிறைவேற்றும் சக்தி நேருவுக்குத்தான் உண்டு என்பதை உணர்ந்திருந்தார்.

நேரு, பெரிய ராஜதந்திரி என்ற பெயரை எடுத்து விட்டார். அகில உலக அரசியல் கேந்திரத்தில் பாரதத்தின் பெருமை மிக உயர்ந்து விட்டது. இந்த நிலைக்கு வர, வேறொரு நாடாக இருந்தால் பற்பல ஆண்டுகள் பாடுபட்டிருக்க வேண்டும். இந்தப் புகழ், சந்தர்ப்பவாதியாக இருந்தோ, மக்களுக்கு எது பிடிக்கிறதோ அதையே சொல்லியோ அடைந்ததல்ல. இந்த நாடு கடைப்பிடிக்க வேண்டிய நேரிய வழி இது என்று அவர் தமது



மனத்தில் கற்பனைசெய்து கண்ட வழியாகும். அந்த வழியே மிகச் சிறந்த வழியாகும்! அவர் நமக்கு வழி காட்டக் கிடைத்திருப்பது நமது பாக்கியமாகும்.

அவர் நீண்ட ஆயுளையும் ஆரோக்கிய வாழ்வையும் பெற வேண்டும் என்று பிரார்த்திப்போமாக. சுதந்திரப் போரில் அடைந்த வெற்றியைப் போலவே அவர் எடுத்த காரியம் யாவிலும் வெற்றி அடையட்டும் என்று ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக!

நமது சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசாவும் நேருஜியும் மிக நெருங்கிய நண்பர்கள் என்பதைப் படமே விளக்குகிறது.

# தலைநகரிலே அலை ஓசை

சமுத்திரக் கரைக்குப் பல நூறு மைல்களுக்கு அப்பால் அமைந்திருக்கும் தில்லியில் அலை ஓசை கேட்டதென்றால் அது சற்று வியப்புத் தருவதாயிருக்கலாம்.

இந்திய சர்க்கார் சாகித்ய அகாடமி என்று ஒரு ஸ்தாபனத்தை அமைத்து அதன் மூலம் இந்திய மொழிகளில் உள்ள இலக்கியங்களை வளர்த்து வருகின்றனர். மேற்படி ஸ்தாபனத்தின் பரிசளிப்பு விழா சென்ற அருந் தேதி புது தில்லியில் நடைபெற்றது. இந்த விழாவுக்கு உப ராஷ்டிரபதி தலைமை வகித்தார். தமிழ் மொழிக்காகப் பேராசிரியர் கல்கியின் ' அலை ஓசை 'க்குப் பரிசு வழங்கப்பட்டது.

முதலில் பரிசுகளை ராஷ்டிரபதி ராஜேந்திரப் பிரசாத் வழங்குவதாக இருந்தது. பின்னர் அசௌகரியம் காரணமாக அவர் வரவில்லை. ஆனால் ஒரு ராஜேந்திரர் வராத குறையை மற்றொரு ராஜேந்திரர் வந்து பூர்த்தி செய்தார்! அலை ஓசை ஆசிரியர் அமரர் கல்கியின் புத்திரர் திரு ராஜேந்திரன் தில்லிக்கு நேரில் வந்திருந்து உப ஜனாதிபதியிடம் பரிசைப் பெற்றுக் கொண்டார். (இந்தக் காட்சியைப் படத்தில் காணலாம்.)

ஒரு சின்ன விஷயம்; பரிசுகளில் முக்கால் வாசி, வங்காளியர்கள் கொண்டுபோனார்கள். அவர்கள் பாஷாபிமானமும், தொழில் ஊக்கமும், நாம் பின்பற்ற வேண்டிய அம்சங்கள்.

துண்டுப் பிரசுரம் முதல், அட்டை போடுவது வரை எல்லாவற்றுக்கும் பரிசுகள் வழங்கிய பின் கனம் ராதாகிருஷ்ணன் அவர்கள் அழகான விரிவுரை ஒன்று நிகழ்த்தினார்:

'' நம்முடைய சொந்த ஆத்மீக பலத்தைப் பெருக்குவது மிகவும் அவசியம். வெளி ஸ்தாபனங்களை நம்பிப் பயனில்லை. இக் கைங்கரியத்துக்கு எழுத்தாளர்களை விடச் சிறந்த ஊழியர்கள் வேறு யாரும் இருக்க முடியாது.''



தமிழ் நாட்டில், அமரர் கல்கி மேற்படி வாக்கியங்களின் உண்மையைத் தம் வாழ்நாளில் எவ்வளவு தூரம் நிதர்சனமாக்கினார் என்பதை நினைத்தபோது உள்ளம் பூரித்தது. பேராசிரியர் கல்கி அவர்கள் ஏற்றிய விளக்கு நந்தா விளக்காக விளங்க முருகன் அருளட்டும். — கப்புடு




உழைப்பிலும், உறுதியிலும் பெயர் பெற்றதும், கொடுத்த விலைக்கு பூரண மதிப்புடையதுமான

# ராபிட் சைக்கிள்களை

உபயோகியுங்கள்



எல்லா கலர்களிலும் கிடைக்கும்

*தயாரிப்பவர்கள் :*

**ராபிட் இண்டஸ்ட்ரீஸ்**
ராபிட் நகர்
கோவூர் போஸ்ட், சென்னைக்குச் சமீபம்

எல்லா சைக்கிள் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

மேற்கண்டவர்களிடமும் கிடைக்கும்

**ராஜா சைக்கிள் கம்பெனி**
8, பிராட்வே :: சென்னை-1
தபால் பெட்டி 1351
டெலிபோன்: 3273 தந்தி: 'SADDLE'



சலவை செய்யுங்கள்
பிரகாசமாக ஆடைகளை

## கோத்ரெஜ் சலவை சோப்புத் தூள்கள்



1 பவுண்டு, 3 பவுண்டு பெட்டிகள்.

| மிகக் குறைவான தண்ணீர் பசை உள்ளது. | விலை மலிவு |
| --- | --- |
| சோடா கிடையாது | துரித வேலை சிறந்தது |

சிறந்த சோப்புகளைத் தயாரிக்கிறார்கள் ஸ்நானத்திற்கும் துவைப்பதற்கும் முக க்ஷவரத்திற்கும் மற்றும் சிங்காரித்துக் கொள்வதற்கும்.

**100% இந்திய**
நிர்வாகம் மூலதனம்



இந்தியாவில் பெரும் அளவில்

**சீட்டுக் கட்டுகள்**

தயாரிப்பவர்கள்

*

எல்லோரும் வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு பற்பல ரகங்களில் அநேகவித கவர்ச்சிகரமான அழகிய டிஸைன்களில் கிடைக்கும்

மாதிரி வேண்டுவோர் எழுதவும்

**Popular Fine Litho Works, Suryoday Mills Compound, Tardeo, Bombay-7**

## 1856 - நூறு ஆண்டுகள் சேவை - 1956

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1956 நவம்பர் 27 | 1956 நவம்பர் 28 |

பிரயாணத்துக்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளையும், "பார்த் வசதியற்ற டிக்கட்டுகளையும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜுலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பார்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புளோயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும் சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றிப் பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

# குழந்தைகளும் சினிமாவும்

ஸ்ரீமதி இந்திரா காந்தி

அடிக்கடி மாதர் சங்கங்களிலிருந்தும் மற்றச் சமூக சீர்திருத்தப் பணியில் ஈடுபட்டுள்ள சங்கங்களிலிருந்தும் புகார்கள் வருகின்றன. "சிறுவர்கள் இன்றையச் சினிமாக்களைப் பார்த்துக் கெட்டுப் போகிறார்கள்" என்று சொல்லுகிறார்கள். குழந்தைகளைச் சினிமா பார்க்க விடாமல் வேறு விஷயங்களில் ஈடுபடுத்துவது எப்படி என்று சர்ச்சை செய்கிறார்கள். சினிமா தணிக்கை விதிகள் இன்னும் கடுமையாக்கப் படவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றுகிறார்கள். இது சம்பந்தமாகப் பிரதம மந்திரியிடம் தூது கோஷ்டியாக வருகிறார்கள். இவ்வளவு செய்தும் ஒரு பிரயோசனமும் இல்லாமல்தான் இருக்கிறது. சினிமாவுக்குப் போகிறவர்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டுதான் இருக்கிறது. இதைப் பார்க்கும் போது இவர்களுக்கெல்லாம் குழந்தையின் மனோபாவம் தெரியவில்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது.

"இதைப் பார்க்காதே!" என்று சொல்வதை விட்டு "இதைப் பார்!" என்று சொல்லக்கூடிய நிலை ஏற்பட்டால்தான் குழந்தைகள் காப்பாற்றப்படுவார்கள். பெரியவர்கள் பார்க்கும் மட்டமான படங்களுக்குச் சிறியவர்கள் போகாமல் இருப்பார்கள். ஆகவே இப் பிரச்னையைத் தீர்க்க ஆக்க வகையில் பாடுபட வேண்டும். இதைப் பலரும் உணர்ந்து வருகிறார்கள்.

இன்றைய உலகில், இன்றைய வாழ்வில் சினிமா ஒரு நிரந்தரமான இடம் பெற்றுவிட்டது. சினிமா பரவாத தேசம் கிடையாது. சினிமா பார்க்காதவர்கள் கிடையாது. சிறியவர்களும் பெரியவர்களும் மிகுந்த ஆர்வத்தோடு பார்க்கிறார்கள். ஆகவே சினிமாவைக் கண்டிப்பதை விட்டு, அறிவு புகட்டும் சாதனமாக அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

இந்தியாவில் சென்ற சில வருஷங்களாக வரலாற்றுப் படங்கள் (டாக்குமெண்டரி படங்கள்) நல்ல முறையில் எடுத்து வருகிறார்கள். அதன் தரம் மிக உயர்ந்திருக்கிறது. அவை பயனுள்ளவைதான் என்றாலும் அவற்றையே எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. குழந்தைகள் சந்தோஷமும் மகிழ்ச்சியும் பெறப் பெரியவர்களுக்கான படத்துக்குத் தான் போக வேண்டியிருக்கிறது. இதனால்தான் குழந்தைகளின் ரசிகத் தன்மை உயர்வதற்குப் பதிலாகக் கெட்டுப் போகிறது!

பெரியவர்களுக்காக எடுக்கும் படத்தைக் குழந்தைகள் பார்த்தால் என்ன புரியும்? ஒன்றும் புரியாது. இப்படி ஒன்றும் புரியாமலே பார்த்துப் பார்த்துக் குழந்தைகளின் மூளை சிந்திக்கும் திறனை இழந்து மழுங்கி விடுகிறது. மழுங்கிய மூளையுடன் வளரும் குழந்தைகளின் அறிவு பெரியவனான பிறகு பிரகாசிப்பதில்லை. அதனால்தான் நமது நாட்டில் சிந்தனையைத் தூண்டாத சினிமாப் படங்களே பொதுஜன ரஞ்சகமான படங்களாக அமைந்து விடுகின்றன.

குழந்தைப் படம் என்றால், படத்தைப் பார்க்கும்போது குழந்தைகள் அனுபவிக்கவும் வேண்டும்; தங்களையறியாமலே பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும் வாய்ப்பிருக்க வேண்டும். எல்லாவற்றையும் விட எது நல்ல படம், எது பார்க்கத் தகாத படம் என்று பாகுபாடு செய்து உணரக்கூடிய அளவுக்கு அவர்கள் தார்மீக உணர்ச்சியை வளர்க்கக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட படம் எப்படி எடுப்பது என்பதுதான் கேள்வி!

மேல்நாடுகளில் பொதுமக்களின் ரசிக உணர்ச்சியை உயர்த்துவதற்கென்றே சங்கங்களும் இயக்கங்களும் நடைபெறுகின்றன.

நான் சென்ற வருஷம் இங்கிலாந்துக்குப் போயிருந்தேன். அப்போது பிரிட்டிஷ் சினிமாக் கழகத்துக்கும் போயிருந்தேன். இந்தக் கழகம் 1933–ல் ஆரம்பிக்கப்பட்டது. இக் கழகத்தின் பெரிய சேவை, படத் தயாரிப்பாளர்களையும் கல்வித் துறை நிபுணர்களையும் இணைத்ததுதான். இவ்விருதரப்பினரின் கூட்டுறவால் இன்று இங்கிலாந்தில் குழந்தைப் படங்களின் தரம் மிக உயர்ந்திருக்கிறது.

மேலும் இக் கழகம் இரண்டு முக்கியமான பணிகளை மேற்கொண்டிருக்கிறது. ஒன்று, உலகிலுள்ள மிகச் சிறந்த படங்களைச் சேகரிப்பது. மற்றொன்று, நல்ல படங்களைத் திரையிட்டு, அவற்றின் தராதரத்தை மக்களையே சர்ச்சை செய்ய வைத்து அவர்களுடைய ரசிகத்தன்மையை உயர்த்துவது.

இத்தனை காலம் இவ்வளவு நல்ல வேலை செய்தும் ஒரு பயனும் ஏற்படவில்லை என்று இந்தக் கழகத்தில் முக்கிய அங்கம் வகிக்கும் மிஸ் மேரிபீல்ட் என்ற அம்மையார் துணிந்து சொன்னார்: "வயது வந்த பெரியவர்களுக்கு எவ்வளவுதான் நல்ல படங்களைப் போட்டுக் காண்பித்தாலும், கலையின் நுட்பங்களை விளக்கினாலும் அவர்களது ரசிகத்தன்மை உயருவதில்லை. எனவே, சினிமா ரசிகர்களின் ரசிகத்தன்மையை உயர்த்த வேண்டுமென்றால் பெரியவர்களை விட்டு விட்டுச் சிறுவர்களுக்கு நல்ல படங்களைக் காண்பிக்கவேண்டும். அதைத் தவிர வேறு வழியில்லை" என்றார்.

ருஷ்யாதான் குழந்தை உலகம் வேறு, பெரியவர்கள் உலகம் வேறு என்று முதன் முதலில் கண்டது. அவர்கள்தான் 1933–ம்

வருஷத்திலேயே குழந்தைகளுக்கு என்று பிரத்தியேகமாகப் படங்களை முதன் முதலில் தயாரிக்க ஆரம்பித்தனர். அது இன்று வரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

நான் ருஷ்யாவுக்குச் சென்றிருந்த போது குழந்தைப் படம் எடுக்கும் ஸ்டுடியோவுக்குச் சென்றேன். அங்கே படப் பிடிப்பு வேலை நடந்து கொண்டிருந்தது. சின்னஞ்சிறு குழந்தைகள் நடிப்பதைப் பார்த்தேன். இந்தக் குழந்தை நடிகர்கள் நடிகைகள் விஷயத்தில் ருஷ்யர்கள்தான் எவ்வளவு சிரத்தை காண்பிக்கிறார்கள்! இப்படிச் சினிமாவில் நடிக்கும் குழந்தைகள் படிப்பு விஷயங்களில் மற்றக் குழந்தைகளைவிடச் சிறந்து விளங்குகிறார்கள் என்பதையறிந்தபோது என் வியப்பு இன்னும் அதிகமாகி விட்டது.

குழந்தைப் படம் விஷயத்தில் ருஷ்யர்களுக்கு அடுத்தாற் போல் மிகுந்த சிரத்தையோடு படம் எடுப்பவர்கள் பிரிட்டிஷார்தான். அவர்கள் 1944 லிருந்து குழந்தைப் படம் எடுத்து வருகிறார்கள். பிரிட்டனில் இத்துறையில் தீவிரமாக வேலை செய்தவர் ஆர்தர் ராங்க் என்ற பிரபல பட உற்பத்தியாளர்தான்.

இதனிடையில் மற்ற நாடுகளில் கார்ட்டூன் படங்கள் எடுப்பதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இப்பொழுது செக்கோஸ்லாவேகியா, சீனா ஆகிய நாடுகளும் குழந்தைப் படம் எடுப்பதில் தீவிரமாக முனைந்து வேலை செய்கின்றன.

** ** **

லண்டன் நகரத்தில் ஒவ்வொரு தெருவிலும் குழந்தைகளுக்கான சினிமாத் தியேட்டர் இருக்கிறது. அங்கு சனிக்கிழமை பள்ளி விடுமுறை நாள். அன்று குழந்தைப் படங்கள்தான் தியேட்டர்களில் காலை நேரக் காட்சியாகக்காட்டப்படுகின்றன. மிஸ் மேரிபீல்ட் என்னை செல்ஸி நகரத்தில் ஒரு காலைக் காட்சிக்கு அழைத்துச் சென்றார். அங்கு ஆயிரக் கணக்கான குழந்தைகள் சினிமா படம் பார்க்க வந்திருந்தனர். அவர்கள் மிகவும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் இருந்தனர். இத்தகைய அழகிய காட்சியை இதற்கு முன் நான் எங்கேயும் கண்டதில்லை.

இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் காலைக்காட்சிகளுக்கு ஏற்பாடு செய்து காட்டத்தான் செய்கிறார்கள். எதற்கு? பணம் திரட்டுவதற்குத்தான். தப்பித்தவறிக் குழந்தைகளுக்கென ஏற்பட்ட படங்களைக் காண்பிப்பதாகச் சொன்னாலும், அந்தக் காட்சியில், குழந்தை மனத்துக்குச் சற்றும் பொருந்தாத பெரியவர்களுக்கென வரப் போகும் படங்களின் 'ட்ரெய்லர்' படங்களையும் காண்பித்துக் கெடுத்து விடுவார்கள்.

இப்போது குழந்தைகளுக்கு உகந்த படங்களை எடுக்கும் பொறுப்பைப் பாரத சர்க்காரே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ''சிறுவர் சினிமா சங்கம்'' என்று ஒரு ஸ்தாபனத்தைச் சில மாதங்களுக்கு முன் நிறுவினார்கள். இச் சங்கம் ''நான்கு நண்பர்கள்'' என்று ஒரு படத்தை எடுத்திருக்கிறது. இன்னொரு படம் எடுக்கப் போகிறது. இதைத் தவிர ருஷ்யாவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் பல படங்களை வாங்கியிருக்கிறார்கள். அவற்றுக்கு ஹிந்தியில் விளக்கம் கொடுத்துக் காண்பிக்கப் போகிறார்கள்.

இந்தச் சங்கத்துக்கு ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் பல. முதலில் பொதுஜன ஆதரவோ, சிரத்தையோ இதற்குக் கிடையாது. பெரியவர்களுக்கான படத்தைப் பார்த்துக் குழந்தைகள் கெட்டுப் போகிறார்கள் என்று கூப்பாடு போடுகிறவர்கள், குழந்தைகளுக்காக ஏதாகிலும் உருப்படியாகச் செய்யலாம் என்றால் முன்வர மறுக்கிறார்கள். சினிமாப் படம் எடுக்கும் முதலாளிகளோ 'குழந்தைப் படம் எடுத்தால் நஷ்டம் வரும், நாங்கள் சுலபமாகப் பணம் திரட்டப் பார்ப்போமே தவிர, தேச நலனுக்காகக் காரியம் செய்ய மாட்டோம்' என்கிறார்கள். படத்தை வெள்ளித்திரையில் போட்டுக் காட்டும் தியேட்டர் முதலாளிகளும், விநியோகஸ்தர்களும் 'குழந்தைப் படம் போட்டால் யார் பார்க்க வருவார்கள்? வருவல் குறைந்து விடுமே' என்று கூறுகிறார்கள். திரைப்படம் எடுக்கத் தகுந்த கதைகளும் இல்லை.

பழைய கொள்கைகள், பழக்க வழக்கங்கள் இவற்றைமாற்றுவது என்றால் எவ்வளவு கஷ்ட

சில ஆண்டுகளுக்கு முன் தமிழ் எழுத்தாளர்கள் சிலர் தில்லிக்குப்போயிருந்தபோது நேருஜி, அவர்களை வரவேற்று உபசரித்தார். அப்போது பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள் தமிழ் இலக்கியத்தின் சிறப்பை நேருஜிக்கு ஆங்கிலத்தில் எடுத்துச் சொன்னார்.







**மத்தியப்பிரதேசத்தில் கைராகட் என்ற ஊரில் ''இந்திரா கலா சங்கீத வித்தியாலய''த்தை ஸ்ரீமதி இந்திரா காந்தி அக்டோபர் மாதம் 14ம் தேதி சங்கீத வாத்தியங்களுக்குப் பூஜை போட்டுத் திறந்து வைத்தார். இக் கலைக் கல்லூரிக்குக் கைராகட் ராஜாவும், ராணியும் தமது பெரிய அரண்மனையையே வழங்கி யிருக்கிறார்கள். ஸ்ரீமதி இந்திரா காந்தி பூஜை செய்வதையும் பக்கத்தில் கலைக் கல்லூரியாக மாறிவிட்ட அரண்மனையையும் பார்க்கலாம்.**

மாக இருக்கிறது தெரியுமா? சிறுவர்களுக்கான படங்கள் எடுப்பதற்கு உற்சாகமும் உணர்ச்சியும் புதுக் கருத்துக்களும் கொண்ட இளைஞர்கள் தேவை. அவர்களுக்கே குழந்தைகளுக்கு எத்தகைய விஷயங்களை எப்படிச் சொல்ல வேண்டும் என்று தெரிந்திருக்க வேண்டும். வீர தீரச் செயல்கள், ஹாஸ்யங்கள் நிரம்பிய கதைகள் எழுதக் கூடிய புது விதமானஎழுத்தாளர்கள் தேவை. கொடுமை, குரூரம், அக்கிரமம் முதலியவை அறவே நீக்கப் பட்ட கதைகளாக இருக்கவேண்டும். விறு விறுப்பான கதைகளாக வேண்டும். மேலே படிக்க ஆவலூட்டும் கதைகளாக வேண்டும். குழந்தைப் படம் எடுப்பதற்குப் புதுவித மான டைரக்டர்களும் தயாரிப்பாளர்களும் தேவை. பெரியவர்கள் படத்தில் கதை ஒரு

வெளியில் எடுக்கப்பட்ட காட்சிகளாகவே இருக்க வேண்டும். எக் காரணம் கொண்டும் செயற்கை மலர்களோ, செடிகளோ குழந்தைப் படத்தில் காண்பிக்கக் கூடாது.

எனக்கு இன்னும் என் குழந்தைப் பருவ நாட்கள் நினைவில் இருக்கின்றன. என்னுடைய பெரியோர்கள் செய்யும் உபதேசங்களை நான் பொருட் படுத்தியதே கிடையாது. ஆனால் அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதையே கவனித்து வந்தேன். இன்று நான் நூற்றுக்கணக்கான குழந்தைகளைக் காண்கிறேன். சமுதாயத்தின் பல்வேறு துறைகளில் வாழும் குழந்தைகளைப் பார்க்கிறேன். அன்று நான் எப்படி நடந்து கொண்டேனோ அப்படியேதான் அவர்களும் நடந்து கொள்கிறார்கள். அவர்கள் தம்



எங்கு வேண்டுமானாலும் மின்சாரம்!

**ஓனன்** மின்சார இயந்திரம்

டீஸல் மற்றும் காஸோலின் உதவியால் இயங்கும். 400லிருந்து 60,000 வாட்ஸ் கொடுக்கிறது



ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: **கோவிந்ராம் பிரதர்ஸ் லிட்.**
139, மெடோஸ் தெரு, போர்ட், பம்பாய் (இந்தியா)

ஏஜண்டுகள்: இண்டஸ்ட்ரியல் ஸ்டோர்ஸ், கம்பெனி
2, எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை - 1

# இந்தியாவின் முதன்மையானது மிகச் சிறந்தது









## பிரபாத்

* ஸ்டவ்கள்
* லாண்டர்ன்ஸ்
* பாண்டில்கள்
* ப்ளோ லாம்ப்ஸ்





## பிரபாத்

ப்ராடக்ட்ஸ் கம்பெனி

நோபின் சேம்பர்ஸ்
பார்ஸி பஜார் தெரு
போர்ட், பம்பாய்

GUJARAT




இரண்டு வாரங்களாகப் பறவைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். பாரதியாரின் சிட்டுக் குருவி நம்முடைய மனத்தில் சிறகடித்துப் பறந்தது. ஒளியும், அழகும், நிறைவும் கொண்ட விடுதலை உலகத்திற்கு, அந்தச் சிறு குருவி நம்மைத் தூக்கிச் சென்றது. ஆங்கிலக் கவிஞன் டேவிஸ் என்பவனுடைய மீன்கொத்திப் பறவையைப் பிறகு கண்டோம். அதன் அழகு கண்ணைக் கவர்ந்தது. ஏரிக் கரை ஏகாந்தத்தில் வாழும் அந்தப் பறவை, தற்பெருமை இல்லாமல், அமைதியோடு ஒதுங்கி நிற்பது எப்படி என்ற இரகசியத்தை நம்மிடம் பேசியது.

கொஞ்சம் இருங்கள். பறவைகள் இப்படியெல்லாம் செய்ய முடியுமா? முடியாதுதான். பிறகு, ....நடந்தது என்ன? மனிதனுடைய உணர்ச்சிகளைத் தாங்கி வரும் பாத்திரங்களாகவே சிட்டுக்குருவியும், மீன் கொத்தியும் கவிதை உலகில் இடம் பெற்றன. விடுதலைத் தாகமும், அமைதி நாட்டமும் கவிஞனுடைய உணர்ச்சிகள். ஒன்றின் வடிவாகச் சிட்டுக் குருவியும், மற்றொன்றின் வடிவாக மீன்கொத்தியும் அமைந்தன. அவ்வளவுதான்.

இந்த முறையில், இலக்கியத்தில் பாடிப் பறக்கும் பறவைகள் எத்தனை எத்தனையோ! பாருங்களேன், சத்தி முற்றம் என்ற ஊரிலிருந்து மதுரைக்கு வந்த புலவர் ஒருவர் - வறுமையால் வாடியவர்—மதுரைக்கு வந்த அன்றிரவு, படுப்பதற்கு இடமில்லாமல், தெருவிலே வாடைக் காற்றிலே கிடக்கிறார்.

'ஆடையின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழையாளன்'

[மெய்யது — உடம்பை; தழீஇ — தழுவி; பேழை-பெட்டி; உயிர்க்கும்-பெருமூச்சு விடும்]

ஆகக் காட்சி அளிக்கிறார். அவரை நன்றாகப் பாருங்கள். கட்டியிருப்பது கந்தல், ஏதோ மானத்தைக் காக்க. காலைச் சுருட்டி மடக்கி, அதையே போர்வையாக்கிக் கொள்கிறார். கையினால் மேல் உடம்பைப் பொத்திக் கொள்கிறார். பெட்டிக்குள்ளே அடைபட்டு ஏங்கிப் பெருமூச்சு விடும் பாம்பைப் போல, வறுமையில் முடங்கித் தேம்புகிறார். உறக்கம் வரவில்லை. குளிர் இப்படி நடுக்குகின்ற போது எப்படி உறக்கம் வரும்?

மேலே ஆகாசத்தைப் பார்க்கிறார். இரவு வானத்தின் கருநீலத்தில், அந்த நீலக் கடலில் மலர்ந்த வெண்ணுரையைப் போல, இரு நாரைகள் மிதந்து செல்கின்றன. இரு நாரைகள், ஆம், இருநாரைகள்! ஆணும் பெண்ணும், தலைவனும் தலைவியும். புலவருக்கு என்னவோ செய்கிறது. இந்தப் பறவைகள் ஒன்றாய் வாழும் பாக்கியம் பெற்றுவிட்டன. ஆனால் புலவரோ? சத்தி முற்றத்தில் அவர் மனைவி, இங்கே மதுரை வீதியில் வாடைக் குளிரில் இவர். புலவருடைய சிந்தை சத்தி முற்றத்தை நாடுகிறது. அவருடைய மனத்திலே, இடிந்து நனைந்த சுவருடைய வீடு ஒன்று காட்சி அளிக்கிறது. அவருடைய வீடு, ஓட்டைக் கூரை,- இல்லாவிட்டால் சுவர் நனைந்திருக்குமா? வறுமை உயர்த்திய கொடியாய் ஊசலாடுகிறது. உள்ளே, அவர் மனைவி, 'மதுரைக்குப் போன கணவர் எப்போது திரும்பி வருவார்? வரும்போது, பாண்டியன் தந்த செல்வத்தைக் கை நிறைய ஏந்தி வருவாரா?' என்றெல்லாம் எண்ணியபடி இருக்கிறாள். யார் அவளுக்குப் பதில் சொல்லப் போகிறார்கள்? மோட்டு வளையிலிருந்து பல்லி ஒன்று கனைக்கிறது, அவளைப் பார்த்துச் சிரிப்பது போல. பல்லியின் சொல் எதிர்காலத்தைக்

குறிக்கும் என்பார்களே, நல்ல வாக்குச் சொல்கிறதா இந்தப் பல்லி என்று அதன் குரலுக்கு அவள் பொருள் தேடுகிறாள். போன கணவர் நல்லபடியாக நிரம்பிய செல்வத்தோடு திரும்ப வேண்டுமே என்று கவலைப்படும் மனைவி, சத்திமுற்றத்துக் கூரைக் குச்சிலில்; இங்கேயோ, பொருள் தேடிப் பாண்டியனிடம் பரிசல் பெற வந்த கவிஞர், மதுரையில் வாடைக் காற்றோடு மல்லாடுகிறார். மேலே ஆகாசத்தைப் பார்க்கிறார். கவலையின்றித் தெற்கு நோக்கிச் செல்லும் நாரை கண்ணில் தென்படுகிறது. தானும் இந்த நாரையைப் போல் தன் துணைவியைத் தன்னோடு அழைத்து வந்திருக்கலாமே! ஆமாம், வந்திருந்தால், இரண்டு பேருமாகக் குளிரில் திண்டாடியிருக்கலாம். அவருக்குச் சிரிப்பு வருகிறது, வேதனை நிறைந்த சிரிப்பு. பாடுகிறார், நாரையைப் பார்த்துத்தான்:

**நாராய், நாராய்! செங்கால் நாராய்**
**பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன**
**பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்.**

பொல்லாத வறுமையிலும், குளிரின் உதைப்பிலுங் கூட, இயல்பான வியப்பும், அழகுணர்ச்சியும் இந்தக் கவிஞரிடம் மங்கவில்லை. நாரையின் சிவந்த காலையும், பனங் கிழங்கை இரண்டாகப் பிளந்தது போன்ற அதன் அலகையும், குழந்தை பார்க்குமே அப்படி வியப்போடு பார்த்து, அவற்றின் அழகிலே தோய்கிறார். பிறகு, அவருக்கு, தன் சோகக் கதை ஞாபகத்துக்கு வருகிறது. இந்த நாரையைப் போல இருந்தால், குமரி முனைக்குப் பறந்து போய், துணைவியோடு பறந்து போய், அங்கே கடலாடலாம். மனிதனாக அல்லவா பிறந்து விட்டோம்? வறுமையும், துயரமும், பிரிவும் மனித வாழ்க்கையின் முத்திரைகள். போகட்டும், இந்தச் செய்தியையாவது நாரைகள் சத்தி முற்றத்திற்கு எடுத்துச் சென்று சொல்லட்டும். செல்வம் ஒன்றையும் அனுப்பாவிட்டாலும், தான் வாடையில் மெலிந்து துயரப்படும் இந்த நல்ல செய்தியையாவது ஊருக்கு அனுப்பக் கூடாதா என்று எண்ணுகிறார்; நாரையைப் பார்த்துப் பேசுகிறார் - பாட்டில்தான். நாம் படிக்கக் கூடிய எளிமையான தமிழ்ப் பாட்டில்தான்:

**நீயும் நின்மனையும் தென்திசைக் குமரி**
**ஆடி வடதிசைக்கு ஏகுவீர் ஆயின்,**
**எம்மூர் சத்திமுற்ற வாவியுள் தங்கி**
**நனைசுவர்க் கூரை. கனை குரற் பல்லி.**
**'பாடு பார்த்திருக்கும் என் மனைவியைக்**
**கண்டு'**

*[வாவி—குளம், கனை குரல்—உரத்த குரல்.]*

என்ன சொல்ல வேண்டும், தெரியுமா?

**எங்கோன் மாறன் வழுதி கூடலில்**

எங்கள் அரசன் பாண்டியனுடைய கூடல்மா நகரத்தில்-நகரத்திற்கு என்ன குறை, அரசன் வாழ்கின்ற வள நகரந்தான்—இந்தச் செல்வத்தின் மத்தியிலே

**ஆடையின்றி வாடையின் மெலிந்து**
**கையது கொண்டு மெய்யது பொத்திக்**
**காலது கொண்டு மேலது தழீஇப்**
**பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்**
**ஏழையாளன்**

ஒருவன் இருக்கிறான், யார் அவன்! இவன்தான், இந்தப் புலவன்தான். இவனைப் பார்த்ததாகச் சொல்.

**ஏழையாளனைக் கண்டனம் எனுமே!**

நாரை இந்தச் செய்தியைத் தாங்கிச் சென்றதோ என்னவோ, தெரியாது. ஆனால் சத்திமுற்றப் புலவருடைய பாடல், எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு இப்பால் உள்ள நமக்கு, அவர் இதயத்தைத் தாங்கி வந்து விடுகிறது.

**ப**றவைகள்! இலக்கியத்தில் வரும் பறவைகள், காக்கையோ, குருவியோ, கவிஞனுடைய உயிர்த் துடிப்பைத் தாங்கிவரும் வாகனங்களே. இந்த வகையிலேதான், மாணிக்கவாசகருடைய 'கீதமினிய குயில்' இறைவனிடம் தூது செல்கிறது; ஆண்டாளுடைய கிளி, கூட்டிலிருந்து 'கோவிந்தா' என்று அழைக்கிறது. ஷேக்ஸ்பியரின் வானம்பாடி இறைவனுடைய எழில் வாசலில் வந்தியாக நின்று கட்டியம் பாடுகிறது. இப்படித்தான் அப்பருடைய. . நிறுத்திக் கொள்கிறேன், கவிதைக்கும் அதில் வரும் பறவைகளுக்கும் முடிவேது?

பறவைகள் மாத்திரம் என்ன, காடும், கடலும், மலையும், உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் கவிதை உலகிலே பேசி வருகின்றன, கவிஞனாக நின்று பேசுகின்றன. அவை பேசுகின்ற பொருள் 'நாம்' என்பது. அந்தப் பொருளைச் சொல்லில் வடிக்கின்ற சிருஷ்டி இன்பமே கவிஞனுடைய களியாட்டம். ஏன் அவன் பாடமாட்டான்:

**காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்**
**கடலும் மலையும் எங்கள் கூட்டம்**
**நோக்கு திசை யெல்லாம் நாமன்றி வேறில்லை**
**நோக்க நோக்கக் களியாட்டம்.**

இதுவே பண்பட்ட இலக்கிய நாட்டின் தேசிய கீதம். (தொடரும்)

ஒரு லாபகரமான முதலீடு...

# யூகோ பாங்கின்

# 3-வருட ரொக்க சர்ட்டிபிகேட்டுகள்

எச்சமயத்திலும் திருப்பித் தரப்படும்
அதிக வட்டி கிடைக்கிறது.



UC/156

## தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.

தலைமை ஆபீஸ்: கல்கத்தா

செலுத்தப்பட்ட மூலதனம் ... ரூ. 2 கோடி
ரிசர்வ் நிதி ... ரூ. 95 லக்ஷம்

சகலவிதமான பாங்கிங் அலுவல்களும் கவனிக்கப்படுகின்றன

ஜி. டி. பிர்லா
சேர்மன்

எஸ். டி. சதாசிவன்
ஜெனரல் மானேஜர்

---

ஒவ்வொரு வீட்டிற்கும்
ஏற்ற இலட்சிய யந்திரம்




அழகிய தோற்றங்கொண்ட உஷா மிஷின்கள், எம்ப்ராய்டரி வேலையையும் தையல் வேலையையும் ஓர் இன்பமாகக் கருதக் கூடிய வகையில் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன.

எல்லா உஷா மிஷின்களிலும் சில்லறை தொந்தரவுகளை நீக்கும் புது யந்திர சாதனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன!

# உஷா

## தையல் மிஷின்

தி ஜே என்ஜினீயரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31

ஸோனின் ஸேல்ஸ் ஆபீஸ்: 120, அரண்மனைக்காரத் தெரு, சென்னை (தென் சென்னை, மற்றும் திருவாங்கூர் - கொச்சி ராஜ்யத்திற்கு) ● ஏஜண்டுகள்: மெஸர்ஸ் பி. எஸ். மஹேந்திரா, 1, மலையனி ரோடு, சென்னை (சென்னை நகரம், ஆந்திரா & மைசூர் ராஜ்யங்களுக்கு)






# அற்புதங்கள்

டாக்டர் அழகப்பச் செட்டியார் ஒரு அதிசய மனிதர் மட்டுமல்ல. அவருடைய சாதனைகளும் அதிசயமானவை. ஒருசமயம் அவர் பம்பாய்க்குப் போயிருந்தார். மேல் நாட்டு முறையில் நடத்தப்பட்டு வரும் ரிட்ஸ் ஹோட்டலுக்குச் சென்றார். "தங்குவதற்கு அறை வேண்டும்" என்று கேட்டார்.

"அறை காலி இல்லை" என்று சொல்லி விட்டு டாக்டர் அழகப்பச் செட்டியாரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார் அந்த ரிட்ஸ் ஹோட்டல் மானேஜர்.

"இந்த ஹோட்டலில் எத்தனை அறைகள் இருக்கின்றன?" என்று கேட்டார் அழகப்பர்.

"என்ன, ஹோட்டலை விலைக்கு வாங்கு றவர் மாதிரி அல்லவா கேள்வி கேட்கிறீர்?" என்றார் ஹோட்டல் மானேஜர்.

"ஆமாம். விலைக்கு வாங்கத்தான் போகி றேன். என்ன விலை?" என்றார் அழகப்பர்.

லட்சக் கணக்கில் ஒரு பெரிய தொகையைச் சொன்னார் ஹோட்டல் மானேஜர்.

"இந்தாரும் இப்பொழுதே அட்வான்ஸ் வாங்கிக் கொள்ளும்" என்றார் அழகப்பர்.

ஹோட்டல் மானேஜர் ஒருகணம் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போனார். கடைசியில் டாக்டர் அழகப்பச் செட்டியார் அந்த ரிட்ஸ் ஹோட்டலை விலைக்கு வாங்கியே விட்டார்.

வியாபார விஷயங்களிலேதான் இப்படி யாரும் எதிர்பார்க்க முடியாதபடி காரியங்கள் செய்வார் என்றால், தர்மங்கள் செய்யும் விஷயங்களிலும் டாக்டர் அழகப்பரின் காரியங்கள் எல்லாரையும் திகைக்க வைத்து விடும். அந்தத் தர்ம காரியங்களை நிறை வேற்றி வைப்பதிலும் அவருடைய சாதனைகள் யாரும் எதிர்பாராத முறையில் அதிசயமாக இருக்கும். பார்ப்பவர்களையும் கேட்பவர்களையும் தூக்கி வாரிப் போட்டு விடும்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத் தேழாம்ஆண்டு அடையாற்றில் மாண்டிசோரி கல்விப் பயிற்சி சாலை திறப்புவிழா நடை பெற்றது. அந்த விழாவுக்கு டாக்டர் அழகப் பரும் சென்றிருந்தார். விழாவில் வைஸ் சான்ஸலர் லட்சுமணசாமி முதலியார் பேசி னார். "ஒரு லட்ச ரூபாய் ரொக்க நிதி ஏற் படுத்தினால் சென்னை ராஜ்யத்தில் ஒரு கலைக் கல்லூரி ஆரம்பிக்கலாம்" என்றார்.

இதைக் கேட்டதும் டாக்டர் அழகப்பரின் மூளை வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. தம்முடைய ராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு கல்லூரி கூட இல்லாமல் இருப்பது நினைவுக்கு வந்தது. சட்டென்று எழுந்திருந்தார். வைஸ் சான்சலர் லட்சுமணசாமி முதலியாரிடம் சென்றார். "இந்தாருங்கள், ஒரு லட்சம். காரைக்குடியில் கல்லூரி ஆரம்பிக்கலாம்!" என்றார். சொல்லிச் சில நாளைக்கெல்லாம் காரைக்குடியில்கல்லூரி ஆரம்பமாகிவிட்டது.

வாடகைக் கட்டடத்தில் எத்தனை நாட்கள் கல்லூரி நடத்துவது? கல்லூரிக்குச் சொந்தக் கட்டடம் வேண்டாமா?

காரைக்குடிக்குப் பக்கத்திலேயே அறுநூறு ஏக்கரா நிலத்தை வாங்கினார். அதில் நூற்று ஐம்பதுஏக்கரா நிலத்தை மேற்படி கலைக் கல்லூ ரிக்கு என்று தாராளமாக எழுதி வைத்தார்.

அவ்வளவு விஸ்தார மான நிலம் வைத்திருக் கும்போது அதற்குத் தகுந்த விசாலமான கட்டடம் வேண்டாமா? சில மாதங்களில் அற்புதமான கட்டடம் எழும்பி விட்டது.

டாக்டர் அழகப்பரின் கல்லூரி என்றால் அது அற்ப சொற்பமாக இருக்கலாமா? வெறும் பி. ஏ. வகுப்பு மட்டும் போதுமா? பி. எஸ்ஸி., பி. காம்., பி. ஏ. (ஆனர்ஸ்) எல்லாம் வேண்டாமா? பௌதிகம், ரஸா யனப் பகுதிகள் இருக்க வேண்டாமா?

# அதிசய சாதனைகள்

கட்டாயம் வேண்டியதுதான். அதற்குப் பணம் எவ்வளவு ஆகும்? எவ்வளவு ஆனால் என்ன? டாக்டர் அழகப்பர் மனம் வைத்து விட்டால் பணம் ஒரு பெரிய காரியமா?

ஏதோ ஒன்பது லட்சம் ஆகும் என்று சொன்னார்கள். ஒன்பது லட்சத்தையும் டாக்டர் அழகப்பரே கொடுத்தார். ரொக்கமாகக் கொடுத்தார்; வீடாகக் கொடுத்தார்; பல சொத்துக்களாகக் கொடுத்தார்.

'வெறும் கலைக் கல்லூரிகளைப் பெருக்கி பி. ஏ. க்களை உற்பத்தி செய்வதில் என்ன பிரயோசனம்?' என்ற சில அறிஞர்களின் அனுபவ பூர்வமான சொல் டாக்டர் அழகப்பரின் காதில் விழுந்தது. பொறி இயல் கல்லூரி ஆரம்பிக்கத் தீர்மானித்து அதைக் காரியத்திலும் நிறைவேற்றினார்.

நன்றாகப் பயின்ற என்ஜினியர்கள் இருந்தால் மட்டும் போதுமா? அவர்களுக்குத் துணை செய்யும் கைத்திறமை பெற்றவர்கள் வேண்டாமா? உடனே 'பாலிடெக்னிக்' கல்லூரியும் ஆரம்பித்தார்.

'ஆண்களுக்கு வேண்டிய படிப்புக்குத்தான் டாக்டர் அழகப்பர் ஏற்பாடு செய்கிறார். நம்முடைய பெண்மணிகளுக்கும், சின்னஞ் சிறு குழந்தைகளுக்கும் ஒன்றையும் காணோம்' என்று யாரோ புண்ணியவான் சொல்லி விட்டார். உடனே டாக்டர் அழகப்பர் பெண்கள் கல்லூரியும், குழந்தைகளுக்கான 'பிரிப்பரேட்டரி' பள்ளிக்கூடம் ஒன்றையும் இசைக் கல்லூரியையும் தொடங்கினார்.

சென்னை ராஜ்யத்தில் உடற் பயிற்சிக் கல்லூரி ஒன்றே ஒன்று தான் இருக்கிறது. சென்னைக்கு அருகில் சைதாப்பேட்டையில் உள்ள ஒய். எம். சி. ஏ. உடற் பயிற்சிக் கல்லூரியை விட்டால் வேறு வழியில்லை என்று இருந்த நிலைமையையும் மாற்றினார். காரைக்குடியிலேயே ஒரு உடற்பயிற்சிக் கல்லூரியையும் சென்ற ஆகஸ்டு மாதம் ஆரம்பித்துவிட்டார்.

1947-ம் ஆண்டு 140 மாணவர்களுடன் ஆரம்பமான கல்லூரி இன்று ஆலெனப் படர்ந்து தழைத்து விட்டது. சுமார் 2,500 மாணவர்கள் கொண்ட மிகப் பெரிய கல்வி ஸ்தாபனமாக ஓங்கி வளர்ந்து விட்டது.

அறுநூறு ஏக்கரா நிலப் பரப்பில் இருந்த கல்லூரி இன்று ஆயிரத்து இருநூறு ஏக்கர் நிலப்பரப்பில் பல கல்லூரிகளாகப் பெருகி விட்டது. இந்தக் கல்லூரிகளின் மதிப்பு இப்பொழுது ஒரு கோடி ரூபாய்க்கு மேல் இருக்கும். ஐந்து வயதில் சின்னஞ் சிறு குழந்தையாக அழகப்பரின் கல்வி ஸ்தாபனத்துக்குள் நுழைந்து விட்டால் போதும். ஏதாவது ஒரு பட்டப் படிப்புடன் வெளியில் வரலாம். இந்த அருமையான வசதி சென்னை ராஜ்யத்தில் வேறு எங்கும் இல்லை என்று சொல்லலாம். எல்லாம் டாக்டர் அழகப்பரின் தர்மம். அவருடைய அதிசய சாதனைகள்.

இப்படி யெல்லாம் மூச்சுத் திணறிப் போகும்படி கல்வித் தர்மம் செய்த டாக்டர் அழகப்பர் தமிழ் நாட்டுக்கு இன்னொரு மகத்தான பேருபகாரம் புரிந்திருக்கிறார்.

தமிழ் நாட்டில் மிகப் பெரிய மின்சார ரஸாயன ஆராய்ச்சிக்கூடம் ஒன்றும் ஆரம்பித்து நடத்துவதற்குத் துணை புரிந்திருக்கிறார்.

இந்திய சர்க்கார் சென்னை ராஜ்யத்தில் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக்கூடம் ஒன்று ஆரம்பிப்பதாக யோசனை செய்தார்கள்.

டாக்டர் அழகப்பரும், பிரதமர் நேருஜியும். இரு பெரும் உள்ளங்களும் எதைக் கண்டு மகிழ்கின்றனவோ!



இதை எப்படியோ தெரிந்து கொண்டார் டாக்டர் அழகப்பர். தாமதம் செய்யாமல் உடனே டில்லிக்குப் பறந்து சென்றார்.

''முந்நூறு ஏக்கரா நிலம் தருகிறேன். பதினைந்து லட்சம் ரூபாய் நன்கொடை தருகிறேன். தமிழ்நாட்டில் காரைக்குடியில் ஆரம்பியுங்கள்'' என்று கூறினார்.

இந்திய சர்க்கார் விஞ்ஞான இலாகா காரியதரிசி டாக்டர் பட்நகர் காரைக்குடிக்கு வந்தார். இடத்தைப் பார்த்தார். ''நிலம் இருக்கிறது; சரிதான்! தண்ணீர் வசதி இல்லையே!'' என்றார். இதைக் கேட்டதும் சிலர் மனத்தில் சந்தேகம் எழுந்தது. பலருக்குப் 'பகீர்! பகீர்!' என்றது.

''தண்ணீர்தானே! அது பாதாளத்தில் இருந்தாலும் கொண்டு வந்து தருகிறேன்!'' என்றார் டாக்டர் அழகப்பர்.

உடனே பூமிக்கு அடியில் இருநூறு அடி முந்நூறு அடி ஆழம் போய்த் தண்ணீரை வெளியில் கொண்டு வரக்கூடிய 'போர் பம்பில்' இயந்திரத்தை டாக்டர் அழகப்பர் கொண்டு வந்தார். பூமிக்குள் ஆழமாகக் குடைந்ததும் தண்ணீர் பொங்கிக் கொண்டு வெள்ளமாக மேலே வந்தது.

டாக்டர் பட்நகரின் ஆட்சேபம் அடிபட்டுப் போயிற்று. காரைக்குடியில் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக்கூடம் ஆரம்பமாயிற்று.

இவ்வளவு பாடுபட்டு ஆரம்பமாகும் ஆராய்ச்சிக் கூடத்தைச் சாதாரண மனிதரைக் கொண்டு அஸ்திவாரம் இடச் செய்யலாமா? ஆகவே மனிதகுல மாணிக்கமான பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவையே புது தில்லியிலிருந்து அழைத்துவந்து அஸ்திவாரம் இடச்செய்தார். நேருஜி அவர்களும் டாக்டர் அழகப்பரின் வேண்டுகோளுக்கு இணங்கிக் காரைக்குடிக்குவந்தார். தம்முடைய பொற் கரங்களால் மின்சார—ரஸாயன ஆராய்ச்சிக்கூடத்துக்கு அடிப்படைக் கல் நாட்டினார். மின்சார—ரஸாயன ஆராய்ச்சிக்கூட அஸ்திவார விழாவில் அகில இந்தியாவிலும் இருந்தும் பல விஞ்ஞானிகள் வந்து கலந்து கொண்டனர். தமிழ்நாடே திரண்டு சென்று விழாவைப் பார்த்தது. பல லட்சக் கணக்கான மக்கள் கூடி நின்ற பெருங் கூட்டத்தில் நேருஜி பேசினார். (இந்தக் காட்சியைக் கட்டுரைத் தலைப்பில் காணலாம்.)

டாக்டர் அழகப்பரின் அதிசய சாதனைகளால் இன்று தமிழ்நாடே உயர்ந்து விட்டது. ராமநாதபுரம் ஜில்லா மிக முக்கியமான ஜில்லாவாக மாறி விட்டது. பர்மா, மலேயா, இலங்கை இங்கிருந்தெல்லாம் பணம் வருவது குறைந்தபின் செட்டிநாட்டின் களையே இழந்து விட்டது என்று சொல்லும்படியான நிலை ஏற்பட்டது. அந்த நிலைமையை டாக்டர் அழகப்பர் மாற்றி விட்டார். அவருடைய சாதனைகளால் உருவான அழகப்பா கல்லூரிகளால் காரைக்குடியும், அதைச் சுற்றியுள்ள இதர செட்டிநாட்டு நகரங்களும் மீண்டும் களை பெற ஆரம்பித்து விட்டன. செட்டிநாட்டுக்கே டாக்டர் அழகப்பர் புதிய உயிர் அளித்து விட்டார் என்றுகூடச் சொல்லலாம்.

அவருடைய அதிசய சாதனைகளாலும், அளவற்ற தர்மங்களினாலும் உருவான அழகப்பா கல்லூரிகளை எல்லாம் தமிழ்மக்கள் எல்லாரும் பார்க்க வேண்டாமா? அத்துடன் அங்கிருக்கும் மின்சார ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்தையும் கண்டு களிக்க வேண்டாமா? கட்டாயம் பார்க்க வேண்டும்.

முதலில் மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்தைப் பார்த்து விட்டுப் பிறகு கல்லூரிகளை எல்லாம் பார்க்கலாம்.

## ஆராய்ச்சிக்கூடம்

வளர்ந்து வரும் உலகத்தில் இதர நாடுகளுடன் பாரதமும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமானால் அதற்கு எல்லா நவீனத் துறைகளிலும் நாம் உலகத்தோடு சமமாக வளரவேண்டும்; வளர்ந்தே ஆகவேண்டும். அதற்கு எல்லாத் துறைகளிலும் ஆராய்ச்சி நிலையங்கள் காணவேண்டும். இதை நன்கு உணர்ந்த பாரத சர்க்கார், தொழில் - விஞ்ஞான அபிவிருத்திக்கான பல துறைகளில் இயங்கும் பதினொன்று ஆராய்ச்சிக் கூடங்களை இந்தியாவின் பல பாகங்களில் ஏற்படுத்தியிருக்கின்றனர். இந்த ஆராய்ச்சிக் கூடங்கள் உருவாவதற்குக் காரணமாயிருந்தவர் விஞ்ஞான மேதை டாக்டர் எஸ். எஸ். பட்நகர்.

சுமார் நாற்பது லட்சம் ரூபாய் செலவில் உருவான மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்தின் கம்பீரத் தோற்றம். இந்தக் கட்டடத்துக்குள்ளே எத்தனையோ இந்திரஜால மகேந்திரஜால ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.



தென் இந்தியாவில் மூன்று ஆராய்ச்சி நிலையங்கள் இருக்கின்றன. மைசூரில் உணவு ஆராய்ச்சி நிலையமும், சென்னை நகரை அடுத்துள்ள கிண்டியில் தோல் ஆராய்ச்சி நிலையமும், காரைக்குடியில் மின்சார - ரஸாயன ஆராய்ச்சி நிலையமும் இருக்கின்றன.

தமிழ் நாட்டில் மட்டும் இரண்டு ஆராய்ச்சி நிலையங்கள் இருப்பது தமிழ் மக்கள் பெருமைப்படக் கூடிய காரியம். இதற்குத் துணை புரிந்தவர் டாக்டர் அழகப்பர் என்பதை மறந்துவிடக்கூடாது. டாக்டர் செட்டியார் அன்று அவ்வளவு சிரத்தை எடுத்துக் கொள்ளாவிட்டால் மின்சார—ரஸாயன ஆராய்ச்சி நிலையம் நிச்சயமாகத் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்காது. இந்தப் பெருதவியைச் செய்திருக்கும் டாக்டர் அழகப்பச் செட்டியாருக்குத் தமிழ் மக்களின் சார்பாக நன்றியும் வணக்கமும் செலுத்துகிறேன்.

** ** **

மின்சாரத்தைக் கொண்டு வெளிச்சம் தான் உண்டாக்கலாம் என்று சாதாரணமாக எல்லாருக்கும் தெரியும். இன்னும் கொஞ்சம் அனுபவப் பட்டவர்கள் நகர்ப்புறத்தில் வாழ்பவர்கள், மின்சாரத்தைக் கொண்டு ரயில் விடலாம்; மோட்டார் விடலாம்; உயரமான மூன்று அடுக்கு மாடிகள் உள்ள பெரிய கட்டடங்களுக்கு ஏறி இறங்கும் 'லிப்ட்' முதலியவைகளை இயக்கலாம், டெலிபோன், ரேடியோ முதலியவைகளுக்கு உபயோகப் படுத்தலாம் என்பதை அறிவார்கள். இதற்கு மேல் மின்சாரத்தின் உபயோகத்தைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆனால் மின்சாரத்தைக் கொண்டு இன்னும் எத்தனை எத்தனையோ அதிசயங்களைச் செய்யலாம் என்பதைக் காரைக்குடியில் உள்ள மின்சார—ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்துக்குள் சென்று பார்த்தபோது புரிந்துகொள்ள முடிந்தது.

இந்த ஆராய்ச்சிக் கூடத்தில் பெரும்பாலும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்களே தொண்டாற்றுகிறார்கள். இந்த நிலையம் காரைக்குடியில் இருப்பதால் தமிழ் நாட்டில் எத்தனையோ ஆராய்ச்சி நிபுணர்கள் தோன்றுவதற்கு வசதி ஏற்படும். அவர்களுடைய திறமையால் தமிழ் நாடும், இந்தியாவும் மேன்மை யடையும் என்று ஏன் சொல்ல முடியாது?

** ** **

வெளியில் பல வேலைகளை வைத்துக் கொண்டு, ஏதோ அதிசயமான காட்சிகளைப் பார்க்கப் போகிறோம் என்று எண்ணிக் கொண்டு ஆராய்ச்சிக் கூடத்துக்குள் பிரவேசித்தால் ஆராய்ச்சிக்கூடம் ஒன்றும் பிரமாதமாகத் தோன்றாது. "இதுதான் ஆராய்ச்சிக் கூடத்தின் அழகுமிக்க மண்டபம், இதோ ஆராய்ச்சிக் கூடத்தின் புத்தகசாலை; ரஸாயன ஆராய்ச்சிச் சாலை; பல மாதிரி சாமான்களைச் செப்பனிடும் தொழிற்கூடம்; இவ்வளவு தானே!" என்று சில நிமிஷங்களிலேயே ஆராய்ச்சிக் கூடத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பி விடலாம்.

அவ்விதம் இல்லாமல், சற்று நிதானமாக, ஏதோ பெரிய ஆராய்ச்சி என்று சொல்கிறார்களே, பல லட்சக் கணக்கான ரூபாய்களை வாரி இறைத்துப் பணியாற்றி வருகிறார்களே, கட்டாயம் ஏதோ பெரிய காரியங்கள்தான் நடைபெறுகின்றன, அவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டியது மிக அவசியம் என்று எண்ணி இந்த ஆராய்ச்சிக் கூடத்தின் விசாலமான கட்டடத்துக்குள் செல்வோம்.



ஆவடியில் நடைபெற்ற அறுபதாவது காங்கிரஸின் அலங்கார மேடை மீது, பிரதமர் ஜவஹர்லால்நேருவும், மொரார்ஜி தேசாயும், அக்கிராசனர் தேபரும் வந்து நின்று வெள்ளம்போல் கூடியிருக்கும் ஜன சமுத்திரத்தைப் பார்க்கின்றனர்.

காரைக்குடியில் மின்சார — ரஸாயன ஆராய்ச்சிக் கட்டடம் அமைந்திருக்கும் இடமும், நீளம், அகலம், உயரம் எல்லாவற்றிலுமே சிறந்து நிற்கும் கட்டடமும் நம்மைக் காரைக்குடியிலிருந்து வேறு எங்கோ அழைத்துச்சென்று விடுகின்றன. அந்தக் கட்டடத்துக்குள் புகுந்ததுமே அதன் அமைப்பு நம் கவனத்தைக் கவருகிறது. பளபளவென்று கண்ணைப் பறிக்கும் அந்தக் கட்டடம் நமக்கு என்னென்னவோ ஆராய்ச்சிக் கதைகள் எல்லாம் கூற ஆரம்பித்து விடுகின்றன. நம்மையும் அறியாமல் திகைத்து நிற்கும் போது, "என்ன அப்படி நிற்கிறீர்கள்?" என்ற குரல் நம் திகைப்பைக் கலைக்கிறது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை" என்று மழுப்பிவிட்டு உள்ளே செல்லுகிறோம்.

மின்சார - ரஸாயன ஆராய்ச்சிக் கூடத்துக்குள் நுழைந்ததும், முதலில் அதன் கௌரவ டைரக்டர் டாக்டர் பி. பி. டே அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள்.

டாக்டர் டே அகமும் முகமும் மலர வரவேற்று உபசரித்தார். அடுத்த கணம் மின்சார — ரஸாயன ஆராய்ச்சி நிபுணர் திரு வி. ஆராவமுதனைக் கூப்பிட்டார். ஆராய்ச்சிக் கூடம் முழுவதையும் அழைத்துப் போய்க் காட்டச் சொன்னார்.

திரு ஆராவமுதன் சுருக்கமாக இவ்வாராய்ச்சிக்கூடம் ஆரம்பித்த கதையைக் கூறிவிட்டு ஆராய்ச்சிக்கூடத்தின் ஒவ்வொரு பகுதியையும் பார்க்க அழைத்துச் சென்றார்.

மின்சார—ரஸாயன நிபுணருடன் ஆராய்ச்சிக் கூடத்துக்குள் சென்று அங்கு நடைபெறும் அதிசயமான ஆராய்ச்சி விந்தைகளைப் பார்த்து வருவோம். (தொடரும்)



பம்பாய் பிரபல வியாபாரி ஸ்ரீ எம். சுந்தரராஜன் அவர்கள் சகோதரியும் ஸ்ரீ ஏ. எஸ். எம். லிங்கம் அவர்கள் குமாரியுமான சௌ. சரோஜாவுக்கும் சுதேசமித்திரன் ரிட்டயர்டு ஜெனரல் மானேஜர் ஸ்ரீ டி. எஸ். விஸ்வநாத அய்யர் அவர்கள் குமாரன் ஸ்ரீ வி. ஜி. சுப்பராமன் அவர்களுக்கும் 29-10-56 அன்று பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்திற்கு ஏராளமான பிரமுகர்களும், பிரபல வியாபாரிகளும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள் சுப்பராமன்-சரோஜா


உபயோகியுங்கள்

**அம்பீஸ்**

**ஊறுகாய்**

**அப்பளம்**

**பப்படம்**

**சாம்பார் பொடி**

**ரஸப் பொடி**

மொத்தமாகவும் சில்லறையாகவும் கிடைக்கும்

★

**அம்பீஸ் கபே**

6, பிராட்வே — சென்னை-1

நமது மதிப்பிற்குரிய தலைவர் நேருஜி உலகுக்கு உரிய வழிகாட்ட அவர் நீடூழி வாழ நாம் அனைவரும் இறைவனை இறைஞ்சுவோமாக

○●○

## கோவையில் புதிய பாத்திரக் கடை!

நவீன நாகரீகத்திற்கேற்ப புது ரக மோஸ்தரில் **பித்தளை, செம்பு & ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்** எல்லா தினுசுகளிலும் நல்ல வேலைப்பாடுள்ளதாகவும் ஏராளமாக வந்துள்ளன. நயமான விலையில் கிடைக்கும்.

மற்றும் தங்களுக்கு உகந்த மாதிரிகளில் ஆர்டரின்பேரில் தயார்செய்து கொடுக்கிறோம்

தங்கள் தேவை எங்கள் சேவை

**A.T.N. தம்மண்ண செட்டியார் & கோ.**

ராஜ வீதி - (போஸ்டாபீஸ் எதிர்புறம்) - கோயமுத்தூர்

(தலைமை ஆபீஸ்: திருப்பூர் - ஸ்தாபிதம்: 1944)



# பானுவின் காதலன்

## 1. யார் அந்தப் பெண்?

கோவை - புளிமங்கலம் பஸ் மார்க்கத்திலுள்ள கணபதி பாளையம் கொஞ்ச நாட்களாகவே பிரசித்தி பெற்ற கிராமங்களில் ஒன்றாகிக் கொண்டு வருவதை அந்தப் பிராந்தியத்தில் உள்ளவர்கள் அனைவரும் அறிவார்கள். இத்தனைக்கும் அது சமுதாய நலத்திட்டத் தொகுதியிலே உட்பட்டிருக்கவில்லை. பக்கத்திலே எந்த அணைக்கட்டுத் திட்டத்துக்கும், விஸ்தரிப்புத் திட்டத்துக்கும் தலைமைக் காரியாலயத்தைத் தாங்கிக் கொண்டிருக்கவில்லை. கணபதிபாளையத்திலிருந்து ஒரு சங்கீத வித்வானோ அரசியல் வாதியோ கூடத் திடீரென்று கிளம்பி அந்த ஊரின் புகழைப்பரப்பவில்லை. பிரசித்தத்துக்குக் காரணம்கேவலம் ஒருகீற்றுக் கூரைக் காப்பி ஹோட்டல்.

பஸ்வந்து நிற்குமிடத்திலே சைக்கிள் கடை, சோடாக் கடை, வேப்பமரம், மரத் தடியைச் சுற்றி மேடை, மேடையில் வீற்றிருக்கும் பிள்ளையார், அந்த நிழலிலே சுழலும் செக்கு ஆகிய இந்தச்

சூழ்நிலையிலே, அந்த ஹோட்டல் ஒரு பலகைகூட இல்லாமல் புகழ் பரப்பியது, இந்த விளம்பர யுகத்திலே அதிசயத்திலும் அதிசயமில்லையா? ஆம்! பார்வைக்குச் சுத்த மோசமானதுதான். ஒரு மேசை நாற்காலியோ, பீங்கானே, ரேடியோவோ ஒன்றும் இடையாது. வாசலில் மார்பு உயரத்துக்கு ஒரு மேடை. மேடையிலே ஒரு கண்ணாடிப் பெட்டி. அந்தக் கண்ணாடிப் பெட்டிக்குள் பொன் நிறத்திலே கோபுரம் போல் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் மசால் வடைகள்.

மசால்வடையின் மணம்தான் பஸ் ஸ்டாண்டு காப்பி ஹோட்டல் என்ற பெயரையும், கணபதி பாளையத்துக்குப் புகழையும் எட்டிய வரையில் பரப்பிக் கொண்டிருந்தது. கோவை - புளிமங்கலம் பஸ் ஒவ்வொன்றும் அந்த வாடையிலே இறங்கி வரையறைக்கு மேற்பட்ட நேரம் அந்த இடத்திலே தங்குவது வழக்கமாயிற்று என்றால் அதிகம் சொல்ல வேண்டுமா?

"தடபுடல் விருந்தென்று கூறி எட்டு ரூபாய் வாங்குகிற பெரிய பெரிய ஹோட்டல்களில் கூட இந்த மாதிரி வடை செய்யத் தெரிகிறதில்லே. இதன் காலிலே கட்டி அடிக்கக்கூட லாயக்குக் கிடையாது! என்ன ரகசியம் வச்சிருக்கிறே தம்பி?" என்று செக்கடிச் சின்னசாமி, பஸ் ஸ்டாண்டு ஹோட்டலின் முதலாளி, தொழிலாளி எல்லாமாக விளங்கும் சின்னத்துரையிடம் வியப்புடன் விசாரிப்பதுண்டு.

"ஆகா! இந்த இடத்தைக் கொஞ்சம் மேசை - நாற்காலி, பீங்கான், நியான்



விளக்கு என்று தூக்கிவிட்டு, இந்த மசால்வடைக்கு அமெரிக்க மார்க்கெட்டில் கிராக்கி ஏற்பட விளம்பரம் செய்து விட்டால்......அடாடா......இந்த உலகையே விலைக்கு வாங்கி விடலாமே?...'' என்று சைக்கிள் கடை அந்தோனி அங்கலாய்த்துக் கொள்வார்.

இன்னும் பருத்திக் கொட்டைப் பழனியாத்தாள், பாங்கி பஞ்சநதம், குருக்கள் குருசாமி, எல்லோருக்குமே அவன் புரியாத புதிராக இருந்தான். ஆனால், குத்திட்டு நிற்கும் கிராப்பை வாரி விட்டுக் கொண்டு, காலர் பனியனும், கறுப்புக்கரை வேட்டியுமாக மந்தகாச வதனத்துடன் வாசலில் காட்சியளிக்கும் சின்னத்துரையை, ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் திருச்சி - பூந்துறை



ஷட்டில் வண்டியில் பிரயாணம் செய்த மாணவர்களாகட்டும், தொழிலாளர்களாகட்டும், உத்தியோகஸ்தர்களாகட்டும் பார்த்தால் கண்டிப்பாகத் தெரிந்து கொள்வார்கள்.

''டேய், மசால்வடை! இங்கேயா இருக்கிறாய்?'' என்று அந்த மாஜி மாணவர்கள் அவனை விசாரிக்கத் தவறமாட்டார்கள். அந்த நாட்களில் அவன் மசால்வடையை ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டு அவர்கள் பேசும் பேச்சே வெகு ரசமாக இருக்கும்.

''டேய் சின்னு! எப்படியடா இந்த மாதிரி வடை பண்ணுகிறாய்? கொஞ்சம் அந்தக் கலவை 'பார்முலா'வைச் சொல்லேன்?'' என்று ஒருவன் ஆரம்பிப்பான்.

''இந்த மாதிரி அருமையான கலா நுட்பங்களை எவரும் வெளியிட மாட்டார்கள். வேண்டுமானால் சின்னுவிடம் கொஞ்சகாலம் குருகுலவாசம் செய்து கற்றுக்கொள்'' என்று ஒரு மாணவன் கேலி செய்வான்.

''இல்லாவிட்டால் ஏகலைவனைப் போல் மனத்திலே வரித்துக் கொண்டு தைரியமாக முயற்சி செய். இந்த வருஷம் 'கோட்' அடித்தபின் புத்தகங்களைத் தூக்கி எறிந்து விட்டுச் சின்னுவுக்குப் போட்டியாக ஒரு அடி அடிக்கலாம்'' என்று உற்சாக மூட்டுவான் மற்றவன்.

''ஐயையோ! அப்புறம் சின்னு குரு தட்சிணையாக வடை தட்ட முடியாமல் ஆள்காட்டி விரலையோ மோதிர விரலையோ கேட்கப் போகிறான்!'' என்று சிரிப்பான் ஒரு இளவல்.

''சின்னுவுக்கு இந்தக் கலை பரம்பரையாக வந்தது மட்டுமல்ல பிரதர், இவனிடம் மட்டும் இவ்வளவு அருமையாக ஏன் சுடர் விடுகிறது, தெரியுமா? பிரகலாதன் நாராயண நாமத்தைக் கேட்டாற் போல இவனும் மசால் வடைப் பாடத்தை எப்போதோ தந்தை தாய்க்குச் சொல்லக் கேட்டிருக்கிறான். அப்படித்தானே சின்னு?'' குபீரென்று சிரிப்பொலி பெட்டி முழுவதும் பரவி எதிரொலிக்கும்.

சின்னுவும் இந்தப் புகழுக்கெல்லாம் பிரதியாக ஒரு கோணல் சிரிப்பை நெளிய விடுவான். அந்தக் கோணல் அவன் முகத்துக்கே இயற்கையானது. இப்போதும் எல்லோருடைய எல்லாக் கேள்விகளுக்கும், எல்லா விதமான விசாரணைகளுக்கும் உத்தாரமாகத் திகழ்வது அந்தச் சிரிப்புத்தான்.

இதோ, தொலைவிலிருந்து ரமானந்தா பஞ்சாலைச் சங்கின் ஒலி கேட்கிறது. மணி நாலடிக்கப் போகிறது. புளிமங்கலத்திலிருந்து பஸ் வரும் வேளை. வைகாசி மாசக்கடைசியாதலால் காற்று ஏழை - பணக்காரர், வெறுங் கந்தல் - வெள்ளை வேட்டி என்ற பாகுபாடில்லாமல் புழுதித் தானம் செய்து கொண்டிருக்கிறது.

''அட சை! என்ன புழுதி வாரியடிக்குது, பாழாய்ப் போன காற்று? கிணற்றுத் தண்ணீரெல்லாம் வறண்டு போய் விட்டது. ஒரு கிளாஸ் நல்ல தண்ணீர் கொடு, தம்பி'' என்று கூறிக்கொண்டே அங்கு கிடந்த ஒரே பெஞ்சியில் படிந்திருந்த புழுதியைத் தட்டிவிட்டு அந்தோனி உட்கார்ந்தார்.

சின்னத்துரை பானையிலிருந்த தண்ணீரில் ஒரு தம்ளர் கொண்டு வந்து வைத்

# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

# மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!

✓ ஒளிவீசும் பற்கள்!

✓ சொத்தை குறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்:

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPC/14

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**




# ஜெய்பேப்ஸ்

## உயர்தரமான ரேயான் ஸில்குகள்

ஜெய் ஹிந்த் ஸில்க் மில்ஸ்

ஆக்ரா ரோடு, காட்கோபார், பம்பாய் - 39

---



தான். ''பிள்ளையார் தலையிலே குளிர ஆளுக்கு ஒரு செம்பு தண்ணீர் கொண்டு வந்து கொட்டுங்கள். கிணற்றிலே தண்ணீர் தானாக ஊறும்'' என்று கூறி விட்டு, அவனுக்கே இயல்பான அந்தச் சிரிப்பை நெளிய விட்டான்.

''உப்புத் தண்ணீரைக் கொட்டினால் உப்புத் தண்ணீர்; நல்ல தண்ணீரைக் கொட்டினால் நல்ல தண்ணீர். பிள்ளை யார் பார்த்துத்தான் கொடுப்பார், அண்ணாச்சி! காப்பி ஓட்டல்காரரு காப்பியாகவே ஊற்றட்டும், காப்பி போடாமலே கிணற்றிலே ஊறிவரும்!'' என்று சோடாக்கடை ரத்தினம் எதிரே கடையில் உட்கார்ந்தபடியே வம்புக்கு இழுத்தது அவர்கள் செவிகளில் ஏறாத படி பஸ் அலறிக் கொண்டு கடை வாசலில் வந்து நின்றது.



சூழும் புகையினால் கூட்டிலிருந்து கலையும் தேனீக்கள் போல் புழுதிப் படலம் சூழ்ந்திருக்கப் பஸ்ஸிலிருந்த பிரயாணிக் கும்பல் மசால் வடைக்காகக் கீழே இறங்கியது.

சின்னத்துரையின் கைகள் இலையை எடுப்பதும், வடைகளை வைப்பதுமாக மாயமாக வேலை செய்தன. அந்த அவசரத்திலே யார் யார் வந்தார்கள், என்ன கொடுத்தோம் என்றுகூட அவனுக்குத் தெளிவாகத் தெரியாது.

''இருக்கிறது அவ்வளவையும் கட்டிக் கொடுத்து விடுமையா! ஒரு ரூபாய்ச் சரக்குத்தானே?''

இந்தக் குரலைக் கேட்டு அவன் சட்டென்று நிமிர்ந்து எதிரே நின்றவரைப் பார்த்தான். அவன் விழிகள் நிலைத்து நின்றன. முப்பது முப்பத்தைந்து வயதிருக்கலாம். வெள்ளைச் சட்டை— வேஷ்டி. தோளில் மடித்த துண்டு ஒன்றிருந்தது. கண்களில் ஒரு அலட்சிய பாவம் நெளிந்தது. நெற்றியிலே இரண்டு சுருக்கங்கள் தெரிந்தன.

''என்ன பார்க்கிறீர்? எல்லாவற்றையும் கட்டிக் கொடும்.''

சின்னத்துரை உணர்வுக்கு வருமுன் இன்னொரு எதிர்பாராக்குரல் ஒலித்தது.

''அத்தனையுமா நீங்கள் வாங்கிக் கொள்ளப் போகிறீர்கள்?''

அந்தக் கிளிக் குரலுக்கு உரியவள் சின்னத்துரையின் இடது கைப் பக்கம் நின்று கொண்டிருந்தாள். அவள் கருங் கூந்தலையும், சந்தன மேனி எழிலையும் நீல நிறக் கதர்ச் சேலையையும் மாறி மாறிப் பார்த்து, அந்த வெள்ளை வேட்டிக்காரருடன் ஒப்பிட முயன்று, அந்தோனி திணறிக் கொண்டிருந்தார் என்ற விஷயம் அவனுக்கு அத்தனை நேரம் தெரிந்திருக்க நியாயமில்லை.

கிளிமொழியாளின் கேள்விக்கு அவர் சிரித்தார்.

''ஏன்? இருக்கட்டுமே? இந்த வடை இந்தப் பிராந்தியத்தில் மிகப் பிரசித்தி பெற்றதாம். வாசனையைப் பார்'' என்று மூச்சைத் தாராளமாக இழுத்து விட்டவர், ''எல்லாவற்றையும் கொடுமையா!'' என்று கூறி ஒரு இரண்டு ரூபாய் நோட்டைக் கண்ணாடிப் பெட்டியின் மேல் வைத்தார்.

சின்னத் துரையின் கண்களில் முன்போல் ஒளியில்லை. யந்திரம் போல் பொட்டலம் கட்டினான். கண்ணாடிப் பெட்டியின்மேல் அவன் வைத்த பொட்டலத்தை அந்த மங்கை நல்லாள் தன் கொழுந்து விரல்கள் தெரிய எடுத்துக் கொண்டாள். சின்னத் துரை அவளையே கண் கொண்டாமல் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த சமயம்...

''டேய், சின்னுவாடா? நீதானா?''

சின்னு நிமிர்ந்து பார்த்து விட்டுச் சிரிக்க முயன்றான்.

அந்த வெள்ளை வேட்டிக்காரருக்குத் தலை முன்புறம் வழுக்கை. பின்னால் அர்த்தசந்திரன் போல் நரைத்திருந்தது. விழிகளைச் சுருக்கிக்கொண்டு அருகில் வந்து, ''ஏண்டா சின்னுதானே?'' என்று கேட்டார் அவர் மறுபடியும்.

''ஆமாம். சௌக்கியமா மாமா?'' என்று சின்னு திருப்பி விசாரித்தான். விசாரணையிலே உயிர் இல்லை.

அப்போது அந்த மங்கை, அந்தப் புருஷனின் செவிகளிலே ஏதோ கேட்டாள். அவன் சிரித்துக் கொண்டு ஏதோ பதில் மொழிந்தான்.

''எத்தனை நாளாச்சு? அம்மா சௌக்கியமா?'' என்று பெரியவர் விசாரணையைத் தொடங்கினார்.

''அம்மா போய் வருஷமாச்சு. அப்புறமே இங்குதான் இருக்கிறேன்.''

''குழந்தை குட்டிகள் உனக்கு ஏதேனும் உண்டா?''

''இல்லே மாமா. கல்யாணமே.... இல்லே......''

அவன் முகம் விளக்கெண்ணெய் குடித்துவிட்டுச் சிரிக்க முயலுவதைப் போல் இருந்தது.

''கல்யாணம் இல்லேயா? ஏண்டா?'' என்று மிகுந்த வியப்புடன் கேட்டார் அந்தப் பெரியவர்.

அவன் பதில் அளிப்பதற்குள் பஸ் முழங்கியது. பஸ் புறப்படப் போவதை அறிந்து கொண்ட பிரயாணிகள் வேகமாகத் தங்கள் ஆசனத்தில் போய் அமர்ந்து கொண்டனர்.

''...ம்......? வாயேன் வீட்டுக்கு? ஏண்டா! கஜேந்திரபுரம்தான்; நாலு, ஷண்முகம் தெரு. ஏண்டா வர்றயா?''

அவருடைய அவசர அழைப்புக்குச் சின்னத்துரை தலையை ஆட்டினான்.

''என்ன, கட்டாயம் வா! விலாசம் நினைவிலே வைத்துக் கொண்டாயா'' என்றார் பெரியவர் மறுபடியும்.

சின்னத்துரை தலையை நன்றாக ஆட்டி ''ஆகட்டும் மாமா, நன்றாக நினைவிருக்கிறது!'' என்றான்.

''ராஜாவுக்குத் தெரிகிறதோ?'' என்று வடைப் பொட்டலத்துடன் நின்றவனிடம் கேட்டுக் கொண்டே பெரியவர் பஸ்ஸில் ஏறினார்.

அவர்கள் இருவரும் கடைசியாகச் சின்னுவைத் திரும்பி ஒரு பார்வை பார்த்தார்கள். அந்தப் பெண்ணின் சிரிப்பு குழந்தையின் சிரிப்பைப் போல் இருந்தது. பஸ்ஸில் ஏறி விட்டார்கள்.

கண்டக்டர், 'போ, ரேய்ட்!' என்று அவனுக்கே உரித்தானமொழியிலே உத்தரவு கொடுக்க, புழுதிப்படலம் குப்பி திறக்கப்பட்ட வாயுவைப் போல் எழும்பிச் சுழன்று பரவியது.

சின்னத்துரை முகம் இருள, போன பக்கமே பார்த்துக் கொண்டு எத்தனை நேரம் சிலையாய் நின்றானோ?

''அவுங்க யாரு தம்பி?...''

அந்தோனி அவன் சிந்தனையைப் பிடித்து இழுத்த பிறகுதான் தன் நினைவுக்கு வந்தவனாய்த் திரும்பினான்.

''அந்தப் பெரியவர் யாரு தம்பி? பார்த்தால் அப்பா, மகன், மருமகள் போலிருந்ததே?''

அந்தோனி கேள்விகளைப் போட்டு விட்டுச் சின்னுவை ஆழம் பார்ப்பது போல் கூர்ந்து நோக்கினார்.

''ம்...அப்படித்தான் தோணுது!'' சின்னத்துரை நெடுமூச்செறிந்தான். அந்தோனி தன் ஊகத்தை ஊர்ஜிதம் செய்து கொண்டார். ஒரு சிரிப்பு ஒளிர்ந்தது. ''ஏன் தம்பி? கல்யாணம் கட்டிக்கலியான்னு கேட்டாரே? அவர் உங்க ஊர்க்காரரோ?''

''ம், எப்போதோ சிநேகம்....'' என்று உள்ளே திரும்பியவன் காப்பித் தம்ளர்களை எடுத்து வந்து தொட்டியில் கழுவலானான். ''அந்தப் பெண்ணையும் கூட முன்னாடி தெரியுமோ?''

''ம், நான் என்ன கண்டேன்? பெரிய மனிதர்கள்!'' அவனுடைய முகமண்டலம் மாறி, கண்களிலே கனல் தெறித்தது. உதடுகள் எதையோ சொல்வதற்குத் துடித்தன. ஆனால் அவன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.



அவனுள் ஏதோ கடல் பொங்கி எழுவது போலும் அலைகள் சுழன்று அடிப்பது போலும் அந்தோனிக்குப் பிரமை தட்டியது.

''அப்பா, மகன்னு ஜாடை தெரியுது. பெரிய பாளையத்திலே ஆதாரக் கல்விப் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தாளாம் இந்தப் பெண். டிரைவர் சொன்னார். அது தான் அவர் சம்சாரமோ, உனக்குத் தெரியுமோன்னு கேட்டேன், தம்பி!''

''ஹூம்! வெளி வேஷம். அந்தப் பெரிய மனிதன் யாரென்று தெரியவில்லையா உங்களுக்கு?'' என்று அசுவாரஸ்யமாகக் கேட்டான் சின்னத்துரை.

''எனக்கு உன் விஷயம் எல்லாம் என்ன தெரியும், தம்பி?''

''சாயங்காலம் சுருக்கக் கடையை மூடிவிட்டு வாங்க அண்ணாச்சி, சொல்லுகிறேன்! அயோக்கியத்தனம்! அக்கிரமம்!'' என்று சின்னத்துரை மொழிந்த போது, அந்தோனியின் முகத்தில் வெற்றிச் சிரிப்பு ஒளிர்ந்தது.

அன்று வழக்கத்துக்கு முன்பாகவே கடையைச் சாத்திவிட்டுச் சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு அந்தோனி அந்தப் பெஞ்சுக்கு வந்து விட்டார் என்பதைக் கூறவேண்டுமா? (தொடரும்)

இது
உங்கள் கூந்தலை
புதுமை அடையச்
செய்கிறது...




# கியோ
# கார்ப்பின்

மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட இக் கூந்தல் தைலம் நலிந்து போகும் மயிர்க் கால்களுக்குப் புத்துயிர் அளிக்கிறது



தயாரிப்பாளர்கள் :

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (பிரைவேட்) லிட்.
கியோ - கார்ப்பின் டிவிஷன்
கல்கத்தா - பம்பாய் - டெல்லி - சென்னை

# வட்ட மேஜை

## செம்மங்குடியின் ரம்மிய கச்சேரி

கொஞ்ச நாட்களுக்கு முன்னால் தில்லியிலே பூகம்பம் வந்தது : அதைத் தொடர்ந்து வெள்ளமும், கூடவே தண்ணீர்க் கஷ்டமும் வந்தன. சரி, பிரளயமே துவங்கிவிட்டது என்று மனச்சோர்வு அடைந்திருந்தபோது, புதுதில்லி கர்நாடக சங்கீத சபாவில் செம்மங்குடியின் கச்சேரி நடக்கப் போவதாக நோட்டீஸ் வந்தது. இதைப் பார்த்ததும், இன்னும் நல்ல காலம் பாக்கியிருக்கிறது என்று உற்சாகமடைந்தோம்.

செம்மங்குடியாரிடம் ஒரு சிறந்த அம்சம் உண்டு. ''வாய்த்துக் கொண்டால்'' ''மனசு வைத்தால்'' ''சுருதி சேர்ந்தால்'' ''அமைந்து விட்டால்'' என்ற சமாசாரமே அவரிடம் கிடையாது. உழைத்து, லயித்து, ரஸித்துப் பாடுகிறார். அன்றைய நாலரை மணிக் கச்சேரியில்,

1. யாரும் எழுந்திருந்து போக வில்லை, 2. ஆபீஸ் சமாசாரம் பேசவில்லை, 3. ஸ்திரீ ரத்தினங்கள் நிட்டிங் போடவில்லை, 4. பிரமுகர்கள் வந்தனுபசாரம் நீட்டவில்லை, 5. தனி ஆவர்த்தனத்தின்போது காப்பி இளைப்புக்குப் போகவில்லை.

இத்தியாதி. இதனின்றும் கச்சேரி எவ்வளவு சபா ரஞ்சிதமாயிருந்ததென்று ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

சில கீர்த்தனைகளை மாத்திரம் குறிப்பிட்டு விட்டுச் செம்மங்குடி அவைகளை எவ்வளவு கையாண்டிருப்பார் என்பதை உங்கள் ஊகத்துக்கே விட்டு விடுகிறேன். சங்கராபரணம் - எந்துகுவேதலா — பைரவி — ராகம், தானம், பல்லவி—சரசரப்ரியா—பக்கலநிலபடி. பைரவியைக் குறித்து இவ்வூர்ப் பத்திரிகைகள் குறிப்பிடும்போது, சும்மா அப்படியே வார்த்தைகளைக் கொட்டியிருந்தன.

தில்லிவாசிகளின் சமீப அனுபவத்துக்கு ஏற்ப இந்தக் கச்சேரியிலும் ஸ்வரப் பிரஸ்தார பூகம்பம், ஸங்கதி வெள்ளம் எல்லாம் இருந்தன. ஆனால் எல்லாம் இன்பம் பயக்கும் அனுபவங்களாகத்தான் அமைந்தன. பக்க வாத்தியம் வாசித்தவர்கள் கிருஷ்ணன், பழனி சுப்புடு, கோதண்டராமய்யர் என்று சொன்னால் போதுமானது.

புதுதில்லி
6—11—56

சுப்புடு

## கவனிப்பார்களா ?

என் சகோதரன், இந்த வருஷம் எஸ். எஸ். எல். சி. பரீட்சை எழுதி அதில் தேர்ச்சியும் அடைந்தான். அவனுக்கு எஸ். எஸ். எல். சி. சர்டிபிகேட்டும் கிடைத்தது. அவனைக்கோயம்புத்தூர் 'பாலிடெக்னிக்' கில் சேர்க்க வேண்டும் என்று விரும்பினேன். அப்பொழுது நான் திருப்பூரில் இருந்தேன். என் சகோதரன், மதுரை ஜில்லாவிலுள்ள பெரியகுளத்தில் இருந்தான். அவனைத் திருப்பூர் வரும்படி கடிதம் எழுதினேன். கடிதம் கிடைத்த மறுநாள் இரவு கோயம்புத்தூர் பாஸஞ்சரில் பிரயாணம் செய்து திருப்பூர் வந்து சேர்ந்தான். ரயிலில் பிரயாணம் செய்யும்பொழுது, அவன் கொண்டு வந்த சர்டிபிகேட்டு, துணிகள் முதலியன திருட்டுப் போய் விட்டன. இது நடந்தது 1956 ஜூன் மாதம். திரும்ப மற்றொரு சர்டிபிகேட்டு பெறுவதற்கு வேண்டிய பாரங்களைப் பூர்த்தி செய்து அனுப்பினோம். அனுப்பிக் கொண்டு இருக்கிறோம். ஆனால் கிடைக்கும் வழி இல்லை. நாங்கள் பெற்றோர் இல்லாத ஒரு மத்திய தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். எங்கள் கவலை தீர என் சகோதரனுக்கு விரைவில் சர்டிபிகேட் கிடைக்கும் வகை செய்வார்களா ?

ஐ. என். எஸ். '' சக்தி ''
பம்பாய்
11—10—56

ஜி. ஏ. பத்மநாபன்

## துயரம் தாங்க முடியாது !

''பயிர்த் தொழிலைக் கெடுக்க வேண்டாம்'' என்று 'கல்கி' 14—10—56 இதழில் வெளியான தலையங்கம் துன்பப்படும் சிறிய மிராசுதார்களாகிய எங்கள் உள்ளத்துக்குப்பால் வார்த்ததுபோல் இருக்கிறது. நமது சர்க்கார் மிராசுதார்களின் மென்னியைப் பிடித்து உலுக்குகிறது. உதாரணமாக, எங்கள் கிராமம் வானம் பார்த்த பூமி. நெல் விளைந்து ஏழு ஆண்டுகள் ஆகின்றன. தினைகைக் கொண்டுதான் வாழ்ந்து வருகிறோம். எங்கள் கிராமத்திலுள்ள சில மிராசுதார்கள் இந்தமானம் பார்த்த பூமியை நம்பி வாழ முடியாத நிலையில் ஆற்றுப் பாசானமாகிய நகரங்களில் குறிப்பாக ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, வெள்ளூர் ஆகிய இடங்களில் தங்களது ஜீவனத்துக்காக இரண்டு போகம் விளையக்கூடிய நன்செய் நிலங்கள் வாங்கி இருக்கிறார்கள்.

காந்திமகானின் அரசியல் புதல்வரும் ஆத்மீகப் புதல்வரும்



ஒரு தண்ணீர்த் தட்டு ஏற்பட்டு விட்டால் அது இது என்று ஒழுங்காக அங்கும் கட்டுக் குத்தகை தர மாட்டார்கள். உழவர்கள் நிலச்சுவான்தார்களை மதியாமல் அன்புடன் பழகாமல் ஏட்டிக்குப் போட்டி பேச ஆரம்பித்து விட்டார்கள். நமது சர்க்காரும் ஒத்துப்பாட ஆரம்பித்து விட்டார்கள். பணம் கொடுத்து நிலம் வாங்கினவன் துயரம் நிறைந்த குரலில் சர்க்காருக்கு முறையிட்டாலும் நமது சர்க்கார் உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்று மனம் போனபடி சட்டதிட்டங்களை இயற்றிக் கொண்டு சிறிய மிராசுதார்களாகிய எங்களை இம்சித்தால் நாங்கள் எப்படி வாழ முடியும்? மிராசுதார்கள் வாழ்ந்தால்தான் உழவனும் வாழமுடியும்.

அம்பலசேரி
20—10—56 மு. மா. முத்தையா பிள்ளை

## இனும் விவசாயிகளின் அவதி

திருநெல்வேலி ஜில்லா சங்கரன்கோவில் தாலூக்காவிலுள்ள எல். அக்ரஹாரம்கிராமம் இனும்தார்களின் உரிமையில் இருந்து வருகிறது. மேற்படி கிராமம் 1936-வது வருஷத்து இனும் 'செட்டில்மெண்டார்' ஜமீன் ஒழிப்பில் சேர்க்கவில்லை. 1947-வருஷம் வரிக் குறைப்புச் சட்டத்தில் எடுத்து மேற்படி கிராமத்துக்குக் கிராம முனிசிப், கர்ணம் தவிர தலையாரி இல்லாததால் வசூல் செய்வதில் தாமதம் ஏற்படுகிறது.

ஏழு எட்டு வருஷங்கள் வசூல் செய்யாமல் விவசாயிகளிடம் திடீர் என்று நடவடிக்கை எடுத்து வசூல் செய்யும்பொழுது விவசாயிகள் கஷ்டத்துக்கு ஆளாகிறார்கள். தவிர இனும்தார்களும் வருஷா வருஷம் 'அலாட்மெண்ட்'கொடுபடாமல் கஷ்டப்படுகிறார்கள்.

ஆகையால் இனியாவது அந்தக் கிராமத்தைப் பரிசீலனை செய்து ஜமீன் ஒழிப்பில் எடுத்து விவசாயிகளுக்கும் கிராம அதிகாரிகளுக்கும் சென்னை சர்க்கார் ஆவன செய்யுமென நம்புகிறேன்.

இளையரசனேந்தல்
3—11—56 எம். வேங்கடசுப்ரமணியம்

# கண் நிறைந்த மலர்

நாளை வருமென ஏங்கி நின்ற எங்கள் தலை தீபாவளிக்கு அணியாம் புதுமலர் இன்றே வந்தது. மிக மகிழ்ச்சி. மலரை இன்னும் முழுமையாக நுகரவில்லை. எனினும் மலர்ச் சிறப்பை எழுத எண்ணம் துடிக்கிறது. ஆனால் ஏட்டிலே இடம் போதாதே என்ற கவலை குறுக்கிடுகிறது. ஒரே ஒரு வரி. தங்கள் மலர் மற்ற மலர்போன்ற வெறும் காட்டு மலரல்ல. ''காசிப்பட்டின் மென்மை, காட்டுத் தேனின் சுவை: கார்கால மின்னலின் ஜொலிப்பு''— அத்தனையும் கலந்த எழிற்கலை மலரே தங்கள் வெளியீடாகும்.

அரச்சலூர்
31-10-56 நாகலக்ஷ்மி ஜெயந்திநாதன்

★

தீபாவளி மலர் மணமும் அழகும் நிறைந்து கண் நிறைந்த மலராகத் திகழ்கிறது. 'கல்கி'யின் ''குயில்காள்!'' என்ற சந்தக் கவிதையும், ராஜாஜியின் சிறுகதையும் மலருக்கு மணிமகுடமாக அமைந்துள்ளன.

'மணிய'த்தின் ''சிற்பச் சித்திரங்கள்'', ''வால்மீகி, கம்பர், துளஸிதாஸர் தரும் காட்சி'', 'ரெஸாக்'கின் ''சிந்தாமணிக் கதைச் சித்திரம்'', 'கனு'வின் ''பிறைசூடிய பெருமான்'', ''பாரதத் திருவிழா'' ஆகியவை போற்றிப் பாதுகாக்கக்கூடிய அரிய ஓவியங்களாகத் திகழ்கின்றன. சாமாவின் பாப்பா மலர் ஹாஸ்யச் சுவைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. முருகன் மீது என். எஸ். சிதம்பரத்தின் கவிதை வெகு இனிமையாக இருக்கிறது.

எழில் மிக்க இம்மணக்கும் மாமலரிலே ஒரே ஒரு குறை என்ன வென்றால், இதில் யாதொரு குறையும் இல்லையே என்பதுதான்!

சென்னை
7—11—56 மாமல்லன்

இவ்வருஷ தீபாவளி மலர் பலவகையிலும் சிறப்புற்று விளங்குகிறது. பொறுக்கி எடுக்கப்பட்டவை போன்ற கதைகள் - கட்டுரைகள் ஒரே சித்திரமயமாக இருக்கிறது. கனுதேசாய், ராஜம், மணியம் - இம்மூவருடைய ஓவியங்களும் மலருக்குத் தனிச் சிறப்பு அளிக்கின்றன.

மலரைப் படித்து முடித்த பிறகு ஒரே ஓர் எண்ணம்தான் மேலோங்கி நிற்கிறது. மூன்று ரூபாய்க்கு இத்தனை பக்கங்களுடன் இவ்வளவு சிறப்பாக ஒரு மலரை எப்படிக் கொடுக்க முடிந்தது என்பதுதான் அது. ரொம்பப் பாராட்டத்தக்க விஷயம். 'ஹிந்து'வில் முதலிடம் கொடுத்து நல்ல மதிப்புரை எழுதி இருப்பது பொருத்தமானதேயாகும்.

ஷெனாய்நகரம்
5—11—56 எம். எல். சபரிராஜன்

★

'கல்கி' தீபாவளி மலர் கிடைத்தது. மூன்று ரூபாய் விலையில் இவ்வளவு அற்புத மலர் கிடைக்குமென்று எதிர்பார்க்கவில்லை.

'மணியம்' தீட்டியுள்ள அட்டைச் சித்திரமும், கனுதேசாயின் 'பித்தா பிறைசூடி', 'கண்ணன் பிறந்தான்', 'வில்லை வளைத்தான்' ஆகியவையும், சிட்னியின் பஞ்சரதங்களும், ராஜத்தின் 'நப்பின்னையும் கண்ணனும்' உயிரோவியங்கள். 'நீண்ட மதர் விழி என் நெஞ்சம் கிழித்துலவும்' என்ற தனிப்பாடலுக்கான 'ரவி'யின் சித்திரம் உண்மையில் நெஞ்சையே கவர்ந்து விட்டது.

மொத்தத்தில் மலர் ஒரு சித்திரக்கூடம்! விலையோ கொள்ளை மலிவு!

மன்னார்குடி
5—11—56 கடையநல்லூரான்

# படித்துப் பாருங்கள்

## Economic Theory and Practice in India

நாட்டில் தினமென்று விலைவாசிகள் ஏறிக் கொண்டே போகின்றன. இதற்குக் காரணம் என்ன? பணப் பதுக்கலா? பண வீக்கமா? அல்லது அத்தகைய நிலைமைக்கு வேறு காரணம் உண்டா? இந்தக் கேள்வி களைப் பொருளாதார நிபுணர்களும் சர்க்கார் அதிகாரிகளும் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வருமுன் விலைவாசிகளின் உயர்வு ஏழை மக்களை மிகவும் வாட்டி விடுகின்றது. விலைவாசிகளின் உயர்வையோ, பணப் பதுக்கலையோ, பண வீக்கத்தையோ தடுக்க முடியாத அதிகாரிகள் 'வயிற்றை இறுகக் கட்டுங்கள்,' 'சிக்கன முறையைக் கைக் கொள்ளுங்கள்', 'நாடு செழிக்கத் தியாகம் செய்யுங்கள்' என்ற பல்லவிகளைத் தாராளமாக உபயோகிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். இத்தகைய அவல நிலைமையையும் அதற்குப் பரிகாரம் என்ன என்பதையும் ஸ்ரீ சுதீர்தாஸ் குப்தா சில மாதங்களுக்கு முன் டில்லி பொருளாதாரக் கல்லூரியில் நிகழ்த்திய பிரசங்கத்தில் விளக்கிக் கூறினார். அந்தப் பிரசங்கம் "இந்தியாவில் பொருளாதார முறையும் அனுஷ்டானமும்" என்ற தலைப்பில் ஒரு சிறு நூலாக ஆங்கிலத்தில் இப்போது வெளியிடப் பட்டிருக்கிறது.

கிடைக்குமிடம் : Sudhir Das Gupta, J.K. Organisation, Western Zone, J. K. Building, Bombay-1. விலை ரூ. 1—0—0.

## India's Economic Relations

உலகில் உள்ள எந்த நாடாயினும் அதன் செழுமையும் சுபிட்சமும் அதனுடைய வியாபார முன்னேற்றத்தைத்தான் பொறுத்திருக்கின்றன. பண்டைய காலத்தில், அதாவது பாரத நாட்டில் அன்னியரின் ஆதிக்கம் ஏற்படுமுன், இந்தியா பல வெளிநாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தது. அக்காலத்தில் இந்தியாவிலிருந்து எட்டுத் திசைகளிலும் உள்ள வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகி வந்த சாதனங்களின் அட்டவணையைக் கவனிப்போர் பிரமிக்காமல் இருக்க முடியாது. இந்தியர்கள் மலைகளையும், பாலைவனங்களையும், கடல்களையும் தாண்டி ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் சென்று வியாபாரம் செய்து வந்தனர். இந்தியாவில் உற்பத்தியான சாதனங்களை வெளிநாட்டினர் போட்டா போட்டி போட்டுக் கொண்டு வாங்கிய காலம் உண்டு. ஆனால், இந்தியாவில் அன்னியர் ஆதிக்கம் ஏற்பட்டபின் மேற்படி வியாபாரம் குன்றியது; நாட்டின் சுபிட்சமும் மறைந்தது. எனினும், இந்தியா சுதந்திரம் பெற்றபின் மீண்டும் வெளிநாடுகளுக்கு இந்தியாவின் ஏற்றுமதிகள் வருஷத்துக்கு வருஷம் அதிகமாகி வருகின்றன. பர்மா, இலங்கை, மலேயா, ஹாங்காங், தாய்லந்து, இந்தோ-சீனா, இந்தோனேஷியா, ஜப்பான், சீனா, பிலிப்பைன் தீவுகள், நியூஸிலந்து, கானடா, அமெரிக்கா முதலிய மற்றும் பல நாடுகளுடனும் இந்தியாவின் வியாபாரத் தொடர்பு சம்பந்தமான பல அரிய விஷயங்கள் புள்ளி விவரங்களுடன் "India's Economic Relations" என்ற இந்த நூலில் அடங்கி யிருக்கின்றன. இதன் ஆசிரியரான ஸ்ரீ பி. என். கங்குலி முப்பது வருஷ அனுபவமுள்ள பொருளாதார நிபுணர். பல கலாசாலைகளில் பொருளாதாரப் பேராசிரியராகப் பணியாற்றியவர். வெளி நாடுகளில் நடந்த சர்வதேச வர்த்தக மகாநாடுகளில் இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்று புகழ் பெற்றவர். பொருளாதார சாஸ்திர சம்பந்தமாக இவர் பல நூல்கள் எழுதியிருப்பதுடன், "இந்தியன் எகனமிக் ரெவ்யூ" என்ற பத்திரிகையின் ஆசிரியராகவும் இருந்து வருகிறார்.

கிடைக்குமிடம்: Orient Longmans Ltd., Bombay, Calcutta, Madras. விலை: ரூ.9-8-0.

## சுந்தரகாண்டம் (வால்மீகி ராமாயணம்)

ஸ்ரீ ராம தூதனான அனுமான் சீதாப் பிராட்டியாரைத் தேடிக் கண்டு பிடித்து, அவரது சோகம் தவிர்த்து, மீண்டும் ஸ்ரீராம பிரானிடம் வந்து அவருக்கு மகிழ்வூட்டும் செய்தியைச் சொல்லி இலங்கைக்குப் படையெடுத்துப் போக ஆயத்தம் செய்த வரலாற்றைக் கூறுவது சுந்தர காண்டம்.

சுந்தர காண்டத்தைப் பாராயணம் பண்ணும் விருப்பம் இல்லாத ஆஸ்திகர் யாரும் இருக்க மாட்டார்கள். எத்தனையோ மொழி பெயர்ப்புக்களும், எத்தனையோ பிரசுரங்களும் இதுவரையில் வெளிவந்து விட்டன. இந்தப் பிரசுரத்தில் என்ன விசேஷம் என்றால், வடமொழிச் சுலோகங்கள் தமிழ் எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. தேவநாகரி லிபி தெரியாத பல தமிழர்களுக்கு இது பாராயணம் பண்ணச் சௌகரியமாயிருக்கும். இந்நூலைத் தமிழில் மொழி பெயர்த்தவர் எளிய நடையில் அழகாக மொழி பெயர்த்திருக்கிறார். சுலோகங்களின் உதவியில்லாமலே தமிழ் மொழிபெயர்ப்பை மட்டும் படித்தால் கூடக் கதைப் பகுதி இயைந்து வருமாறு சுவாரஸ்யமாக எழுதியிருக்கிறார். இது மிகவும் பாராட்டுக்கு உரியது.

உரை எழுதியவர்: வி. ஜி. ரங்காசார்ய சிரோமணி; பிரசுரம்: பி. டி. பாணி கம்பெனி, 17, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை ரூ. 6-0-0

## பாதாளச் சுரங்கம்

கதையின் தலைப்பே இது ஒரு மர்மக் கதை என்பதற்குச் சான்று. மர்மக் கதைக்கு ஒரு மர்ம மனிதன் வருவது இயல்புதானே? அவன் மர்மமான பல சாகஸச் செயல்கள் புரிந்து பலரைத் திக்குமுக்காட வைக்கிறான். கடைசியில் பாதாளச் சுரங்கத்தின் ரகசியத்தைப் பகிரங்கப் படுத்திக் கதையை முடிக்கிறான். இந் நூலின் ஆசிரியர் என். எஸ். ராஜ் என்பவர். பிரசுரம்: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. விலை ரூ. 1—0—0.




மனித குலத்தின் மாணிக்கமும் பாரத ரத்தினமுமான பண்டித ஜவாஹர்லால் நேருஜியின் அறுபத் தெட்டாவது பிறந்த தினத்தில் உலக மக்களுடன் நாங்களும் எங்கள் நல் வாழ்த்துக் களைத்தெரிவித்துக்கொள்கிறோம்.

★

நம்பிக்கையாகவும், நாணயமாகவும் தற்கால நாகரிகத்திற்கு ஏற்றதுமான

**வெள்ளிச் சாமான்களுக்கு**

உகந்த இடம்

★

**நாதெள்ள சம்பத்து செட்டி சன் & கோ., (பிரைவேட்) லிட்.**

177, சைனுபஜார் ரோடு, சென்னை-1

**வலுவிழந்த நரம்புகளுக்கு வலிமை ஊட்டுகிறது**

25, 50, 100 மாத்திரை கள் அடங்கிய புட்டி களில் கிடைக்கும்



**பி. ஐ. கால்**

ஜீரண சக்தியை அதி கரித்து மலச்சிக்கலை அகற்றுகிறது

**B.I. CHOL**



பெங்கால் இம்யூனிடி கம்பெனி லிமிடெட்

கல்கத்தா-13

சென்னை டிப்போ:

மேஸர்ஸ் மஹேந்திரா & கோ., 161, நைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

# அபலை அஞ்சுகம்

## 20. "என் பெயர் சுப்பய்யாவா!"

பார்வதி அம்மாளைத் தனியாக விட்டுவிட்டுப் போனதைக் கேட்டதும் நிர்மலாவுக்குக் கடுங் கோபம் வந்ததல்லவா? அதைக் கண்டு சொக்கன் நடுநடுங்கிப் போனான்.

"கொஞ்ச நேரம் அந்தக் கோட்டைகளைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்தேன். அவ்வளவுதான். அவங்களைக் கேட்டுக் கொண்டுதான் போனேன்" என்றான் சொக்கன் மிகுந்த தயக்கத்தோடும் பயத்தோடும்.

"முட்டாள்தனம்!" என்று சீறியபடியே நிர்மலா ஒரு பெருமூச்சு விட்டாள். "நம்முடைய லட்சியம், குறி எல்லாம் அந்தக் கிழவிதான் என்பதை மறந்து விட்டீர்களா? நம்முடைய நோக்கம் நிறைவேறும்வரையில் அந்தக் கிழவியின் உயிருக்கு ஆபத்து ஏற்படாத வண்ணம் காப்பாற்ற வேண்டுமென்று உங்களுக்குத் தெரியவில்லையா? நாம்திட்டமிட்டபடி இன்னும் உயில் எழுதப் படவில்லை. உயில் எழுதிக்கையெழுத்துப் போடும் வரையில் அவளைப் பாதுகாக்க வேண்டியது நம்முடைய கடமையல்லவா?" என்றாள் அவள் ஆத்திரத்தோடும் வேகத்தோடும்.

"அது உண்மைதான். நான் கொஞ்சம் தவறுதான் செய்துவிட்டேன். இப்பொழுது ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. உயில் எழுத வேண்டிய ஏற்பாடுகளை இப்பொழுதே செய்தால் என்ன? யாரேனும் ஒரு வக்கீலை அழைத்து...." என்று சொக்கன் மனத்தில் சிறிது அச்சம் கொண்டவன் போல வார்த்தைகளை மென்று விழுங்கினான்.

நிர்மலா மறுபடியும் சீறினாள். "நீங்கள் உங்கள் வேலையை ஒழுங்காகக் கவனித்தால் போதும். அதைப் பற்றிய கவலைகளெல்லாம் எனக்கு. நான் ஒரு விதமான ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கையில் உங்களுடைய அஜாக்கிரதையினால் என்னுடைய ஏற்பாடுகளெல்லாம் பாழாகி விட்டன. நல்ல வேளை அந்தக் கிழவிக்கு ஏற்பட்ட தாக்குதல் அவள் உயிரையே பலி வாங்காமல் போயிற்றே! அதுவும் நம்முடைய அதிர்ஷ்டம்தான்" என்றாள்.

சொக்கன் கெஞ்சுகிறவன் போல் அவள் முகத்தைப்பார்த்துக்கொண்டே, "ஏதோ தவறு நடந்து விட்டது. அது என் பிசகுதான். இப்பொழுது ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை. அவங்க



உடல்நிலை சரியானவுடனே அவர்கள் கையில் ஒரு பேனாவைக் கொடுத்து உயிலில் கையெழுத்து வாங்குவதா கஷ்டம்?'' என்றான்.

* * *

விஜயரங்கன் ஆற்றங்கரையில் மூர்ச்சையுற்ற கிழவியைக் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் அதிவேகமாக எலிக்கோட்டையை நோக்கி ஓடினான் அல்லவா? அந்தச் சமயத்தில் அவன் தன் உடல் நிலையையும் பலஹீனத்தையும் நினைக்கவேயில்லை. அவனுடைய நினைவெல்லாம் அந்தக் கிழவியை எப்படிக் காப்பாற்றுவது என்ற நோக்கத்திலேயே இருந்தது. அவன் பல வழிகளிலும் தாறுமாறாக நடந்து கடைசியில் சரியான பாதையைக் கண்டான். அவன் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க மீனாச்சி இருக்கும் கட்டடத்து வாசலுக்கு ஓடிவந்து நின்று, ''அஞ்சுகம், கதிரா, மருதை..'' என்று பலமாகக் கத்தினான். வாசலில் நின்று விஜயரங்கன் போடும் கூச்சலைக் கேட்ட அஞ்சுகமும் மீனாச்சியும் பதட்டத்துடன் ஓடி வந்தனர். விஜயரங்கனின் வெளிறிய முகம் அவர்களுக்குக் கலக்கத்தை உண்டு பண்ணுவதாய் இருந்தது.



அஞ்சுகம், "என்ன அத்தான் இது?" என்று பதறியபடியே கூச்சலிட்டாள். மீனாட்சி நடுங்கிய வண்ணமே திகைத்து நின்றாள். 'உடல் நிலை குணமாகி வந்த அவனுக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது?' என்று மீனாட்சி கலங்கினாள். மீனாட்சி மெதுவாக விஜய ரங்கனை நெருங்கி, "என்ன நடந்தது? என்ன உனக்கு ஏற்பட்டு விட்டது? ஏன் இந்தப் பதற்றம்?" என்று கேட்டாள்.

"எனக்கொன்றுமில்லை. யாரோ ஒரு கிழவி ஆற்றங் கரையில் மயக்கம் போட்டுக் கிடக்கிறாள். ஏன், சாகக்கூடிய நிலையில் இருக்கிறாள்" என்றான் அவன்பதைபதைப்போடு.

விஜயரங்கனுக்கு எவ்வித ஆபத்தும் இல்லையென்று அறிந்தவுடன் மீனாட்சிக்குச் சிறிது ஆறுதல் ஏற்பட்டது. யாரோ ஆற்றங் கரையில் பிரக்ஞையற்ற நிலையில் இருப்பதைக் கண்டுதான் அவன் இத்தகைய பதட்டம் அடைந்துள்ளான் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். அவள் முகத்தில் எழுந்த பரபரப்பான குறி மாறி எப்பொழுதும் போல் கடின முகத்தோற்றம் உடையவளாய், "யாரோ மயக்க



முற்றுக் கிடப்பதைப் பற்றி நமக்கு என்ன கவலை? அப்படி யாரேனும் ஒரு கிழவி இந்தப் பக்கம் வந்திருந்தால் தனிமையில் வந்திருக்க முடியாது. யாரேனும் துணைக்கு வந்திருப்பார்கள். அதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? ஊரில் போகிறவர்கள் வருகிறவர்களைப் பற்றியெல்லாம் நாம் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா?" என்றாள்.

"இல்லை. நாம் போய்ப் பார்ப்பது நல்லது. ஆபத்து என்பது எல்லோருக்கும் உள்ளதுதானே! யாராயிருந்தாலும் நம்மால் உதவி செய்ய முடியுமானால் செய்வது தான் மிகவும் நல்லது" என்றாள் அஞ்சுகம்.

"ஆமாம்! நாம் அந்தக் கிழவிக்கு உதவி செய்வதுதான் நல்லது. அவள் அப்படி மயக்கமுற்றுக் கீழே விழுவதற்குக் காரணம் நான்தான் என்று நினைக்கிறேன். அவள் ஆற்றங்கரை ஓரமாக வந்து கொண்டிருந்தாள். நான் அவளுக்குச் சமீபமாக வந்தபோது அவள் என் முகத்தை உற்றுப் பார்த்தாள். சட்டென்று பாய்ந்து என் கன்னத்தைத் தடவிக் கொண்டே மயக்கமுற்று என் காலிலேயே விழுந்து விட்டாள். நான் ஏதாவது பேய் போல அவள் கண்களுக்குத் தோன்றினேனோ? என்னைக் கண்டதும் ஏன் அவளுக்கு அப்படி மயக்கம் ஏற்பட வேண்டும்? ஆனால் என்னை அவளுக்கு ஏற்கனவே தெரிந்திருக்க வேண்டுமென்றுதான் படுகிறது. அவள் என்னை ஏதோ பெயர் சொல்லி அழைத்தாள். அந்தப் பெயர்கூட எனக்கு இப்பொழுது ஞாபகத்தில் இல்லை. எனக்கு ஏற்பட்ட பதைபதைப்பில் அது மறந்து போய் விட்டது" என்றான் விஜயரங்கன்.

"ஹூம் — பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாளோ? அவள் உன்னை வேறு யாரோவென்று தவறாக நினைத்திருக்கலாமல்லவா?" என்றாள் மீனாட்சி.

"நான் கொஞ்சம் அமைதியாக இருந்து யோசித்தேனானால் அவள் என்னை என்ன பெயர் சொல்லி அழைத்தாள் என்பது நினைவுக்கு வந்துவிடும். அவள் என்னை ஏதோ பெயர் சொல்லிக் கூப்பிட்டதுமல்லாமல் இன்னும் ஏதோ என்னிடம் சொல்ல நினைத்தாள். ஆனால் அவளுக்கு ஏற்பட்ட ஒரு உணர்ச்சியினால் அவள் அப்படியே கீழே விழுந்து விட்டாள்."

விஜயரங்கன் சொல்வதும் மீனாட்சிக்கு விநோதமாகத்தான் இருந்தது. சில நிமிடங்களுக்குள் உறுதியான நெஞ்சமும் தளராத நிலையும் படைத்த அந்தக் கிழக் குறத்திகூடக் கலக்கத்துக்குள்ளானாள். அவள் எல்லாவற்றையும் ஒரு விதமாக யூகித்தறிந்தாள். திடீரென்று இப்படி ஒரு சம்பவம் நிகழுமென அவள் எதிர்பார்க்கவே இல்லை. எல்லாவற்றையும் ஆராய்ந்தறிய அவள் எண்ணினாள். யாரேனும் விஜயரங்கனை அறிந்து அவனுக்கு அவனுடைய பூர்வீக வரலாறுகளை நினைவுறுத்தும் வண்ணம் நடந்து விட்டார்களோ என்ற சந்தேகம் அவளுக்கு எழுந்தது. "சரி! வா, அங்கு போய்ப் பார்ப்போம்" என்று சொல்லிக் கிளம்பினாள்.

மீனாட்சிதான் எல்லோரையும் விட ஆற்றங்கரைக்குச் சென்று அந்தக் கிழவி

Telegrams:-"KALIBRAND"

Tlephone:-108

# "காளீ-பிராண்ட்"

## எவர்சில்வர் பாத்திரங்கள்

(தயாரிப்பவர்கள்)

## காளீ-பிராண்ட்

### கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம்

எல்லா இடங்களிலும் கிடைக்கும்

சாஸ்திர முறையில் விக்ரகங்கள் செய்வதில் புகழ் பெற்றவர்கள்

எந்தவிதமான விக்ரகங்களும் எந்த உலோகத்திலும் ஆர்டருக்கு செய்து தரப்படும்

ஏஜெண்ட்ஸ்: "ருக்மணி குக்கர்"






★ சந்தனாதித் தைலம்

★ அரகஜா

★ அரைக்கீரை விதைத் தைலம்

★ கோகுல் ஹேர் ஆயில்





டி.எஸ்.ஆர் & கோ.

கும்பகோணம்

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபூட்டர்கள்: காசி ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ★கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல்ஏஜண்டு: R. பாலபட்டாபி, (ஸ்தாபிதம் 1932), வைசியாள் தெரு, கோயமுத்தூர் மதுரை ஏஜண்ட்: மெஸர்ஸ் [illegible], 4, [illegible] தெரு, மதுரை






# மஹா வில்வாதி லேகியம்

**வயிற்று வலி, வயிற்றுப் புண், மார்வலி, நெஞ்செரிச்சல், புளி ஏப்பம், வாந்தி, மலபந்தம் முதலிய வயிற்றுக்கோளாறுகளுக்கு நல்ல குணம் தரும் சிறந்த மருந்து**

**ஒரு சேர் விலை ரூ. 3-12-0**

தபால் செலவு தனி

எங்களது பாலேஜுக் டைரக்டரும், பிரதான வைத்தியருமான நாற்பட்ட வியாதிகளின் சிகிச்சையில் விசேஷ அனுபவமுள்ள

Dr. T. P. C. சர்மா,
A.V., A.M.A.C., A.V.S.(MY)

நியூ டெல்லியில் ஸ்ரீ விஸ்வநாதன், கான்பூர் ஸ்டோர், 6-90, W. E. Area கரோல் பாக்கில் 17-11-56 முதல் 5-12-56 முடிய நீடித்த நோயாளிகளை நேரில் பார்த்து வேண்டியது செய்யவே வந்து தங்குகிறபடியால் நீடித்த வியாதியஸ்தர்கள் இவ்வரிய சந்தர்ப்பத்தைத் தவற விடாதீர்கள்.

மற்ற விவரங்களுக்கு:

**ஸ்ரீ சௌத்இந்தியன் பார்மஸியூடிகல்ஸ் பிரைவேட் லிமிடெட்**

சேலம் டவுன் :: (S. Rly. S. India)

## கூந்தல் மற்றும் மூளை அபிவிருத்திக்கான தைலம்

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**
பம்பாய்-14. (C. Rly)

[illegible]

சென்னை டெப்போ:
4/441, தங்கசாலைத் தெரு, சென்னை

யாரென்று பார்க்க வேண்டுமென்ற துடிப்போடு இருந்தாள். அவள் விஜய ரங்கனைப் பின் தொடர்ந்து அஞ்சு கத்தையும் அழைத்துக் கொண்டு அவன் செல்லும் வழியே சென்றாள். அந்தக் கிழவி எங்கு விழுந்து கிடந்தாளோ அந்த இடத்துக்கு வந்ததும் விஜய ரங்கன் அப்படியே திகைப்படைந்து சிலை போல் நின்று விட்டான். என்ன ஆச்சரியம்! சிறிது நேரத்துக்கு முன்னால் அங்கு மயக்கமுற்று விழுந்து கிடந்த கிழவி எங்கே? அவள் மயக்கம் தெளிந்து எழுந்து போய் விட்டாளா? விஜயரங்கன் பரபரப்போடு நான்கு புறமும் சுற்றிப் பார்த்து, ''இந்த இடம்தான். இங்கேதான் அவள் விழுந்து கிடந்தாள். அவளைக் காணோமே?'' என்றான்.

''அது இந்த இடம்தான் என்று உனக்கு நன்றாக ஞாபகத்தில் இருக்கிறதா?'' என்றாள் மீனாட்சி, அவனைச் சந்தேகத்தோடு பார்த்துக்கொண்டே.

''இதே இடம்தான். இங்கேதான் அவள் மூர்ச்சை போட்டு விழுந்தாள்!'' என்றான் விஜயரங்கன் தீர்மானமாக.

''ஒரு வேளை அவள் மயக்கம் தெளிந்து இங்கிருந்து எழுந்துபோயிருக்கலாம் அல்லவா?'' என்றாள் மீனாட்சி.

''இருக்காது. அவளுக்கு ஏற்பட்ட மயக்கம் சாதாரண மயக்கமல்ல. அவள் இறந்து விடுவாளோ என்ற பயம் கூட அவளைப் பார்த்தபோது எனக்கு இருந்தது. வேறு யாரேனும் அவளுக்கு வேண்டியவர்கள் இருந்துதான் அவளை இங்கிருந்து எடுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும்...'' என்றான் விஜயரங்கன் சந்தேகத்தோடு.

மீனாட்சி அவன் சொல்லிய இடத்தையும் அதைச் சுற்றிலுமுள்ள இடங்களையும் மிகவும் உன்னிப்பாகச் சோதனை செய்து பார்த்தாள். அஞ்சுகமும் விஜயரங்கனும் ஒன்றும் தோன்றாதவர்களாகத் திகைப்படைந்து நின்றனர். மீனாட்சி நான்கு புறமும் சுற்றிக் கவனித்ததில் அவளுக்குச் சில விஷயங்கள் விளங்கின. ''சரி! இங்கே வண்டிச் சுவடு தெரிகிறது. மரத்தடியில் மாடுகள்கட்டியிருந்ததற்கு அடையாளமாக வைக்கோல், சாணமெல்லாம் கிடக்கின்றன. அது அவள் வந்த வண்டியாகத்தான் இருக்க வேண்டும். அவளைச் சேர்ந்தவர்கள் அவளை வண்டியில் போட்டுக் கொண்டு போயிருக்க வேண்டும்'' என்று கூறினாள் மீனாட்சி.

''நல்லவேளை, அவள் உயிர் பிழைக்க ஏதோ உதவி கிடைத்திருக்கிறது'' என்றாள் அஞ்சுகம் மன ஆறுதலோடு.

மீனாட்சி ஒன்றும் பேசவில்லை. ஏதோ யோசனையில் ஆழ்ந்தவள் போல் வீட்டை நோக்கி நடந்தாள். அவள் பாதி தூரம் வந்தபோது திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் விஜயரங்கனைப் பார்த்து, ''அவளுக்கு உன்





ஆவடி காங்கிரஸ் சமயம் ஜவாஹர்லால் அவர்கள் 'கல்கி' காரியாலயத்துக்கு விஜயம் செய்தபொழுது, 'கல்கி' காரியாலய பூந்தோட்டத்தைப் பார்த்து மகிழ்ந்து தோட்டக்கார ஏகாம்பரத்தைப் பாராட்டிக் கைகுலுக்கினர்.

னைத் தெரிந்திருக்க வேண்டும் என்று எப்படித் தீர்மானமாகச் சொல்லு கிறாய்...?'' என்றாள்.

''அவள் செய்கை எனக்கு அப்படிப் பட்டது. அவள் என்னைப் பார்த்ததுமே திகைப்படைந்து நின்று விட்டாள். அதோடு மட்டுமல்ல. அவள் என்னை ஏதோ பெயர் சொல்லி அழைத்தாள். அதுதான் என்னுடைய பெயராக இருந் தாலும் இருக்குமோ என்னவோ?''

''உன்னை என்ன பெயரைச் சொல்லி அவள் கூப்பிட்டாள்? அதைக் கொஞ் சம் நினைவு படுத்திச் சொல்லு'' என்றாள் மீனாட்சி.

விஜயரங்கன் அதை நினைவுக்குக் கொண்டு வர முயற்சி செய்கிறவன் போல் தன் நெற்றிப் பொட்டில் விரலை வைத்து அழுத்திய வண்ணம் நடந்து கொண்டிருந்தான். ''அது என்னவோ என் நினைவில் நிற்காமல் போய் விட் டது. அவள் மயக்கம் போட்டு விழுந்த தும் அவளை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று எனக்கு ஏற்பட்ட துடிப்பில் எல்லாவற்றையும் மறந்து விட்டேன்'' என்றான்.

அவர்கள் மூவரும் வீட்டை அடைந்து தாழ்வாரத்தில் வந்து உட் கார்ந்து சில நிமிட நேரம் மௌனமா யிருந்தனர். திடீரென்று மீனாட்சி, ''நீ சொல்வதெல்லாம் உண்மைதானே?'' என்றாள் விஜயரங்கனைப் பார்த்து.

ஆழ்ந்த யோசனையிலிருந்த விஜய ரங்கன், ''நான் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்?'' என்றான்.

''உன்னை ஒரு வேளை அவள் 'சுப் பய்யா' என்று பெயர் சொல்லிக் கூப் பிட்டாளோ...?'' என்றாள் மீனாட்சி.

''சுப்பய்யாவா...?'' என்று சொல்லி அவன் மீனாட்சியை ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டே, ''இல்லை. நிச்சயமாக அவள் என்னைச் சுப்பய்யா என்று கூப்பிடவில்லை. ஏன் அந்தப் பெயர் என்னுடையதா? உண்மை யாகவா...?'' என்றான்.

மீனாட்சி சட்டென்று பதில் சொல்ல வில்லை. அவள் சிறிது நேரம் யோசித்து விட்டு மெதுவாக, ''உனக்குச் சுப் பய்யா என்று பெயர் இருந்தால் அதை நீ மறந்து விடு. வேறு ஏதாவது பெயர் வைத்துக் கொள்வதுதான் நல்லது...'' என்று கூறினாள்.

''அப்படியா? அது என் உண் மைப் பெயராக இருந்தால் நான் ஏன் வேறு பெயர் வைத்துக் கொள்ள வேணும்? இது ஏதோ விநோதமாய் இருக்கிறதே? உங்களுக்கு நிச்சயம் தெரிந்திருக்க வேண்டும், நான் யார் என்று..... இல்லையா? தயவு செய்து உண்மையைச் சொல்லுங்கள் — நான் யாரென்று?'' என்றான் விஜயரங்கன் கெஞ்சும் குரலில்.

''அஞ்சுகம்! நீ தான் அவனுக்குச் சொல்ல வேணும். இப்பொழுது அவ னுடைய உடம்பு கொஞ்சம் தேறி யிருக்கிறது. அவன் இந்த இடத்தை விட்டுப் போனால் என்ன ஆபத்து அவனுக்கு வரும் என்பதை, நீ தான் அவனுக்கு எடுத்துச் சொல்ல வேண் டும்'' என்று கூறினாள் மீனாட்சி அஞ்சுகத்தைப் பார்த்து.

துயரமடைந்த முகத்தோடு தலை குனிந்த வண்ணம் நிற்கும் அஞ்சுகத்தின் முகத்தை மிகவும் வியப்போடு நோக்கி னான் விஜயரங்கன். அவன் மறந்துவிட்ட தன் பழைய நினைவுகளை, இரக்கமற்ற சுபாவத்தோடு கூடியவள் போலத் தோன்றும் மீனாட்சி சொல்வதைவிட அஞ்சுகம் சொல்வதையே அவன் விரும்பி னான். அஞ்சுகம் என்ன சொன்னாலும் அவன் நம்பத் தயாராய் இருந்தான்.

# உங்கள் நரம்புகள் தளர்ந்தால் வாழ்வே கசந்து விடுகிறது

○●○

★ திடீர் அதிர்ச்சி
★ துரதிருஷ்டம்
★ கவலை
★ அதிக வேலை
★ தீராத அஜீரணம்

இவைகள் நரம்பு பலவீனத்தின் பொதுவான காரணங்கள்

★ மறதி
★ பயந்த தோற்றம்
★ மனப் பிராந்தி
★ தற்கொலை எண்ணங்கள்
★ பிரமை

இவைகள் நரம்பு பலவீனத்தின் பயங்கர விளைவுகள்

○●○

நரம்பு பலவீனத்தைத் தடுக்க வைரம், நீலம், கெம்பு, முத்து, மரகதம் புஷ்பராகம், வைடூரியம், கோமேதகம், பவழம் முதலிய நவரத்தினங்களின் சேர்க்கை கொண்டதும் உலகப் பிரசித்தி பெற்றதுமான

# நவரத்ன கல்பம்

உட்கொள்ளுங்கள்



பண்டிட்
துர்க்காதத்த வைத்யா
கவிராஜ்
வைத்திய வாசஸ்பதி
அவர்களால்
கண்டு பிடிக்கப் பட்டது

○●○

இதர விவரங்களுக்கு எழுதவும் :

**NAVRATNA KALPA PHARMACY**

**JULLUNDUR CITY (India)**


# கோவை பெரியார் மறைவு

## திரு கே. கிருஷ்ணசுவாமி நாயுடு



**தோற்றம் : 1892 :: மறைவு: 1956**

கோவையை அடுத்த பூளைமேடு பி. எஸ். ஜி. & ஸன்ஸ் தர்மஸ்தாபன டிரஸ்டிகளில் ஒருவரும், ஸ்ரீ பாலசுப்ரமணிய மில்ஸ் அதிபரும், கோயமுத்தூர் காட்டன் மில் ஸ்தாபகரும், பல மில்களின் டைரக்டருமான திரு K. K. நாயுடு என்று அழைக்கப்பட்டு வந்த திரு கே. கிருஷ்ணசுவாமிநாயுடு அவர்கள் சென்ற 4-10-56-ல் தமது 64 வது வயதில் கோவையில் தமது இல்லத்தில் காலமானார்.

அன்னார் தரும காரியங்கள் பல செய்துள்ளார். அவர் ஏழை மாணவர்களுக்குக் கல்வி பெற உதவி செய்துள்ளார். அவரது உதவியால் பல இளைஞர்கள் மேல் நாடுகளுக்குச் சென்று கல்வி பெற்றுள்ளார்கள். கோவையில் கஸ்தூரி மாணவர் விடுதி அவரது நன்கொடையால் நடைபெறுகிறது. அவரது சொந்தக் கிராமமாகிய கரடிவாவியில் தரும வைத்தியசாலை ஒன்றும், பிரசவ ஆஸ்பத்திரியும் கட்டியுள்ளார். அக்கிராம மக்களுக்கு அவர் பல விதத்திலும் உதவிகள் செய்து வந்துள்ளார். தொழில் துறையிலும் விவசாயத்திலும் அவர் பெயரும் புகழும் பெற்று விளங்கினார்.

அவர் மறைவினால் கணக்கற்ற உற்றார், உறவினரும் வருந்துகின்றனர்.

'' எனக்கு இவங்க சொன்னதுதான் கொஞ்சம் தெரியும். ஆனால் அதை உங்களிடம் சொல்லாமல் நெடுநாட்கள் மறைத்து வைக்க முடியாது என்று எனக்குத் தெரியும். நீங்கள் ஜெயிலிலுள்ள கைதியின் உடையில் எங்கோ கிடந்தீர்களாம். யாரோ உங்கள் மண்டையில் அடித்துக் காயப்படுத்தி இருந்தார்களாம். அப்பொழுது கதிரனும் மருதையும் உங்களை இங்கே தூக்கிக் கொண்டு வந்தார்களாம். அவர்கள் சிறை உடையை நீக்கி உங்களுக்குச் சாதாரண உடையை அணிவித்தார்களாம்'' என்றாள் அஞ்சுகம். அவளுடைய குரல் மெதுவாக இருந்தது.



விஜயரங்கனுடைய கலக்கமடைந்திருந்த மூளைக்கு இவ் விஷயம் இன்னும் கலக்கத்தைக் கொடுக்கக் கூடியதாய்த் தான் இருந்தது. அவன் மிரள மிரள விழித்த வண்ணம், ''நீ சொல்வதைப் பார்த்தால் நான் சிறையிலிருந்தவனா? கைதியா..?'' என்று அலறினான்.

அஞ்சுகம் ஒன்றும் பேசவில்லை. அந்தச் சமயத்தில் அவள் எதையும் உண்மைதான் என்று வற்புறுத்திச் சொல்லத் தயாராயில்லை. ஆனால் மீனாச்சி அப்படி விட்டு விடுவாளா? அவள் தீர்மானமான குரலில், '' ஆம்! நீ ஒரு கைதிதான். சிறையிலிருந்து தப்பி வந்திருக்கிறாய். நீ வெளியே தலை நீட்ட முடியாது. என்னைப் போன்ற குறச் சாதியினர் உனக்கு உதவி செய்யக் காரணம் என்ன, தெரியுமா? எங்கள் குடும்பம் எப்பொழுதும் போலீசுக்கு விரோதமான குடும்பம். போலீசுக்கு விரோதமாக இருக்கும் யாரையும் நாங்க எங்களோடு கூடப் பிறந்தவங்க போலக் கருதுவது வழக்கம். அதனால்தான் என் பிள்ளைகள் இருவரும் உன்னைக் காப்பாற்றி இங்கே கொண்டு வந்தார்கள். உனக்கு வேண்டிய உதவி செய்து உயிர் பிழைக்க வைத்தோம்'' என்றாள்.

விஜயரங்கனின் தளர்ச்சி யடைந்த மனத்தில் மீனாச்சியின் வார்த்தை மேலும் திகிலைத்தான் உண்டாக்கியது. '' நான் ஒரு கைதி என்று இதுவரை ஒரு சொப்பனத்தில் கூடக் கண்டதில்லை. எனக்கு அப்படி ஒன்றும் ஞாபகத்தில் இல்லை. அப்படி இருக்காது '' என்றான் பதட்டமான குரலில்.

'' உன் பெயரே உனக்கு ஞாபகத்தில் இல்லாத போது இதெல்லாம் எப்படி ஞாபகத்தில் இருக்கப் போகிறது?'' என்றாள் மீனாச்சி.

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் நான் ஏதோ பெரிய குற்றத்தைச் செய்து விட்டு, சிறையில் இருந்தவன் போலல்லவா படுகிறது? அப்படி இருந்தால் நீங்கள் செய்த உதவிக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். தயவு செய்து சொல்லுங்கள், நான் என்ன குற்றத்தைச் செய்து விட்டுச் சிறையில் இருந்தேன்? உண்மையாகவே என் பெயர் கப்பய்யாவா'' என்று கேட்டான்.

'' ஆமாம்! உன் பெயர் அதுதான். கதிரனும் மருதையும் உன்னைப் பற்றி நன்றாய் விசாரித்துத் தெரிந்துகொண்டிருக்காங்க. நீ ஆயுள் தண்டனைக் கைதியாம். நீ ஜெயிலிலிருந்து இருட்டுத் தனமாய்த் தப்பி வந்திருக்கே. இதை அவங்க சொன்னாங்க. இல்லா விட்டால் உன்னைக் காப்பாற்ற அவர்களுக்கு என்ன அக்கறை?'' என்றாள் மீனாச்சி.

''ஆயுள் தண்டனையா....? நான் யாரையாவது கொலைசெய்துவிட்டேனா? யாரைக் கொலை செய்தேன்...? அப்படி எதுவும் செய்ததாக எனக்கு நினைவு இல்லையே?'' என்று அவன் அலறினான்.

''கொலைதான் செய்திருக்க வேண்டும். அது யாரையோ...? எனக்குத் தெரிந்த வரையில் உண்மையைச் சொல்லி விட்டேன். இனிமேல் நீ எப்படி நடந்தால் நல்லதோ, அப்படி நடந்து கொள். எங்களை விட்டுப் பிரிந்தால் உனக்கு ஆபத்துத்தான்! அஞ்சுகம்தான் உனக்கு யோசனை சொல்ல வேண்டும்...'' என்று சொல்லி விட்டு எழுந்து எங்கோ போனாள் மீனாச்சி.

'' எனக்கு இதில் என்னவோ நம்பிக்கையே இல்லை. நீங்கள் அப்படிப்பட்ட கொடுமையான காரியத்தைச் செய்திருப்பீர்கள் என்று நான் நம்பவேயில்லை'' என்றாள் அஞ்சுகம்.

அஞ்சுகத்தின் வார்த்தைகள் விஜயரங்கனின் மனத்துக்குச் சிறிது ஆறுதலையும் தைரியத்தையும் கொடுத்தன. அவளைப் போன்ற ஒரு பெண் எப்பொழுதும் தன் பக்கத்தில் இருந்தால் எத்தகைய துயரத்திலிருந்தும் மீண்டு விடலாம் என்று அவனுக்குப் பட்டது. (தொடரும்

தேவியின் கடிதம்

# வியாதிகள் வளருகின்றன

வசுமதி ராமசாமி

அன்பு மிக்க சுஜாதா,

இந்த மழைக் காலத்தில் குழந்தைகளுக்கு அடிக்கடி இருமல், ஜுரம் வருவது கஷ்டமாக இருக்கிறதென்று எழுதியிருக்கிறாய்.

இம்மாதிரி சில்லறை நோய்களுக்குக் கை வைத்தியம் செய்து கொள்வது சிறந்த முறை. அது சாத்தியமில்லாமற் போனால் டாக்டர்கள் உதவியை நாட வேண்டியதுதான்.

ஸ்விட்ஜர்லாந்தில் ஒவ்வொரு குடும்பத்தினரும் டாக்டர்களுக்கு மாதா மாதம் கணக்காகப் பணம் கொடுத்து விடுகிறார்கள். அவர்கள் குடும்ப அங்கத்தினருக்குத் தகுந்தவாறும் வருவாய்க்கு ஏற்றவாறும் கொடுக்கிறார்கள். அதனால் குடும்பத்து வைத்தியர்கள் ஒவ்வொருவருடைய உடல் நிலைக்கு ஏற்றவாறு கவனித்துக் கொண்டு, வியாதி வராமல் தடுக்க முயற்சி செய்கிறார்கள். இது பரஸ்பரம் இருவருக்கும் நன்மையைத் தருகிறது. மக்கள் மன நிம்மதியோடு வாழ முடிகிறது.

நம் நாட்டு நிலை அப்படி அழகாக மாறவில்லை. ஜனங்களுக்கு வியாதி வந்தால்தான் வைத்தியருக்கு வருமானம். அதனால் நாமும் கஷ்டப்படுகிறோம். சில்லறைத் தொந்தரவுகளுக்கு முதலில் ஆகார நியமம் அனுசரிப்பது நல்லது. அதிலேயே ஓரளவு பயன் பெறலாம். காய்கறிகளிலேயே சில பக்குவங்கள் இருக்கின்றன. அடுத்தபடியாக நம் வீட்டில் கஷாயம், லேகியம், தைலம், இவைகளைத் தயாரித்துக்கொண்டுசிகிச்சை செய்து கொள்ளலாம். கூடியவரையில் வியாதி வராமல் தடுப்பதுதான் நம் பெரும் முயற்சியாக இருக்க வேண்டும் என நினைக்கிறேன். கறிகாய்கள் வாங்கினதும் கழுவுவது, பாலை நன்றாகக் காய்ச்சிய பின் உபயோகிப்பது, தண்ணீரைக் காய்ச்சிக் குடிப்பது போன்ற சில்லறை விஷயங்களில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும்.



உடல் நிலைக்கு மன நிலை முக்கிய காரணம். என் சிநேகிதி எப்பொழுது சந்தித்தாலும் தன் வியாதியைப் பற்றியே பேசுவாள். அவள் பார்ப்பதற்கு ஆரோக்கியமாகத்தான் இருப்பாள். ஆனாலும் தான் மிகவும் பலஹீனமாக இருப்பதாகப் பீதி. விலை மதிப்புள்ள இனிப்புப் பண்டங்களையும் அதிகச் சாப்பாட்டையும் தன் பலஹீனம் குறைவதற்குச் சாப்பிடுவாள். அந்தச் சாப்பாடு ஜீரணமாவதற்குத் தகுந்த உடல் உழைப்புக் கிடையாது. ஜீரணமாகாததனால் மார்பை வலிக்கிறமாதிரி இருக்கும். உடனே அவள் தனக்கு இதயக் கோளாறு வந்து விட்டதாகக் கலவரம் அடைந்து போய் டாக்டருக்கு டெலிபோன் செய்வாள்.

நான் டாக்டர்களைக் குறை சொல்லவில்லை. அவர்கள் மனித சமுதாயத்துக்குத் தொண்டு செய்யும் உயர்வைக் கண்டு பெருமைப் படுகிறேன். ஆனால் அவர்கள் உண்மையைக் கூறி நோயாளிகளின் வீண் பீதியைக் குறைப்பதற்கு முயன்றால் நல்லது.

ஆனால் என் சிநேகிதியின் டாக்டர் அவளுடைய மார்பு வலிக்கு விதம் விதமாகப் படம் எடுக்கச் சொல்லுவார். இல்லாத மருந்தெல்லாம் எழுதிக் கொடுப்பார். "உங்கள் உடம்பு பலவீனம். படுக்கையிலேயே இருக்கவேண்டும்" என்று ஒத்துப் பாடுவார். அவரைக் குறை சொல்வதற்கும் இல்லை. அப்படிச் சொன்னால்தான் என் சிநேகிதி திருப்தி அடைவாள்.

சில வருஷங்களுக்கு முன் பெண்களுக்கு மயக்கம் வருவது நாகரிகமாக இருந்தது. ஆனால் அந்த மயக்கம் சமயம் பார்த்துஆதரவு இருக்கும் போது தான் வரும். ஹிஸ்டீரியா இல்லாவிட்டால் முன்பு அநாகரிகம். இன்று அந்தநிலைமாறினதற்கு மிகவும் சந்தோஷப்படுவோம்.

சில வியாதிகளின் பெயர் வாயில் கூட நுழைவதில்லை. விஞ்ஞானம் வளர்ந்து வருவதோடு வியாதியும் வளருகிறது. யாராயிருப்பினும் கூடிய வரையில் இயற்கையுடன் ஒன்றி வாழ்வதுதான் ஆரோக்கியத்தைத் தரும். இப்படிக்கு,

பூமாதேவி.

# நான் ஒரு தொழில் புரிபவள்...

## என் எதிர்காலம் பாதுகாக்கப்பட்டிருக்கிறது

"ஒரு நிரந்தரமான வேலையுடைய எனக்கு வேலை செய்வதில் தனி பிரீதி. எனது சம்பளம் வீட்டின் வருமானத்தை அதிகப்படுத்துவதுடன் என் வயது முதிர்ந்த தாயாருக்கு மிகுந்த திருப்தியையும் அளிக்கிறது.

"எனது நிலை வேறு விதமாக திரும்பியிருக்க முடியும். என் தகப்பனார் சிறிய வயதில் இறந்ததால் அவர் விட்டுச்சென்ற சேமிப்பு மிகவும் சொற்பம். அவர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் செய்திருக்காவிடில் எங்கள் நிலை என்னவாகியிருக்குமோ அறியேன். இன்ஷ்யூரன்ஸ் பணத்தைக் கொண்டுதான் என் தாயார் குடும்பத்தை கஷ்டமின்றி நடத்திக் கொண்டு என் படிப்பிற்கு தேவையான செலவையும் சமாளித்தாள்.

"இதனால் எனக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் மீது ஏற்பட்டிருக்கும் நம்பிக்கையை கண்டு ஆச்சர்யபடுவதற்கில்லை. எனக்கு எப்பொழுது மிகவும் தேவைப்படும் என்பதை கணக்கிட்டு நானும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் செய்திருக்கிறேன். எனக்கும் மணம் முடிந்தவுடன் என் கணவரையும், அவர் முன்பே இன்ஷ்யூர் செய்திருக்காவிடில், கட்டாயமாக அதை செய்து முடிக்கும்படி வற்புறுத்துவேன். எங்கள் பாலிஸிகளிலிருந்து வரும் பணமானது எங்கள் குழந்தைகளின் படிப்புச் செலவையும், எதிர்பாராமல் வரும் செலவையும் சமாளிக்க உதவும்."

**இன்ஷ்யூரன்ஸ் நல் வாழ்வின் வழியாகும்.**

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்பொரேஷன் ஆப் இந்தியா**
சென்ட்ரல் ஆபீஸ்: ஓரியண்டல் பில்டிங்ஸ், போர்ட், பம்பாய் 1.



**Life Insurance Corporation of India**

ஜோனல் ஆபீசுகள்:

பம்பாய்: நியூ இந்தியா அஷ்யூரன்ஸ் பில்டிங், மகாத்மா காந்தி ரோடு, பம்பாய் 1.
கல்கத்தா: ஹிந்துஸ்தான் பில்டிங்ஸ், 4, சித்தாரஞ்சன் அவின்யூ, கல்கத்தா 13.
டில்லி: லக்ஷ்மி பில்டிங், அஸப் அலி ரோடு, புதுடில்லி.
மதராஸ்: யுனைடெட் இந்தியா லைப் பில்டிங், தபால் பெட்டி நெ. 281, மதராஸ்.
கான்பூர்: நவ்ரோஜ் பில்டிங், மகாத்மா காந்தி ரோடு, கான்பூர்.

ASP/LIC-3





# கிளியின் சந்தேகம்



"எங்கும் பரந்து நிற்கிறான் ஆண்டவன். அவனை ஒரு பிரதிமைக்குள்ளும், ஒரு லிங்கத்துக்குள்ளும் அடக்கி மூடர்கள் சைவர்கள் என்றும் வைஷ்ணவர்கள் என்றும் சொல்லிக்கொண்டு விக்கிரக ஆராதனை செய்கிறார்களே!" என்றது ஒரு காக்கை.

கோயில் பிராகாரச் சுவர்மேல் உட்கார்ந்து காக்கை இவ்வாறு பேசியதைக் கேட்டு அங்கிருந்த கிளி,

"எங்குமிருந்தால் அந்த மூர்த்தியிலும் உண்டல்லவா?" என்றது.

"யாரோ சொன்னதைக் கேட்டு நீ கிளிப் பேச்சுப் பேசுகிறாய்!" என்றது காக்கை.

கிளிக்கு அவமானம் மேலிட்டுப் பறந்து போயிற்று. போய் ஒரு அணில் பக்கத்தில் உட்கார்ந்தது. அணிலிடத்தில் தன் சந்தேகத்தைச் சொல்லிற்று.

"அந்தக் காக்கை ஒரு விதண்டாவாதி. அதன் உளறலை நீ பொருட்படுத்த வேண்டாம். ஆனால் எனக்கு ஒரு சந்தேகம்" என்றது அணில்.

"அது என்ன?" என்று கேட்டது கிளி.

"ஒரு தெய்வமா? பல தெய்வமா?" என்று கேட்டது அணில்.

"ஒன்றே!" என்றது கிளி.

"சிக்கிக் கொண்டாய்!" என்றது அணில்.

"ஏன்? எப்படி?" என்று பயந்து போய்க் கிளி கேட்டது.

"அதோ! அங்கே பூனை வருகிறதே அதைக் கேள்!" என்றது அணில்.

"பூனைக்குப் பக்கத்தில் போக பயமாக இருக்கிறதே!" என்றது கிளி.

"பயந்தவனுக்கு எப்படி அறிவு கிட்டும்? மெள்ளத் தைரியமாகப் போய்க் கேள்!" என்றது அணில்.

"மாமா! நான் பூனையண்டை போக முடியாது. போனால் என் சந்தேகமும் என் உயிரும் ஒரே அடியாகத் தீர்ந்து போகும். நீயே சொல். நீதான் அந்த ராமனுக்குச் சேது கட்டித் தந்தாயே!" என்றது கிளி. அணிலுக்குச் சந்தோஷம். "சரி, சொல்லுகிறேன், கேள்!" என்று பிரவசனம் செய்ய ஆரம்பித்தது.

"மூர்த்தி பூஜை செய்தால் உலகத்தில் எத்தனை கோயில்கள் உண்டோ அத்தனை கடவுள்கள் உண்டாய் விடுமல்லவா? ஒன்றாயிருக்கும் கடவுள் பலவாகிப் போகுமல்லவா? உனக்கு இந்தச் சின்னக் கணக்குக் கூடத் தெரியவில்லையே!" என்றது அணில்.



ராஜாஜி





"நான் ஒரு கிளி. நான் எந்தப் பள்ளிக்கூடம் போனேன்? எனக்குக் கணிதம் எப்படி வரும்?" என்று கிளி அடக்கமாகச் சொல்லிவிட்டுப் பறந்து போயிற்று.

புல் தரையில் ஒரு வண்ணத்துப் பூச்சியிருந்தது. அதனண்டையில் போய் உட்கார்ந்தது. "பூச்சியே! சிறு பூச்சியே! உனக்கு எல்லாம் தெரியுமே!" என்றது கிளி.

"ஆமாம்! எனக்கு எல்லாம் தெரியும். உனக்கு என்ன சந்தேகம்?" என்றது பூச்சி.

"ஒரு கடவுள் எப்படிப் பல கோயில்களில் பல வடிவங்களில் இருக்க முடியும்? ஒரே ஒரு பழம் பல பழங்கள் ஆகுமா?" என்றது கிளி.

"கிளிக்குப் பழங்களைப் பற்றித்தான் தெரியும்!" என்று சொல்லிப் பூச்சி சிரித்தது.

"சிரிக்க வேண்டாம். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. என் சந்தேகம் மண்டையைப் பிளக்கிறது. கொஞ்சம் சொல்லுவாய்! உனக்குத்தான் எல்லாம் தெரியுமே!" என்றது கிளி.

"கிளியே! அதோ பார் மேலே என்ன தெரிகிறது?" என்று கேட்டது பூச்சி.

"மேலே பெருஞ் சோதியாகச் சூரியன் இருக்கிறான்!" என்றது கிளி.

"கீழே பார். அந்த மரத்தடியில் என்ன காண்கிறது?" என்று கேட்டது.

பள்ளிக்கூட வாத்தியார் மாதிரியே அந்தப் பூச்சி பேசிற்று! கிளியும் மாணவனைப் போலவே அடக்கமாகப் பயந்து கேள்விகளுக்குப் பதில் சொல்லிற்று.

"இலைகளின் நிழல்களும் இடையில் வெயிலின் பொட்டுகளும் இருக்கின்றன."

"அந்த வெயில் பொட்டுக்கள் எங்கிருந்து வந்து தரையில் உண்டாகின்றன?" என்று கேட்டது பூச்சி.

"சூரியனிடமிருந்து" என்றது கிளி.

"பார், இப்போது எண்ணுகிறேன்" என்று பூச்சி பறந்து பறந்து அந்த வெயில் பொட்டுக்களின்மேல் உட்கார்ந்து "ஒன்று, இரண்டு, மூன்று" என்று நூற்றெட்டு வரையில் எண்ணிச் சொல்லிற்று.

"கண்டேன், அறிந்து கொண்டேன். ஒரு சூரியன் கீழே நிழலில் நூற்றெட்டு ஆனான்" என்றது கிளி.

"நூற்றெட்டும் ஆவான்; ஆயிரத்தெட்டுமாவான். மரத்தில் இலைகளுக்குள் எவ்வளவு இடைவெளிகள் இருக்கின்றனவோ அத்தனையும் ஆவான். ஒவ்வொருவனுக்கு ஒரு தெய்வம், ஒவ்வொரு கோயிலிலும் ஒரு தெய்வம். இப்படி தியானிப்பவர்களுக்குக் கோடி தெய்வங்களும் ஆவான் ஒரு ஆண்டவன்" என்று பூச்சி முடித்து விட்டுப் பறந்து போய்விட்டது. கிளி ஆச்சரியம் அடைந்தது. யாருக்கும் ஒரு தீங்கும் செய்யாமல் வண்ணத்துப் பூச்சி ஒவ்வொரு பூவிலும் தேனை மெள்ள உறிஞ்சிக் குடித்துக்கொண்டே போகும் பிராணியல்லவா? அதற்கு இந்த அறிவு உண்டாயிற்று.

"நான்தானே தேனாகப் பூவுக்குள் இருந்து வருகிறேன். என்னைக் குடித்த பூச்சிக்கு ஞானம் இருப்பதில் என்ன ஆச்சரியம்?" என்று கண்ணன் கிளிக்குப் பக்கத்தில் வந்து காதில் சொன்னான்.

"இருப்பது நான் ஒருவன். தியானித்துக் காண்பவர்களுக்குப் பலவாகிறேன்" என்று கண்ணன் கிளிக்குச் சொன்னான். கிளியின் சந்தேகம் தீர்ந்தது.



LKM. 31.TAM.

# அபரிதமான புஷ்பங்கள்!

பிரஞ்சுக் கூட்டுடன்
உங்களுக்காக விசேஷ
மாகத் தயாரிக்கப்பட்ட
ரம்மிய மணத்துடன்
கூடிய டால்கம் பவுடர்.

லக்மி




டாடா ஸ்தாபனம்

லக்மி பிரைவேட் லிமிடெட்., பாம்பே ஹவுஸ், போர்ட், பம்பாய்-1



உன் நண்பனைக் காகிதத்தில் 'டைமண்ட்' ஒன்று வரையச் சொல். சுலபமாக எழுதி விடுவான். அதே படத்தைக் கண்ணாடிக்கு முன் உட்கார்ந்து அதில் தெரியும் கையையும் பென்சிலையும் பார்த்தபடி எழுதச் சொன்னால் இறுக்குவான்!





அம்பி செய்யும் இத்தனே தேகாப்பியாசமும்





அவனுக்குக் கிடைத்த மைசூர்ப்பாகை





உடைக்கத்தான்!



"டம்ளருக்கு அடியில் இரு, ஸ்பூன்களை வைத்து, முதலில் உள்ள ஸ்பூனைக் குத்தினால், ஸ்பூன் டம்ளரில் விழும்!



இங்கே உள்ள ஐந்து பூனைகளில் இரண்டு பூனைகள் வித்தியாசப் படுகின்றன. அந்த இரண்டு பூனைகள் எவை? அது என்ன வித்தியாசம்?







இதோ இந்தப் பட்டுப் பூச்சியைக் கத்திப் புள்ளிக்கோடு போட்டிருக்கிறது. அந்தக் கோடு உள்ளபடியே வெட்டிப் பசையுடன் பேனாவில் செருகிக் கொள்ளுங்கள். பிறகு பேனாவை இலேசாக ஆட்டினால் அசல் பட்டுப்பூச்சி பறப்பது போலவே இருக்கும்!

பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

## 12. உலகமே சுற்றியது!

விஜயன் முகத்தைத் திருப்பிக் கொண்டதும் அவ் விஷமக்காரப் பெண் மீண்டும் ஒரு அதட்டலுடன் அவன் முகத்தின் எதிரே வந்து நின்று பேசினாள். அப்பொழுதும் அவனிடமிருந்து பதில் இல்லை.

அவனது மௌனச் செயலால் அவளுக்கு மிகுந்த வெட்கம் ஏற்பட்டு விட்டது போலும்! அவள் அவனிடம் படபடப்புடன் எதையோ கூறி விட்டு, திரும்பி வேகமாகச் சென்று விட்டாள். விஜயன் வேகமாக ஓடி, அவளை வழிமறிப்பது போன்று நின்று கொண்டான். அவள் கன்னங் குழியச் சிரித்தவாறே பின்னும் ஏதோ சொன்னாள். பாவம், அவளுடைய வார்த்தைகளை யெல்லாம் அவன் அறிய முடிந்தால் அவன் இப்படியிருப்பானா?

இனிமேலும், தன் நிலைமையைக் கூறாமல் இருப்பது பிசகு என்று அவனுக்குத் தோன்றிற்று. ஆகவே, அவன் கீழே உட்கார்ந்து, கைவிரலால் பூமியில் எழுதிக் காண்பித்தான். அதில், "நான் ராஜகுமாரன்தான்; ஆனால் வாயும் செவியுமில்லாத பிறவி. இது கடவுளின் தண்டனை!" என்று குறிக்கப் பட்டிருந்தது.

அடுத்தகணம் அப்பெண் திடுக்குற்றவாறு நின்றாள். அவளது முகம் துயரத்தினால் சுருங்கிற்று. பின்னர், அவனை அனுதாபத்துடன் ஏற இறங்கப் பார்த்தாள். கடைசியாக, அவளுடைய முகத்தில் சந்தோஷமே பிரகாசித்தது.

"நீயார்? இங்கு எங்கே வந்தாய்?" என்று கேட்டபடியே அவள் சைகை

துரோணன்

மூலம் அவனுக்கு அறிவுறுத்தினாள். அவன் நாலாபுறங்களிலும் விழிகளைச் செலுத்தியபடியே நின்றான். பின்னர், அவன் முகத்தில் குறும்புத்தனம் கூத்தாடியது! அவன் கீழே உட்கார்ந்து, அவளது கேள்விகளையே தரையில் எழுதி அவளைக் கேட்டான்.

அவள் பொய்க் கோபத்துடன், "சொல்ல முடியாது போ!" என்று சைகையின்மூலம் கூறி விட்டுத் திரும்பத் தொடங்கினாள். அவனும் தலையசைத்தபடியே, "நானும் சொல்ல முடியாது!" என்று கூறி விட்டு அவளுக்கு எதிர்த் திசையில் திரும்பிச் சென்றான். அவர்கள் இருவரும் நாலைந்து அடிகள் சென்று விட்டனர். ஆனால், இருவரும் ஏக காலத்தில் திரும்பி ஒருவரை ஒருவர் பார்த்தனர்! அவர்களுடைய முகத்தில் வெட்கம் நிரம்பியிருந்தது.

அந்தப் பெண் அவனிடம் வந்து, 'தூரத்தில் எதையோ சுட்டிக்காட்டிய வண்ணம், "போவோம், வா!" என்று அழைத்தாள். அவன் அவளைத் தொடர்ந்து சென்றான். சற்றுத் தூரம் சென்றதும், ஒரு பெரிய ஆலமரம் குறுக்கிட்டது. அதன் அடிப்பாகம் மிகப் பருமனாகவும், வழவழவென்றும் இருந்தது. அவன் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவன் போல் அவளுடைய கையைப் பிடித்து, சற்று நிற்கும்படி கூறினான். பின்னர், அவசரத்துடன் தனது மடியைத் துழாவத் தொடங்கினான். அவனுடைய செய்கை அவளுக்கு மிகவும் வேடிக்கையாகவே யிருந்தது.

விஜயன் தன் மடியில் மிகப் பத்திரமாகக் கட்டிக் கொண்டிருந்த துணிப் பையை எடுத்து, அதிலிருந்த சாயக்கட்டிகளைக் கையில் எடுத்துக் கொண்டான். பின்னர், அவளை நோக்கிச் சைகையினால் ஏதோ கூறி விட்டு, அந்த



மரத்தின் மீது சித்திரம் வரையத் தொடங்கி விட்டான்!

ஆகா! வாயும், செவியுமற்ற அந்தப் பிறவியிடம், கடவுள் எவ்வளவு உயர்வான கலையை வைத்திருந்தார்?

செங்கிறமான சாயக்கட்டியைப் பிடித்திருந்த அவனது வலது கரம், சுவர் போன்றிருந்த அந்த மரத்தின் மீது, குறுக்கும் நெடுக்குமாக ஓடியது. முதலில், ஒரு மனித உருவத்தின் வெளிக் கோடுகள் உருவாயின. பின்னர், அதன் உடை, அணிகள்—முதலியவைகளை 'நகாசு' வேலைகள் செய்தான். அதன் பின்னரோ 'பளிச்' என்ற உருவுடன் அதில் ஒரு பெண்ணே உருவாகி விட்டாள்! அவள் யார்? அவனுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த அந்த விஷமக்காரப் பெண்ணேதான்!

அவன் திரும்பிப் பார்த்தான். அந்தப் பெண்ணின் முகத்தில் அப்பொழுது ஓராயிரம் வியப்புக் குறிகள் பிரதிபலித்தன! அவன் மீண்டும் திரும்பி, வேறொரு சாயக் கட்டியின் மூலம், அச்சித்திரப் பாவையின் உடையை நீல வர்ணமாக்கினான்.

அவன் எதிரே நின்று கொண்டிருந்த அந்த அழகிய பெண்ணே மற்றொரு சௌந்தரியவதியாக உயிர் பெற்று வந்தது போல் அவ்வளவு தத்ரூபமாகச் சித்திரம் வரைந்திருந்தான் விஜயன். அவள் ஸ்தம்பித்தபடியே கற்சிலையாக நின்று கொண்டிருந்தாள். அந்தச் சித்திரத்தை வியப்போடு வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். 'ஆகா! அற்புதம்' என்று தன்னையு மறியாமல் கூறி விட்டாள் அந்தப் பெண். முடிவாக, அவன் சித்திரத்தை மறைத்தவாறு அதன் கீழே ஏதோ எழுதத் தொடங்கினான். அவன் நகர்ந்ததும் தான் அவன் எழுதியிருந்த எழுத்துக்கள் அவளது கண்களுக்குத் தெரிந்தன. அதில், "மகாராணி தேவி!" என்று தொடங்கி, முற்றுப்பெறாமல் இருந்தது. அவனுடைய முகத்தில் விஷமத்தனம் தாண்டவமாடியது!

அவள் எங்கேயோ கவனித்துக் கொண்டிருப்பது போல் நோக்கினாள். ஆனால் அந்த முகத்தில் பெருமிதமும், வெட்கமும் சேர்ந்து உறவாடிக் கொண்டிருந்தன. அவள் திடீரென்று திரும்பி, அவன் கையிலிருந்த சாயக் கட்டியைப் பிடுங்கிக் கொண்டே ஏதோ எழுதினாள். விஜயன் திகைப்போடு கூர்ந்து நோக்கினான்.

அவள் எழுதி யிருந்த பெயரைக் கண்டதும் அவன் திடுக்கிட்டு விட்டான். 'இப்பெயரை எங்கேயோ கேட்டிருக்கிறோமே?' என்று அவனது ஞாபக சக்தி யெல்லாம் சுழன்று வட்டமிட்டது. பின்னர், 'இது என்ன அதிசயம்? இவை யெல்லாம் கனவு தானோ?' என்ற சந்தேகங்களும் அவனுக்குத் தீவிரமாக எழுந்தன.

அவள் எழுதியிருந்த பெயரை மனத்துக்குள்ளாகவே, நூறு தடவைகள் படித்து விட்டான். அந்தப் பெயர் அவன் மனத்தில் நன்கு பதிந்து விட்டது. அவள் தன்னுடைய பெயரை அதில் "மேகலா" என்று எழுதியிருந்தாள்!

ராணி மல்லிகாவின் அந்தப்புரத்துக்குள் அன்று திடீரென்று அரசர் கண்ணைக் கட்டி நான்கு பேர்களை இழுத்துக்கொண்டு நுழைந்தார். மல்லிகாவுக்கு உலகமே சுற்றியது.

(தொடரும்)



# Color-fast

## LIPSTICK

*Inspiration to longer-lasting lip beauty*

Max Factor's Color-Fast is the non-smear lipstick with the thrillingly lustrous sheen that goes on so easily, yet won't come of until you take it off. Because it's rich in Lanolin, it's a real beauty treatment for the lips—helps keep them soft, smooth, ever youthful. Color—fast's fine even texture and pure rich colors are the delight of every woman, as they are for Hollywood's lovely screen stars.



YVONNE DE CARLO
Star of Universal International's
Technicolor drama
"RAW EDGE"



*Available in Seven Exciting New Shades*

# MAX FACTOR

HOLLYWOOD

Available at all Leading Cosmetic and General Stores

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

A:LS:4

## வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய்களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில்...

# ஆக்டமர்

### இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் ப்ரீஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸாண்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக நிரூபணமாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது. அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனும் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

நறுமணமுள்ள ப்ரீஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உற்ற தருணம். தவறாமலும் இடையறாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!




BZ. 4-50 TM லண்டனிலுள்ள இராஸ்பீல்ட் கம்பெனி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

53

நான் ஒரு வாசக பக்தனல்ல. அதாவது, சாஸ்திரங்கள் சொல்லும் வாசகங்களுக்கு நான் அடிமையாக மாட்டேன். பொருளைத்தான் கொள்வேன். உலகத்திலுள்ள பல சமய சாஸ்திரங்களையும் பொருள் கண்டு தெரிந்து கொள்ளவே முயற்சி செய்கிறேன். சாஸ்திரங்களில் கூறப்படும் சத்தியம், அஹிம்ஸை இந்தப் பிரமாணங்களை வைத்தே நான் சாஸ்திரங்களைப் பரிசீலனை செய்வேன். அந்தப் பிரமாணங்களின் சோதனையில் தேறினதை வைத்துக் கொள்வேன். தேறாததைத் தள்ளி விடுவேன்.

உதாரணமாக வேதத்தை ஓதுவதற்கு முயற்சி செய்த ஒரு கீழ்ச் சாதியானை ராமசந்திரன் தண்டித்தான் என்கிற கதையை நான் தள்ளி விடுவேன். அது பின்னால் புகுத்திய செருகு கதையாகும். நான் வழிபடும் ராமன் சரித்திர ராமன் அல்ல. என் கருத்தில் பதிந்திருக்கும் பூரண ராமசந்திரனைத்தான் நான் வழிபடுகிறேன். சரித்திர ஆராய்ச்சியின் பயனாக ராமனைப் பற்றிப் புதிய புதியதாக மாறுபட்ட முடிவுகள் ஏற்படலாம். அவை என்னைப் பாதிக்காது. என்னுடைய ராமன் வேறு. ஆராய்ச்சிக்காரர்களுடைய ராமன் வேறு. துளஸிதாஸர் பாடியிருப்பதும் அவருடைய தனி ராமனையே. ஆராய்ச்சிக்காரர்களுடைய பிரமாணங்களைக் கொண்டு பார்த்தால் துளஸி ராமாயணம் ஒரு பயனும் படாது; குப்பையில் தான் போட வேண்டும் என்பார்கள். ஆனால் பக்தனுக்குத் துளஸி ராமாயணத்தைப்போல் வேறு எந்தக் காவியமாவது சாஸ்திரமாவது கிடையாது. எனக்கு அது ஒரு ஒப்புயர்வற்ற கிரந்தமாகும். துளஸி ராமாயணத்திலுங் கூடப் பல பிரதிகளில் பல வேறுபாடுகள் காணப்படும். செருகு சுலோகங்கள் என்று சந்தேகிக்கலாம். அந்த நூலில் முதலிலிருந்து கடைசி வரை இடையறாது ஓடும் புனித பாவமே என்னை ஆட்கொண்டிருக்கிறது.

[யங் இந்தியா, 27—1—25]

மகாபாரதத்தில் வரும் கிருஷ்ணன் உண்மை மனிதனோ கற்பனையோ எனக்குத் தெரியாது. நான் பூஜிக்கும் கிருஷ்ண பகவான் மனிதனாகப் பிறந்து வாழ்ந்த எவனுமல்ல. தன்னைக் கௌரவிக்கவில்லை என்று ஒருவனைக் கொன்றுவிட்ட கிருஷ்ணனை நான் வணங்க மாட்டேன். பிற 'மதத்தினர் நெறி தவறிய சிறுவனாக எண்ணி வரும் கிருஷ்ணனை நான் வணங்கவில்லை. என்னுடைய கற்பனைக் கண்ணன் ஒருவித களங்கமுமற்ற அவதார புருஷன், கீதாசாரியன், கோடிக்கணக்கான மக்களுக்கு நன்னெறிபோதிக்கும் ஆசாரியன்.

மகாபாரதமானது இக்காலத்துச் சரித்திர புஸ்தகங்களைப் போல் நடந்ததைச் சொல்லும் சரித்திரப் புஸ்தகமென்று யாராவது எனக்கு நிரூபித்து விட்டு, அதில் வரையப் பட்டிருக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் உண்மையான நிகழ்ச்சி என்று உறுதிப்பட்டும், மகாபாரதத்தில் கிருஷ்ணன் செய்ததாகச் சொல்லப்படும் எல்லா நிகழ்ச்சிகளும் உண்மை என்றும் ஏற்பட்டு விட்டால் அந்தக் கண்ணன் கடவுள் அவதாரம் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். என்னை ஒழித்து சமுதாயத்திலிருந்து பகிஷ்கரிக்கலாம். ஆயினும் அத்தகைய கண்ணனைக் கடவுளாக ஒப்புக்கொள்ள மாட்டேன்.

மகாபாரதமானது ஆழ்ந்த கருத்துக்களடங்கிய அறநூல் என்பதில் சந்தேகமில்லை. அது சரித்திரமாக வைத்துக் கொள்வதற்கு எழுதப்படவில்லை. அதிலுள்ள நிகழ்ச்சிகள் நீதி உபதேசத்துக்காகக் கற்பனை செய்யப்பட்டவை. இது என்னுடைய மதம். நம்முடைய உள்ளங்களில் அறத்துக்கும் அதர்மத்துக்கும் இடைவிடாத போர் நடந்து வருகிறது. அதுவேதான் மகாபாரதப் போர். அந்தப் போருக்கு வடிவம் கொடுத்து நம்முடைய உள்ளங்களைக் கவரும்படியான வழியில் மனிதர்கள் போர்க்களத்தில் கூடி யுத்தம் செய்ததாக வர்ணனை செய்யப்பட்டிருக்கிறது.

மேலும் முதலில் எழுதிய மகாபாரதம் அப்படியே நமக்குக் கிடைத்திருப்பதாக வைத்துக் கொள்வதற்கில்லை. ரொம்பவும் மாற்றப்பட்டு அவ்வப்போது புதுச் சரக்குகளும் சேர்க்கப்பட்டிருப்பதாகவே நினைக்கிறேன்.

[யங் இந்தியா, 1-10-25]

அறநூல்களைப் பிழையின்றிப் புரிந்துகொள்ள வேண்டுமானால் அவற்றைப் பக்தியோடு படிக்க வேண்டும். வாழ்க்கை அனுபவத்தையும் செலுத்திப்



**கவர்னர் ஜெனரல் மாளிகையில் ராஜாஜியுடன் பிரதமர் நேருவும் சர்தார் பட்டேலும் முக்கிய விஷயங்களைப் பற்றி ஆலோசிக்கின்றனர்.**

படிக்க வேண்டும். சாஸ்திரங்களைக் கீழ் மக்கள் படிக்கக் கூடாது என்று சொல்லுவதின் பொருள் இதுவே. யார் கீழ் மக்கள் என்றால் பண்பாடு அடையாதவர்கள். கயவர்கள் வேதத்தையாவது மற்ற சாஸ்திரத்தையாவது படித்தால் தவறான பொருள்தான் கொள்வார்கள். சாஸ்திரம் படிப்பதற்கு எல்லாருக்கும் தகுதியிருப்பதாக வைத்துக் கொள்வதற்கு இல்லை. கணிதசாஸ்திர உயர்தரப் புஸ்தகங்களை எல்லாரும் படிக்க முடியுமா? படிப்படியாகப் பயிற்சி அடைந்த பிறகுதான் பொருள் தெரிந்து படிக்க முடியும். சாஸ்திரம் படிப்பதற்கும் பயிற்சி வேண்டும். தினமும் பாப காரியங்களைச் செய்து கொண்டிருக்கிற ஒருவன் ஹிந்து சாஸ்திரத்தைப் படித்து 'நான் பிரம்மம்', ஸோஹம் என்று சொல்லமுடியுமா?' நீயேபரம்பொருள்', தத்வமஸி என்று வேதாந்தத்தில் சொல்லி யிருப்பதை அவன் எவ்வாறு பயன்படுத்திக் கொள்வான்? பாப காரியங்களுக்கே அந்த உண்மையையும் உபயோகப்படுத்திக் கொள்வான் அல்லவா?

எனவே, சாஸ்திரம் ஓதிப் பயன்படுத்திக் கொள்வதற்கு முன் அதற்கு வேண்டிய வாழ்க்கைப் பயிற்சியும் பண்பும் அடைய வேண்டும். இயமம், நியமம் என்பது இதுவே. தகுதி பெறுவதற்குப் புலனடக்கமும் தினசரி கிரமங்களும் அவசியம்.

வாழ்க்கை எவ்விதம் நடத்த வேண்டும் என்பதை உணர்ந்து வாழ்க்கை நடத்தித் தகுதி அடைய வேண்டும். வெளிவேஷ மந்திரமும், தந்திரமும் மட்டிலும் போதாது. பழைய காலத்தில் தகுந்த ஆசாரியன் ஒருவனை அடைய வேண்டுமென்று சொன்னார்கள். இக்காலத்தில் தகுதி வாய்ந்த ஆசாரியனைப் பெறுவது கடினம். அதற்குப் பதிலாகப் பக்தி புகட்டும் எளிய நூல்களைப் படித்துப் பண்பு அடையலாம் என்று பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார்கள்.

பக்தி யில்லாதவர்களும் நம்பாதவர்களும் சாஸ்திரங்களுக்குப் பொருள் கூற முடியாது. பக்தியும் நம்பிக்கையு மில்லாமல் அதிகப் படிப்பு மட்டும் அடைந்தவர்கள் உண்டு. அத்தகைய வித்வான்களும்கூட சாஸ்திரத்துக்குப் பொருள் சொல்லி உபதேசம் செய்ய முடியாது. ஆத்ம அனுபவம் பெற்றவர்கள்தான் சாஸ்திரம் போதிக்க முடியும்.

எல்லாவற்றுக்கும் மேல் ஒரு முக்கியமான பிரமாணம் உண்டு. உண்மைக்கு மாறானது சாஸ்திரத்தின் பொருளாகாது. சத்தியம் என்றால் என்ன என்று விதண்டாவாதம் செய்பவனுக்கு நாம் ஒன்றும் சொல்ல இயலாது. சொல்லுவதில் பயன் இல்லை. அப்பேர்ப்பட்டவன் சாஸ்திரங்களில் ஒரு அர்த்தமும் காண மாட்டான்.

**[யங் இந்தியா, 12—11—25]**

# இனாம்






மறந்துவிடாதீர்கள்! "ஓ.கே." வனஸ்பதி டின்களில் பரிசுக் கூப்பன்கள் உள்ளன. அவற்றிற்குப் பதிலாக அழகான அமைப்புடன் கூடிய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களை வெகுமதியாகக் கொடுக்கிறோம். "ஓ. கே." வனஸ்பதி கூப்பன்கள் சேருங்கள். உங்களுக்குப் பிடித்த பரிசைப் பெறுங்கள்.

மேலும் விவரங்கள் அறிய, உங்கள் அருகில் உள்ள "ஓ. கே." வியாபாரியிடமிருந்து படங்களுடன் கூடிய 'போல்டரை' வாங்கிப் பாருங்கள்.

## OK ஓ.கே வனஸ்பதி

ஒரு அவுன்ஸிற்கு 700 I.U. வைட்டமின் 'A' கொண்டது
1, 2, 5, 10 பவுண்டு டின்களில் கிடைக்கிறது.

தயாரிப்பவர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1.

EP

# ஜாக்கிரதை! சிறிதும் சிந்தக்கூடாது

சிந்திய பாலைப்பற்றி கவலைப்பட்டு பிரயோஜனமில்லை எனக் கேள்விப்பட்டிருக்கிறேன்! ஆனால் ருசிவாய்ந்த என் க்ளாக்ஸோ ஆகாரத்தை ஒரு துளி சிந்த நேரிட்டாலும், எனக்கு அழுது கூச்சலிட நியாயம் உண்டு என்பதைத் தெரிவிக்கிறேன். இது தவிர வேறு ஒரு பொழுதும் நான் முணு முணுப்பதை நீங்கள் பார்க்கமாட்டீர்கள். ஒழுங்காக எனக்கு க்ளாக்ஸோ கொடுக்க ஆரம்பித்த காலத்திலிருந்து, எல்லா க்ளாக்ஸோ குழந்தைகளைப் போல, நானும் குறைவற்ற செல்வமாக விளங்குகிறேன்.

நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ

**Glaxo**

குழந்தைகளின் பரிசுத்தமான
பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புது டில்லி



# புஷ்பவனத்தின் வெற்றி

க. பஞ்சாபகேசன்

"நாணு இருக்கிருனு?" என்று குரல் கொடுத்துக் கொண்டே ராமலிங்கம் வீட்டு வாசற்படி ஏறினர்.

பாகீரதி அந்தக் குரலைக் கேட்டு முகத்தைச் சுளித்துக் கொண்டதை ராமலிங்கம் அறியார். பாகீரதி அப்போது கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு, துளிர் வெற்றிலைகளைக் காம்பு நீவிக் கொண்டு, மடித்து வாயில் போட்டுக் கொண்டிருந்தாள். தன் தமையனுடைய குரல் கேட்கவும், 'ஆமாம். இவனுக்குக் காரியம் ஆக வேண்டும் என்றால் நாணு வேண்டும்' என்று மனத்துக்குள் அலுத்துக் கொண்டாள்.

இதற்குள் ராமலிங்கமே கூடத்துக்கு வந்து விட்டார். பாகீரதி எழுந்திருந்தாள்.

"வா; அண்ணு!"

"நாணு இல்லையா?"

"இப்பொழுதுதான் குடியானவத் தெருவுக்கு அனுப்பினேன். கணக்குப்பிள்ளை முருகேசத்திடமிருந்து நாலு தேங்காய்கள் வாங்கிக் கொண்டு வா என்று...."

"இதோ பார், பாகீரதி! தேங்காய் வேண்டுமென்றால் என்னிடம் அனுப்பியிருக்கப்படாது? நாலுக்குப் பத்தாய்க் கொடுத்து அனுப்பியிருப்பேனே! அது கிடக்கிறது. நாணு வந்தால் கொஞ்சம் நம் வீட்டுப் பக்கம் வரச் சொல்லு."

"என்ன அண்ணு விசேஷம்?"

இப்படிப் பாகீரதி கேட்கவும் ராமலிங்கத்துக்கு ஆச்சரியமாயிருந்தது. எப்போதும் 'ஆகட்டும்' என்று சொல்லும் பாகீரதி இன்றைக்கு 'எதற்கு?' என்று கேட்ட தோரணை அவருக்கு மிகுந்த ஆச்சரியத்தைத் தந்து விட்டது.

"அனுப்பேன்...அப்புறம் சொல்கிறேன்."

"எதற்கு என்று தான் சொல்லேன், அண்ணு!" என்ருள் பாகீரதி.

"இது என்ன பாகீரதி, நீ ஏதோ வித்தியாசமாக இன்றைக்குக் கேட்கிருற்போல் இருக்கிறது?"

"நீதான் ஏதோ வித்தியாசமாக நினைத்துக் கொண்டிருக்கிருய், அண்ணு! நான் ஒன்றும் விகல்பம் தொனிக்கப் பேசவில்லை."

"புறமடைப் பக்கம் நாணுவைக் கொஞ்சம் காரியமாக அனுப்ப வேண்டும்."

"அண்ணு!"

"என்ன பாகீரதி?"

"காலையில் நான் கேள்விப்பட்டேன் அண்ணு! நீ செய்கிற காரியம் கொஞ்சமும் நியாயம் இல்லை...."

"நீ என்ன பேசுகிருய், பாகீரதி?"

"நட்டாற்றில் இன்றைக்கு மாலையில் வருகிற முறைத் தண்ணீரைப் புறமடைப் பக்கம் அடைத்து வலப்புறமாயுள்ள உன் நாற்றங்கால் நிலத்தில் பாய்ச்சிக் கொள்ளத்தானே நீ ஏற்பாடு செய்கிருய்? இடப்புறமாயுள்ள நாற்றங்காலில் நானே நடவை. இன்றைக்குத் தண்ணீர் பாயா விட்டால்....?"

"பாகீரதி, அது யார் நிலம் தெரியுமா?"

"தெரியும்! கணக்குப்பிள்ளை முருகேசத்தினுடையது...."

"தெரிந்திருந்தும்...."

"அண்ணு! நீ இப்படி விரோதம் பாராட்டுகிறது உனக்கே கஷ்டமாக முடியும்."

"நீயே—என் கூடப் பிறந்தவளே—இப்படி விரோதமாக வந்து மூளுகிற போது, இதை விட வேறே கஷ்டமொன்று வரவேண்டுமா? போகிறது! நாணுவை அனுப்பப் போகிருயா இல்லையா?"

"அண்ணு! என் பிள்ளை நாணு ஏதோ ஊரில் நாலு பேருக்கு நாலு உபகாரம் செய்கிருன் என்றால், அதற்காக இந்த மாதிரி இல்லுமல்லான காரியங்களுக்கு வரணுமா? அவனை நிச்சயம் அனுப்ப மாட்டேன்."

"இது தீர்மானமான முடிவு தானு, பாகீரதி?" என்று கேட்டார் ராமலிங்கம்.

"ஆமாம்" என்ருள் அவள் உறுதியோடு.

"ஸ்கூல்படிப்பைக்கூட எட்டிப் பார்க்காமல், கொஞ்ச நஞ்சம் இருக்கும் சொத்தையும் கரைத்துக் கொண்டிருக்கும் உன் பிள்ளைக்கு இதைவிட என்ன தெரியும்? கூடப் பிறந்த பிறப்புக்களைக்கூட இந்தக் காலத்தில் நம்ப முடிகிறதில்லை!" என்று கோபத்துடன் கூறி விட்டு ராமலிங்கம் அங்கிருந்து போனர்.

புறமடைப் பக்கம் அன்றைக்கு யாரும் தண்ணீரை அடைக்கவில்லை. தண்ணீர் கணக்குப் பிள்ளை முருகேசத்தின் நாற்றங்கால் நிலத்துக்கும் பாய்ந்தது; அந்த ஊரில் இருந்த

பிரபல மிராசுதார் ராமலிங்கத்தின் நிலத் துக்கும் பாய்ந்தது.

ஆனால் நாணுவும் பாகீரதியும் 'தங்கள் உறவு மனிதர்' என்று சொல்லிக் கொள்ளும்படியா யிருந்த ராமலிங்கத்தின் பகையைச் சம்பா தித்துக் கொண்டதுதான் மிச்சம்.

சாதாரணமான விஷயமா யிருந்தால் நாணு இதை அவ்வளவாகப் பாராட்டி யிருக்க மாட்டான். ஆனால் புஷ்பவனத்தை அவன் நினைவு கூர்ந்தபோது—

'இந்த அம்மா இத்தனை அவசரப்பட்டிருக்க வேண்டாம்' என்றே அவனுக்குத் தோன்றி யது. புஷ்பவனம் ராமலிங்கத்தின் ஒரே மகள். கால மாறுபாட்டாலும் சந்தர்ப்பச் சூழலாலும் பாகீரதி ஏழைமை ஸ்திதியை எட்டியபோது, அவளுடைய தமையன் ராம லிங்கம் நல்ல சொத்து சுதந்திரத்துடன் கிரா மத்தில் விளங்கினான். ஏதோ தனக்கு இருந்த குறைந்த பூஸ்திதியோடு பாகீரதி தன் ஒரே மகன் நாணுவுடன் ஒரு சிறிய வீட்டில் குடித் தனம் செய்து வந்தாள்.



நாணு பள்ளிக்கூடப் படிப்பின் உச்சியில் 'டபக்' கென்று நிறுத்தி, அங்கேயே நிரந்தர மான ஒரு புள்ளி போட்டு விட்டான். படிப் பில் குறைந்து விட்டாலும் நாணு ஆளழகில் குறைந்தவன் இல்லை. நல்ல கட்டுமஸ்தான உடம்பும், அழகிய கருளான கிராப்பும், சிவப்பான மேனி வண்ணமும் நாணுவை உயர்ந்த அழகனாக்கின. இவை எல்லாவற் றுக்கும் மேலே யாரிடமும் பணிந்து பேசும் சுபாவமும் இனிமையான குரலும் கூட அவனுக்கு இருந்தன.

"என்ன இருந்தாலும் அம்மா, நீ கொஞ் சம் பொறுமையாக இருந்திருக்கலாம். மாமா தான் முன்கோபக்காரர் என்று உனக்குத் தெரியாதா?" என்றான் நாணு பாகீரதியிடம்.

"போடா, நீ ஒண்ணு! உன் மாமா தன் பெண்ணை உனக்குக் கொடுப்பான் என்று சொப்பனம் காண்கிறாயா? அதெல்லாம் ஒன்றும் நடக்காது, அப்பா, நடக்காது. அவன் பணக்காரன்; நாம் ஏழை.. தவிரவும் நீ படிக்காதவன்; உத்தியோகமில்லாதவன்."

நாணு அதற்குமேல் அங்கே நிற்காமல் வெளியே போய் விட்டான்.

'பாழாய்ப்போன படிப்பைப் படித்துத் தொலைத்திருக்கலாமே; வேலை வெட்டி என்று ஏதாவது பார்த்துத் தொலைத்திருக்கலாமே' என்று நினைத்து மனசுக்குள் பொருமிக் கொண்டே, நட்டாற்றங் கரையிலிருந்த தென்னந் தோப்புப் பக்கம் போனான். போகிற வழி யெல்லாம் புஷ்பவனம் நின்றதைப் போலவே தெரிந்தது நாணுவுக்கு.

"நாணு....!"

மெல்லிய, மனோகரமான குரல் பின்னால் கேட்டது. தாழம்பூவின் இனிய மணம் நாசி யைத் துளைத்தது. ஆனால், தென்னந் தோப் பின் நடுவில் ஓடிய சிற்றோடையின் சிறிய மதகுக் கதவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, கீழே 'சல சல' வென்று ஓடிக்கொண் டிருந்த தண்ணீரைப் பார்த்துக் கொண்டு சிந்தனை யில் ஆழ்ந்திருந்த நாணுவுக்கு அந்தக் குரல் காதில் விழவில்லை.

"நா....ணு....!"

திரும்பிப் பார்த்தான்.

புஷ்பவனம்!

இலேசான மஞ்சள் வாயிலில் புதுப் புடவை கட்டி யிருந்தாள் புஷ்பவனம்; நீண்டு தொங் கிய கேசத்தில் மணமொழுகப் பட்டை பட்டையாகச் சூடியிருந்தாள் தாழம்பூவை. அந்தத் தென்னந் தோப்பே மணமோடிற்று.

"நீயா புஷ்பா?"

"ஆமாம், அத்தான், ஆமாம்! அதென்ன அப்படிச் சிந்தனை? எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போகிறாய்?"

"எந்தக் கோட்டையையும் இல்லை.... அது சரி, புஷ்பா! நீ என்னுடன் பேச லாமா....?"

"ஏன் கூடாது? இதென்ன அத்தான், அப்படிக் கேட்கிறாய்?"

"கேட்க வேண்டி யிருக்கிறதனால் கேட் கிறேன். மாமாவும் என் அம்மாவும்...."

"அண்ணன்—தங்கைக்குள் சண்டை யென் றால் நமக்கென்ன, அத்தான்? கோபமே வராத உனக்குக் கோபம் வந்தால், அடே யப்பா, உன் சிவப்பு மூக்கெல்லாம் எப்படிச் சிவந்து போகிறது?....அது சரி, அத்தான்! வாயைத் திற!"

"என்ன அது?"

"திறவேன்...."

நாணு வாயைத் திறந்தான்.

"கண்ணை மூடு!"

"ஏன்?"

"மூடேன்!...."

நாணு கண்ணை மூடிக் கொள்ளவும், புஷ்ப வனம் தன் உள்ளமெல்லாம் மகிழ, உட லெல்லாம் புளகாங்கிதமடைய அவனுக்காகக் கொண்டு வந்த மைசூர்ப்பாகை அவன் உதடுகளில் வைத்தாள்.

"அத்தான்!"

"என்ன புஷ்பா?"

"ஒன்று சொல்வேன். கோபிக்காமல் பொறுமையாகக் கேட்பாயா?"

"என்ன?"

"நாளைக்குக் கும்பகோணத்திலிருந்து என்னைப் பெண் பார்க்க வருகிறார்கள்!"

"என்ன!"

"பார்த்தாயா, பார்த்தாயா! கோபம் வந்து விட்டதே!....நான் என்ன செய்யப் போகிறேன், தெரியுமா?"

"என்ன செய்யப் போகிறாய், புஷ்பா?" என்று கவலை ததும்பக் கேட்டான் நாணு.

"அந்தக் கும்பகோணத்து வரனைச் சம்மதித்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன் என்று பயப்படுகிறாயா அத்தான்? அதுதான் இல்லே....என்ன செய்யப் போகிறேன் என்று நாளைக்குப் பாரேன். நீ மட்டும் அத்தான், உன் வீட்டை விட்டு அந்தப்பக்கம் இந்தப் பக்கம் போய் விடாதே!...." என்றாள் புஷ்பவனம், படபடவென்று.

பிறகு அங்கிருந்து போகவும் புறப்பட்டாள் புஷ்பவனம்.

"ஏய், புஷ்பா! சொல்வதைப் புரியும்படியாகச் சொல்லி விட்டுப் போயேன்...." என்றான் நாணு.

"அத்தான்! அத்தையும் என் அப்பாவும் இப்போது சண்டை பிடித்துக் கொண்டிருக்கிறது எனக்கு நல்லதாய்ப் போயிற்று!.... உன்னைத் தவிர என்னை யாருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விடுவாராம் இந்த அப்பா? அதையும் பார்த்து விடுகிறேன்!" என்று சொல்லி விட்டுப் புஷ்பவனம் நாணுவின் மறு பேச்சுக்குக் காத்திராமல் அங்கிருந்து போய் விட்டாள்.



அவள் மனமெல்லாம் நாணுவே நிறைந்து நின்றது அவளுக்குத் தானே தெரியும்?

புஷ்பவனத்துக்கும் தன்னிடம் கொள்ளை ஆசை என்பதை நாணு அறிவான். ஆனால் அழகும் செல்வமும் உள்ள அவள் எங்கே, தானெங்கே! கும்பகோணத்து மாப்பிள்ளைக்குச் சொத்து இருக்கிறது, படிப்பு இருக்கிறது, உத்தியோகமும் இருக்கிறது. தனக்கோ இந்த மூன்றுமே பூஜ்யம். அழகனாக மட்டும் இருந்து விட்டால் போதுமா?

யோசிக்க யோசிக்க நாணுவுக்கு மூளை குழம்பியது. 'ஆனால் கும்பகோணத்துப் பிள்ளை பெண் பார்க்க வரும்போது தான் ஏதோ வேடிக்கை செய்யப் போவதாகச் சொன்னாளே புஷ்பவனம், அது என்ன?' என்று மட்டும் யோசித்துப் பார்த்தான். நாணுவால் அதைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

**ம**று நாள், மத்தியானம் மணி மூன்று. அப்போதுதான் நல்ல சுபவேளை. ராமலிங்கத்தின் பெரிய வில் வண்டியில் கும்பகோணத்துப் பிள்ளை தன் பெற்றோருடன் வந்து இறங்கினான்.

ராமலிங்கம் அவர்களை உபசரித்து உள்ளே அழைத்துக் கொண்டு போய், கூடத்திலிருந்த வர்ண மயமான பட்டுப் பாயில் உட்கார வைத்தார்.

ராமலிங்கமும் அவர் மனைவியும் அங்கேயிருந்த இன்னும் சில பெண்மணிகளும் வந்தவர்களுக்கு மலர்ந்த முகங்களுடன் ஆசார உபசாரம் செய்தார்கள்.

சற்று நேரத்துக்குப் பிறகு ராமலிங்கம் தன் மனைவியைப் பார்த்து, "குழந்தையை அழைத்து வா" என்றார்.

**அ**தே சமயம், பாகீரதி அம்மாள் வீட்டு வாசற் கதவைப் படபடவென்று தட்டிக் கொண்டிருந்தாள் புஷ்பவனம்! சந்தனக் கலர்ப் புடவையும், அதே கலரில் சோளியுமாக வதன சௌந்தர்யம் ஜொலிக்க, கூந்தலில் செண்டான மல்லிகை சூடி அவள் நின்று கொண்டிருந்தாள். பெண் பார்க்க வந்தவனுக்கு எதிரே அப்போது அமர்ந்திருக்க வேண்டிய புஷ்பவனம், இந்தத் திவ்யகோலத்துடன் தன் அத்தை வீட்டு வாசற் கதவைத் தட்டிக் கொண்டிருந்தாள்.

வாசற்கதவைத் திறந்த பாகீரதி, திடுக்கிட்டாள். ஆனால் புஷ்பவனமோ 'சடக்' கென்று உள்ளே வந்து கதவைத் தாழ்ப்பாள் போட்டு விட்டாள். சற்றுத் தள்ளி ஈஸிசேரில் படுத்திருந்த நாணுவும் திடுக்கிட்டவனாய் அருகே வந்தான்.

"என்ன புஷ்பா, இது?" என்று திகைப்போடு கேட்டாள் பாகீரதி.

"இந்நேரம் அவர்கள் கும்பகோணத்திலிருந்து வந்திருப்பார்களே!" என்றான் நாணு மிகுந்த கலவரத்துடன்.

புஷ்பவனம் அலட்சியமாகக்கூடத்துத்தூணோடு சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஆற அமர வார்த்தைகளைச் சொன்னாள்:

"அத்தை! அத்தான்! நான் இனிமேல் இங்கிருந்து போக முடியாது. பெண் பார்க்க வருகிறார்களாம், பெண் பார்க்க! பெண்ணைப் 'பார்த்து விட்டு' நன்றாகத் திரும்பிப் போகட்டும்! இன்னொரு வேலைகூட நான் செய்து விட்டேன்.... அப்பாவின் நாற்றங்கால் நிலத்தில் இந்நேரம் புறமடையிலிருந்து தண்ணீர் 'குபுகுபு' வென்று பாய்ந்து கொண்டிருக்கும். நட்ட இளம் பயிர் முழுகிப் போகட்டும்! கேவலம், இந்தப் புறமடைத் தண்ணீரால் விரோதம்; சொத்துக்கும் உத்தியோகத்துக்கும் நான் பலி...."

பாகீரதி அத்தனையும் நிமிஷத்தில் கிரகித்துக் கொண்டாள். அவள் மனசில் ஒரு பூகம்ப அதிர்ச்சி உண்டாயிற்று. என்ன இருந்தாலும் அண்ணாவின் குடும்ப கௌரவம் தன்னுடைய குடும்ப கௌரவமே என்று அவள் மனம் கூறியது. கும்பகோணத்து மனிதர்களுக்கு முன்னால் தங்களுடைய கௌரவம் தாழ்ந்து விடக் கூடாது என்றும் அந்த மனம் சொல்லிற்று. அவ்வளவுதான். நாணுவைப் பார்த்துச் சொன்னாள் பாகீரதி.

"நாணு! உடனே புறப்பட்டுப் புறமடைப் பக்கம் ஓடு. மடையை அடைத்து நாற்றங்



பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு ரஷ்யாவைச் சேர்ந்த உஸ்பெக் நாட்டுக்குச் சென்றிருந்தபோது அந்த நாட்டுத் தலைவர்கள் வழங்கிய உஸ்பெக் தேசிய உடையை அணிந்து கொண்டார். நேருஜிக்கு அருகில் ஸ்ரீமதி இந்திரா காந்தியும் உஸ்பெக் உடையில் இருப்பதைப் பார்க்கலாம்.

கால் பாழாகாதபடி பார்த்துக் கொள். நான் இதோ வருகிறேன்....இந்தா, புஷ்பா! உடனே கிளம்பு!''

புஷ்பவனம் அத்தையின் வார்த்தையைத் தட்ட முடியாமல் திகைத்து நின்றாள். ஆனால் புஷ்பவனம் புறப்படும் வரை பாகீரதி காத்திருக்கவில்லை. வாசற் கதவைத் திறந்து, 'தர தர' வென்று புஷ்பவனத்தின் கைகளைப் பிடித்து அழைத்துக் கொண்டு, எதிரிலிருந்த தோட்டத்தின் வழியாக, வேகமாக ராமலிங்கத்தின் வீட்டில் புறக்கடைப் பக்கம் உள்ளே நுழைந்தாள்.

எதிர்ப்பட்ட ராமலிங்கத்தின் காதோடு காதாக விஷயத்தை வேகமாகச் சொன்னாள். ''நம் பகை கிடக்கிறது, அண்ணா! இந்தச் சமயத்தில் அதைப் பாராட்டாமல் கௌரவத்தைக் காப்பாற்றுவதைப் பாரு. புறமடையை அடைக்க நான் நாணுவை அப்போதே அனுப்பி விட்டேன்....'' என்று முக்கியமான பகுதியை மிகவும் அழுத்திச் சொன்னாள் பாகீரதி.

கண்களில் உணர்ச்சி வசத்தால் பொங்கி வந்த கண்ணீரை அடக்கிக் கொண்டே ராமலிங்கம், ''அம்மா, பாகீரதி! நீயே புஷ்பாவைக் கூடத்துக்கு அழைத்து வா....!'' என்றார். முறைப்படி அந்த வைபவத்துக்குத் தாம் அழைக்காத சகோதரியை அவரால் அப்போது அப்படித்தான் அழைப்பதற்கு முடிந்தது!

ஆனால்—

ராமலிங்கம் தமது அருமை மகள் புஷ்பாவை நாணுவுக்குத்தான் திருமணம் செய்து கொடுத்தார். ஏனென்றால் பாகீரதி புஷ்பாவைக் கூடத்துக்கு அழைத்துப் போய் நிறுத்தியபோது, அங்கே கும்பகோணத்துப் பேர் வழிகளைக் காணவில்லை. பத்து நிமிஷங்களுக்குப்பிறகு புறமடையை அடைத்து விட்டுச் சேறும் சகதியுமான கையோடு நாணுதான் அந்தக் கூடத்தில் வெற்றி வீரனாக வந்து நின்றுகொண் டிருந்தான்!

வாழைப் பழச் சீப்புக்கு நடுவில், 'எதற்கும் கடைசி உபாயமாக இருக்கட்டுமே' என்பதற்காகப் புஷ்பவனம் செருகி வைத்திருந்த காகிதத் துண்டு பெண் பார்க்க வந்த பிள்ளையாண்டானின் கையில் தட்டுப்பட்டது. அந்தக் காகிதத் துண்டு புஷ்பவனத்தின் மனத்தை அப்படியே அவனுக்குப் படம் பிடித்துக் காட்டி விட்டது. அதைக் கண்டு அந்த மாப்பிள்ளைப் பையன் திகைப்புற்றுவிட்டான். அவனைத் திகைப்பிலாழ்த்தும்படி செய்த அந்தக் காகிதத்தில் என்னதான் எழுதியிருந்தது?

''கும்பகோணத்துக்கு இன்னும் அரை மணியில் ரயில், பத்து நிமிஷத்தில் பஸ் இருக்கிறது. உங்களுக்கு எது சௌகரியமோ அப்படிப் போகலாம்!''

அதற்கு அப்புறம் அவர்களுக்கு அங்கே இருக்கப் பைத்தியமா, என்ன? வந்த சுவடு தெரியாமல் அவர்கள் அங்கிருந்து திரும்பிச் சென்று விட்டனர்.

''நீங்கள் புறமடையை அடைக்கா விட்டாலும் உங்கள் அம்மா என்னை வீட்டில் கொண்டு வந்து விட்டிருக்கா விட்டாலும் கூட நான் என் காரியத்தை அந்தக் கடிதம் மூலமாகச் சாதித்துக் கொண்டிருப்பேன்!'' என்றாள் புஷ்பவனம் நாணுவிடம்.

''நீ பெரிய கெட்டிக்காரி'' என்று நாணு சொன்னபோது புஷ்பவனத்தின் தந்தமயமான கன்னங்கள் அற்புதமாகச் சிவந்தன.

# கிரைப் ஸிரப் - ஐ. டி. எல்.



சிசுக்களின் ஜீரணக் கோளாறுகளை நீக்கும்
பிரபல நிவாரணி. உடனே குணம் தெரியும்.

தொடர்ந்து உபயோகித்தாலும்
ஹானி விளைவிக்காதது.




ஒரு ஐ. டி. எல். தயாரிப்பு




குழந்தைகள் விரும்பிச்
சாப்பிடக் கூடியது

தயாரிப்பாளர்கள்:

**தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிட்.,**
மல்லேஸ்வரம், பெங்களூர்-3.
விற்பனை டிப்போ: 35/37, தம்பு செட்டி தெரு, சென்னை-1.

WITZ-7 TM

# சிஸர்ஸ்

சிகரெட்டுகள்





அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்

**லாக்டோஜனில்** வளருகிறான்.




LG/G/14

"லாக்டோஜன்" ஹிந்தி புரோகிராமைக் கேளுங்கள்
ரேடியோ ஸிலோன் 41 மீடர் பாண்டு
பிரதி ஞாயிறுதோறும் இரவு 7-45 மணியிலிருந்து 8 வரை
பிரதி வியாழன்தோறும் இரவு 8-30 மணியிலிருந்து 8-45 வரை
விவரங்களுக்கு எழுதவும்:-
நெஸ்ல்ஸ் ப்ராடக்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்.,
த. பெட்டி நெ. 396 கல்கத்தா
த. பெட்டி நெ. 315 பம்பாய்
த. பெட்டி நெ. 180 மதராஸ்

## 14. எக்ஸ்ரே சோதனை

டி. பி. நோயைத் தடுப்பதில், உணவும் இட வசதியும் எத்தகைய பொறுப்பு வகிக்கின்றன என்பதை அறிந்துகொண்டோம். டி. பி. குடும்பத்தில் பரவாமல் இருக்க வேண்டுமானால் முதலில் டி. பி. தாக்கப்பட்டிருப்பதை வெகு சீக்கிரம் கண்டு பிடிக்க வேண்டும். சீக்கிரத்தில் அறிந்து கொள்ளத் திட்டம் கொள்வது நோயாளிக்கும் நன்மை; பிறருக்குப் பரவாமல் தடுக்கவும்ஏற்பாடுசெய்யலாம்.

டி. பி. தொத்திய பிறகு, நோயாளிக்கு இது எவ்வாறு ஏற்பட்டது என்ற ஆராய்ச்சி இன்றியமையாதது. நோயாளியினுடைய குடும்பத்தினரின் ஆரோக்கியமும் அவர்களுடைய உடல் சரித்திரமும் தீர்மானிக்கப்பட வேண்டும். இந்த ஆராய்ச்சி குடும்ப டாக்டர்களால் நடத்தப்பட வேண்டும். இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளில் குடும்ப டாக்டர்களே இந்த ஆராய்ச்சியை நடத்துகின்றனர். அரசாங்கமும் இந்த ஆராய்ச்சிக்கு உதவுகிறது. அந்த நாட்டில் குடும்ப டாக்டர்கள், குடும்பத்தில் ஒருவருடைய ஆரோக்கியத்தை மட்டும் கவனிப்பதில்லை. குடும்பத்தில் எல்லோருடைய ஆரோக்கிய வாழ்வும் தம் பொறுப்பென்று கருதுகின்றனர். அக் குடும்பத்தினரும் டாக்டர் வாக்கின்படி சோதனையும்செய்து கொள்வார்கள்; நடந்தும் கொள்வார்கள்.

இந்த ஒத்துழைப்பு நம் நாட்டில் இல்லை என்பது யாவரும் அறிந்ததே. இதற்கு டாக்டரை மட்டும் குறைகூறுவதில் பயனில்லை. டாக்டர் பத்தியம் விதித்தால், டாக்டர்தான் பத்தியமாக இருக்க வேண்டும். நோயாளி இருப்பது துர்லபம். நோயை வரும் முன் தடுப்பதும், மக்களை இயற்கை வழிகளில் நடக்கத் தூண்டுவதுமே டாக்டர்களின் கடமை.நோய் வராமல் தடுக்க வேண்டுமானால் இத்தகைய மனப்பான்மை கொண்ட மருத்துவர்களும், இவர் சொற்படி நடக்கும் குடும்பத்தினரும் தடுப்பு வழிகளில் அரசாங்க உதவியும் அவசியமாக வேண்டும். நம் நாட்டில் மருத்துவர்கள் போதாது. ஆராய்ச்சி விஞ்ஞான வசதிகளும் மிகக் குறைவு. வெள்ளை நாடுகளில் ஆயிரம் மக்களுக்கு ஒரு டாக்டர் உண்டென்றால், நம் நாட்டில் இருபதாயிரம் பேர்களுக்காவது ஒரு டாக்டர் உண்டா என்பது சந்தேகமே!

டி. பி. எப்படி வந்தது என்ற ஆராய்ச்சி, டி. பி. தாக்கப்பட்ட நோயாளியின் குடும்பத்தினருக்கு உதவக்கூடிய புத்திமதிகள்—இவை யாவும் தீவிரமாகஇருப்பதால்இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் டி. பி. என்ற பயங்கரம் பெரும்பாலும் ஒழிந்து வருகிறது.

மருத்துவர் எண்ணிக்கை உடனே அதிகரிப்பது என்பது சாத்தியமல்ல. அதற்காகக் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பதும் சரியல்ல. நாம் ஒவ்வொருவரும் அறிவு மிகுந்த டாக்டராக வேண்டும். ஒவ்வொருவர் ஆரோக்கியமும், ஒவ்வொரு குடும்பத்தின் நோய்த் தடுப்பும், அவரவர் கையில் இருக்க வேண்டும். "எனக்கு டி. பி. வராது; என் குடும்பத்தில் டி. பி. இல்லை" என்ற அலட்சியம் வேண்டாம்.

டி. பி. தொத்தக் கூடிய காரணத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். பிறருக்கு உதவுங்கள். அறியாமையே பெரிய அபாயம்! டி. பி. திருட்டு முறையில் பரவிக் கொண்டிருக்கும். சுற்றத்தினிடம் காணும் இருமல் — உஷ்ணம், சீதளம், வறட்சி என்ற நாமதேயங்களால் உதாசீனம் செய்யப்பட்டிருக்கும். இவர்கள் உடல் மெலிவது, கவலையினாலும் அதிக வேலையினாலும் என்று கருதி வாளாவிருந்து விடுவார்கள். முடிவில், இவர்களை எக்ஸ்ரே மூலம் பரிசோதனை செய்யும்பொழுது, நெடுநாள் டி. பி. என்பது புலனாகும்.

ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு டி. பி. ஏற்பட்டு விட்டால் அக் குடும்பத்தில் உள்ள எல்லோரையும் இந்த நோய் தொத்தி உள்ளதா என்று ஆராய்ச்சி செய்ய வேண்டும். 'நான் குண்டுமாதிரி இருக்கிறேன், அவன் காளை மாதிரி இருக்கிறான்' என்ற முறையில் யாரையும் ஒதுக்கக் கூடாது. எல்லோரையும் சோதிக்க வேண்டியதுதான்!

பல ஆண்டுகளுக்கு முன்னால் டி. பி. தாக்கியுள்ளதா என்பதை வெளிச் சின்னங்களிலிருந்து சந்தேகித்து நிச்சயிக்கப்பட்டது. மேல் நாட்டு முறையில், டி. பி. தாக்கியதை வெளிச் சின்னங்கள் வெளியான பின்பே ஆராய்ந்தனர். ஆயுர்வேத முறையிலும் சின்னங்களுக்குக் காத்திருக்க வேண்டும். ஆயினும் டி. பி. தாக்கியுள்ளதா என்பதை முன் கூட்டியே அறிய வழிகள்

இருக்கலாம். ஆனால் நோய் வந்தால் தானே ஆயுர்வேத வைத்தியரை மக்கள் அணுகி வருகிறார்கள். தடுப்பு முறையாக ஆராயச் சமயம் ஏற்படுவதில்லை. வெளிச் சின்னங்கள் கிளம்பும் முன்னரே டி. பி. தாக்கப்பட்டுப் பல மாதங்கள் ஆகியிருக்கும். டி. பி. யைத் தடுக்க விரும்பினால் வேறு முறைகளைத் தான் கையாள வேண்டும்.

ஒரு குடும்பத்தில் ஒருவரை டி. பி. தாக்கிவிட்டால் அக் குடும்பத்தினர் எல்லோரையும் எக்ஸ்ரே மூலம் சோதித்தல் நலம். எக்ஸ்ரேயிலும் பூச்சி புகுந்தவுடனே புலப்பட்டுவிடாது. எக்ஸ்ரே பரீட்சைக்குத் தென்படாமலேயே கூட டி. பி. உள்ளிருக்கலாம். இருமல் இருந்தால் கபம் சோதனை செய்யலாம். எல்லா டாக்டர்களும் டி. பி. விஷயத்தில் எக்ஸ்ரே படத்தைச் சோதனை செய்வதில் திறமை வாய்ந்தவரல்லர். நன்றாக நோய் பற்றிய பிறகு எல்லோரும் படத்தைப் பார்த்து டி. பி.யை நிச்சயிக்கலாம். டி. பி. புதிதாகத் தாக்கிய நிலை, அல்லது ஆரம்பநிலை இவற்றை அறிவதற்கு டி.பி.யிலேயே அதிகம் பயிற்சியுள்ள டாக்டர்களே தகுதியுள்ளவர்கள்.

தனிப்பட்ட டி. பி. டாக்டரிடம் உடலைப் பரிசோதித்துக் கொள்ளுவது நன்மை. ஒருவர் டி. பி. இருக்கிறது எனலாம். ஒருவர் இல்லை எனலாம். டி. பி. இருந்தாலும் இல்லாவிட்டாலும் யோக சிகிச்சையை ஏற்பது நன்மை. டி. பி. இல்லாவிட்டாலும் யோக சிகிச்சை இயற்கையை ஒட்டியதால் ஆரோக்கியம் பெருகுமே தவிர குறையாது. ஆனால் சந்தேக நிலையில் டாக்டர்கள் விஷ ஊசிகள் ஏற்றத் துவக்கினால், இதற்கு ஏன் இடம் தர வேண்டும்? இந்த ஊசிகளைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம். தற்காலத்தில் ஆஸ்பத்திரிகளில் இனமாக எக்ஸ்ரே சோதனை செய்வது உண்டு. டி. பி. மருத்துவச் சாலைகளில் மட்டுமே இதை எதிர்பார்க்கலாம். இத்தகைய வசதிகள் எத்தனை நகரங்களில் உள்ளன? இவை போதுமா? இதனால் டி. பி. தடுப்பு முயற்சி வெற்றி அடையுமா? சோம்பலிலும் வசதிக் குறைவிலும் ஆழ்ந்த மக்கள், நகரங்களுக்குச் சென்று ஆராய்ச்சி பெறுவது இயலாத காரியம். மருத்துவர்களுடன் சுற்றுப் பிரயாணம் செய்யும் எக்ஸ்ரே, கபம் ஆராய்ச்சி ரசாயனசாலை ஒரு ஜில்லாவுக்குப் பல ஏற்பட வேண்டும். ஒரு ஜில்லாவில் எத்தனை கிராமங்கள் உள்ளன? ஒவ்வொரு கிராமமும் குறைந்தது ஆறு மாதங்களுக்கு ஒரு முறையாவது சோதனைக்குள்ளாக வேண்டும். நோய்ச் சின்னங்கள் ஏதுமே இல்லாத மக்கள் எல்லோரையும் எக்ஸ்ரே படம் பிடிக்க வேண்டியது அவசியமில்லை. இருமல், உடல் இளைத்தல், கபம், அடிக்கடி இலேசான ஜுரம், சக்தி இன்மை முதலிய அம்சங்கள் உள்ளவருக்கு மட்டும் படம் பிடிக்கலாம். மற்றவர்களை ஸ்க்ரீனிங் (Screening) என்ற எக்ஸ்ரே சோதனைக்கு உட்படுத்தினால் போதும்.

டி.பி. யை நாட்டிலிருந்து விரட்டுவதற்குச் சானடோரியங்கள் அதிகரிக்க வேண்டுமென்பதல்ல. எத்தனை சானடோரியங்கள் இருந்தாலும், டி. பியை ஒழித்து விட முடியாது. சானடோரியத்திலிருந்து நற்சாட்சிப் பத்திரம் பெற்று வருகிறவர்களில் பெரும்பாலோர் மறுபடியும் டி. பி. தாக்கப்படுகிறார்கள். தீவிரமான தடுப்பு முறைகளைத் தேசம் முழுதும் கையாளுவதே டி.பி.யை ஒழிக்க வழியாகும். (தொடரும்)


## "கல்கி" நவம்பர் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலையை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.



அக்கொடிய

இருமலை

நிறுத்த

# பெப்ஸ்

## உபயோகியுங்கள்

இருமல், ஜலதோஷம், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இன்ப்ளூயன்ஸா, மற்றும் இதர தொண்டை, மார்பு உபாதைகள், ஹிருதயத்தையும், சுவாசப்பைகளையும் அபாயத்திற்குள்ளாக்குகின்றன. இவற்றிற்கு பெப்ஸ் உட்கொண்டு உடனே நிவாரணம் பெறுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும் மருந்து சத்துகள் இருமலை நிறுத்தி, ரணத்தை ஆற்றுகின்றன. மேலும் இவைகள் எரிச்சலுக்கு ஹிதமளிப்பதுடன், தீங்கிழைக்கும் கிருமிகளை நாசம் செய்கின்றன. குழந்தைகளும் வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.



# PEPS

பெப்ஸ் தொண்டை, மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-39-TAM

சோல் ஏஜண்டுகள் :

**தாதா அண்டு கம்பெனி**

86, லிங்கியப்ப நாயக் தெரு, சென்னை-3

# சைபால்

## CIBOL

வெட்டுக்காயம், சொறி சிரங்கு, வேனல் கட்டி தீப்பட்ட புண், முகப்பரு கரப்பான், சேத்துப் புண் முதலிய வியாதிகளைப் போக்குவதில் கைகண்ட களிம்பு

★

தயாரிப்பவர்கள் :

**தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி**

**மதுரை**

எல்லா சோதனைகளிலும் தேர்ச்சி பெற்ற ஆதர்ச டூத் பிரஷ் இன்றே வாங்குங்கள்- அதன் குணங்களை தெரிந்து கொள்ளுங்கள்




இந்தியாவிலேயே மிக்க அனுபவம் வாய்ந்த டூத் பிரஷ் தயாரிப்பவர்கள்

# மகத்தான விலைக் குறைவு

மிக நவீனமான 1956-ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக நேர்த்தியான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்

இலவசம்: ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டயம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



**நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்**

| | |
|---|---|
| 15 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 36/- |
| 17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 56/- |
| 21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 64/- |



**நெ. 1183 வளைவு வடிவம் 7¾ சைஸ்**

| | |
|---|---|
| 15 ஜுவல்ஸ் பிளேட் க்ரோம் | 32/- |
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 38/- |
| 17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 63/- |



**நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்**

| | |
|---|---|
| 5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 19/- |
| 5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு C/S | 21/- |
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 28/- |
| 17 ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் | 37/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 42/- |



**நெ. 1186 லேடீஸ் 5¼ சைஸ்**

| | |
|---|---|
| 15 ஜுவல்ஸ் பின் லீவர் R/G | 45/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 48/- |
| 17 ஜுவல்ஸ் .. (20 மைக்ரோன்) | 65/- |
| 21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1182 வாட்டர் புரூப் 8¾ சைஸ்**

| | |
|---|---|
| 15 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 44/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 58/- |
| 21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1184 டோனோ வடிவம் 7¾ சைஸ்**

| | |
|---|---|
| 15 ஜுவல்ஸ் பிளேட் க்ரோம் | 34/- |
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 40/- |
| 17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 65/- |



**பாக்கெட் கடிகாரம்**

ஜுவல் உள்ளது 18/- — 15 ஜுவல்ஸ் 27/-

**அலாரம் டைம்பீஸ்**

| | | |
|---|---|---|
| 3" டயல் அலாரம் | ... | 15/- |
| ஸ்மித் அலாரம் 4½" டயல் | ... | 18/- |
| உயர்தர அலாரம் 5" டயல் | ... | 22/- |
| டபுள் பெல் 5" டயல் | ... | 18/- |

**PIONEER WATCH CO.,** POST BOX NO. 11428, CALCUTTA-6

பதின்மூன்றும் அத்தியாயம்

## இசைத் துறவி!

மன மகிழ்ச்சியோடு கைகூப்பிக் கொண்டு வந்தார் உதயசந்திரன், பூபதியை நோக்கி! அவருடைய முகத்திலே வீசிய அறிவின் ஒளியையும், எந்தக் கஷ்டத்தையும் சமாளித்து விடலாம் என்ற தன்னம்பிக்கையின் அறிகுறியையும் கண்டு, பூபதியின் உள்ளம் மலர்ந்தது. சமணத்துறவி பேசினார் :

'' நீங்கள் எல்லாரும் அரசப் பிரதானிகள். உங்களையெல்லாம் இப்படி வெளியிலே நிறுத்தி வைத்துப் பேசுவது பாபம்! குகைக்குள்ளே சென்று விடலாமே!'' என்றார் துறவி.

'' பெரியவரே! எங்களை அரசப்பிரதானிகள் என்கிறீர்கள். உங்களை என்னவென்று சொல்லுவது? வெறும் துறவி என்று மட்டும் சொன்னால் போதுமா ?''

இவ்வாறு கேட்டார் உதயசந்திரன். பூபதிக்கு இந்தக் கேள்வி ஒரு கணம் அதிர்ச்சியைத் தந்தது. துறவியையே ஏற இறங்கப் பார்த்தான்.

'' என்ன இளவரசே! என்னை ஏன் இப்படி ஒரே திகைப்போடு பார்க்கிறீர்கள்? திகைப்பெல்லாம் நீங்குகிற காலம் வந்து விட்டது. வாருங்கள், குகைக்குள்ளே செல்லுவோம்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே உதயசந்திரனையும் சித்திராங்க பூபதியையும் அழைத்துக் கொண்டு சித்தன்ன வாசல் குகைக்குள்ளே சென்றார் சமணத் துறவி. குதிரை வீரர்கள் கண்காணிப்போடு குகைக்கு வெளியே காவல் புரிந்தார்கள்.

காலை நேரத்தின் இளங் கதிர்கள் சித்தன்னவாசல் மலையிலே மரங்களோடும் செடிகளோடும் புல்வெளியோடும் அணைந்து விளையாடிக் கொண்டிருந்தன. அங்கங்கே மலையின் பரம்பரைக் குடும்பமான புள்ளி மான்கள் சூரியோதயத்தின் களிப்பிலே பாறைகளுக்கு மேல் துள்ளி ஓடிக் கொண்டிருந்தன. குகைக்குள்ளே மற்ற இரண்டு துறவிகளும் தங்களுடைய பிரார்த்தனையை அப்பொழுது தான் முடித்துவிட்டு, விருந்தினர்களை வரவேற்க ஆயத்தமாகி யிருந்தார்கள். குகையின் உள் அறை ஒன்றிலிருந்து அகிற்புகை 'கம்' என்று வாசனைச் சுழல்களை எழுப்பிக் கொண்டு வட்டம் சுற்றி வந்தது! அந்தப் பேரின்பமான வாசனையை நுகர்ந்து அனுபவித்துக் கொண்டே உள்ளே சென்றான் சித்திராங்க பூபதி.

'' மதிப்புக்கு உரிய அமைச்சர் பெருமானே! நீங்கள் நமது சித்திராங்க பூபதியைப் பல தடவைகள் சந்தித்திருக்கிறீர்கள் என்று சொன்னேன். சித்திராங்க பூபதிக்கு அதை நம்புவது கஷ்டமாக இருக்கிறது!'' என்று பேச்சை ஆரம்பித்தார் சமணத் துறவி. அருகிலே



அமர்ந்திருந்த பழைய இசைத் துறவி நகைத்தார். பூபதி அவரை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தான்.

நேற்று மாலை பூபதியோடு இசை சம்பந்தமாகப் பலமான தர்க்கம் செய்தாரே அந்தத் துறவியின் முகத்தை இப்போது மிகக் கூர்மையாகக் கவனித்துப் பார்த்த பூபதிக்கு வியப்பு மேலிட்டது! நேற்று இந்தத் துறவியை ஒரு இளைஞர் என்று நினைத்தான் அல்லவா, அதே துறவியின் முகந்தானா அது! நம்பவே முடியவில்லையே! மேலே போர்த்தியிருந்த பெரிய உடையை இப்பொழுது காணோம். பிரார்த்தனை முடித்து அப்பொழுதுதானே உள் அறையிலிருந்து அவர் வந்திருக்கிறார்! அவருடைய மேனியை ஆராய்ந்து பார்ப்பதற்கு இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது பூபதிக்கு!

இசைத் துறவியின் மார்பிலே பல வடுக்கள் தெரிந்தன! யுத்தப் பயிற்சியிலே தேர்ந்த உடம்பு அது! வேலோடும் வாளோடும் ஈட்டிகளோடும் பழகிய மார்பு அது! இரும்புக் கவசம் என்று ஒன்று தனியாக அந்த உடலுக்கு வேண்டியதில்லை! மார்பின் அமைப்பும், தசை நரம்புகளின் இணைப்பும் இயற்கையிலேயே இரும்புக் கவசம் பூட்டிய மாதிரிக் காட்சி தந்தன! பூபதிக்கு மெய் சிலிர்த்தது!

''இந்த இசைத் துறவி வெறும் சமண சந்நியாசி இல்லை! நாம் நினைத்தது போல் வயதில் இளைஞரும் இல்லை இவர்! பூர்வத்தில் எத்தனையோ பல மல் யுத்தங்கள் செய்து பழகிய உடல் இது! துறவியாக மாறிய பின்பும் உடம்பின் வயதையும் தளர்ச்சியையும் வென்று நிற்கக் கூடிய பல சித்தமூலிகைகளை உண்டு வலுப்பெற்ற சரீரம் இது! முகத்தையும் தோளின் அமைப்பையும் பார்த்தால் அரச குடும்பத்திலே பிறந்து வளர்ந்தவராகத் தோன்றுகிறது!''

இவ்வாறு எண்ணமிட்டான் சித்திராங்க பூபதி. உதய சந்திரன் இதைக் கவனித்து விட்டுச் சொன்னார்:

''வலம்புரித் தீவின் இளவரசே! இந்த இசைத் துறவியின் தோற்றம் இப்பொழுது உங்கள் திகைப்பை அதிகப் படுத்துகிறது என்பதைக் காண்கிறேன். அதிகமாக உங்கள் சித்தத்தைக் குழப்பிக் கொள்ளாதீர்கள். இங்கே நமக்கு முன்பாக வீற்றிருக்கும் இந்த இரண்டு பெரியார்களும் உங்களோடும் உங்களுடைய தீவோடும் நெருங்கிய தொடர்பு உள்ளவர்கள். மற்ற விவரங்களையெல்லாம் நீங்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பு உங்களிடமிருந்து நாங்கள் எதிர்பார்க்கிற விஷயம் ஒன்று உண்டு. நீங்கள் சொல்கிற விடையைப் பொறுத்துத்தான், இவர்களைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ளலாமா கூடாதா என்று நாங்கள் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது! இப்படி நான் சொல்வதற்காக என்னை மன்னிக்க வேண்டும். இன்று இந்தச் செந்தமிழ் நாட்டின் வானிலே போர் மேகங்கள் 'கரு கரு' என்று சூழ்ந்து வந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் நீங்கள் எங்களுக்குச் சொல்லப்போகும் விடைதான் பல எதிர்காலத் திட்டங்களை உருவாக்க வேண்டும். எனவே, உங்களிடம் வெளிப்படையாக எல்லா விவரங்களையும் மனம் திறந்து பேசுவதற்கு முன்பு, உங்களுடைய மன நிலையைப் பூரணமாக அறிந்து கொள்ள வேண்டியது எனது கடமை!''

இவ்வாறு பேசினார் உதயசந்திரன். அந்தப் பேச்சில் அன்போடு ஒரு கண்டிப்பும் இருந்தது! இதைக் கண்டு திகைத்த பூபதிக்குச் சமணத் துறவி சொல்லுவார்:—

''அரசியல் தந்திரி என்றால் இப்படித்தான் இருப்பார்! குளிர் காலத்தில் நெருப்பு நமக்கு மிகவும் அவசியந்தான், தீக்காய வேண்டியது முக்கியந்தான். அதற்காக நெருப்பிலே கொண்டு கையை வைத்துவிட முடியுமா? அரசியல் ஞானிகளோடு உறவு கொள்ள வேண்டிய முறையும் அப்படித்தான், இளவரசே! நெருப்பை விட்டு அகன்று விட்டால் உஷ்ணம் கிடைக்காது! மிகவும் நெருங்கி விட்டால் கையைப் பொசுக்கி விடும். நம்முடைய வள்ளுவர் பெருமான் பாடியிருக்கிறார், ''அகலாது அணுகாது தீக்காய'' வேண்டும் என்று! புரிந்ததா?''

இப்படிச் சொல்லி உதய சந்திரனுடைய வார்த்தைகளுக்கு விளக்கம் கொடுத்தார் சமணத் துறவி!



பூபதி மௌனமாக இருந்தான்! எது எப்படி யிருந்தாலும் உதயசந்திரன் உத்தமமான மனிதர் என்றும், நிகரற்ற அரசியல் ஞானி என்றும் பூபதிக்குப் பரிபூரணமாகப் பட்டது. அவருடைய தோற்றமும் பேச்சும் அவனை எல்லையற்ற வியப்பிலே ஆழ்த்தின. அவரைப் பார்க்கும் போதெல்லாம் பூபதியின் இதயத்தில் அளவுகடந்த பக்தியும் ஒரு பயமும் ஏற்பட்டன. பயம் என்றால் புலியையும் சிங்கத்தையும் கண்டால் ஏற்படுகிற பயம் இல்லை. அன்றொரு நாள் மாமல்லபுரத்து விடுதியிலே சித்தரைக் கண்டதும் ஒரு பயபக்தி உண்டாயிற்றே, அப்படிப்பட்ட இன்பமான ஒரு பயம்! இங்கிதமான ஒரு பக்தி! சொன்னான்:

''தமிழ் நாட்டின் விதியை நிர்ணயிக்கப் போகும் ஞானியார் அவர்களே! தங்களிடம் எனக்கு ஏனோ ஒருவித வியப்பும் என்னையும் மீறிய பக்தியும் ஏற்பட்டிருக்கின்றன! தாங்கள் என்னைப் பலமுறை சந்தித்திருப்பதாக இந்தத் துறவி சொல்லுகிறார். அதன் விவரம் எனக்குத் தெரியவில்லை. ஆனாலும் அன்று குங்கும மாளிகையிலே தங்களை ஒரு கணம் சந்தித்து நின்றேன் அல்லவா, அந்த ஒரு கணத்துக்குள் தங்களிடம் எனக்கு ஏதோ ஒரு நிரந்தரமான ஈடுபாடு உண்டாகி விட்டது! எந்த விஷயத்தை எப்பொழுது எனக்குச் சொல்லலாம் என்று தங்களுக்குத் தோன்றுகிறதோ, அப்பொழுது சொன்னால் போதுமானது. என்னிடமிருந்து ஏதோ தெரிந்து கொள்ள வேண்டும் என்று எண்ணுகிறீர்கள். தாராளமாகக் கேளுங்கள். தங்களிடம் எந்த விஷயத்தையும் மறைப்பதாக எனக்கு எண்ணமில்லை. தங்களுடைய கூர்மையான விழிகளைப் பார்க்கும் போதெல்லாம் என்னையும் மீறி என்னுடைய விழிகள் கலங்குகின்றன. தங்களை இதற்குமுன்பு எத்தனையோ தடவைகள் சந்தித்திருப்பது போலவும், தங்களிடமிருந்து ஏதேதோ கற்றுக் கொண்டிருப்பது போலவும் எல்லாம் என் மனத்தில் ஓர் எண்ணம் உண்டாகிறது. இந்த நாட்டில் அரசப் பிரதானிகள் எல்லாம் துறவிகளாகவும், துறவிகள் எல்லாம் அரசப் பிரதானிகளாகவும் விளங்குகிறார்கள். தங்களையும் அப்படிப்பட்ட ஒரு முனிவராகவே நான் கருதுகிறேன்!''

இப்படிப் பேசும்போது பூபதிக்குக் கண் கலங்கியது. நினைத்து வைத்து முன் கூட்டியே சிந்தித்து வைத்துப் பேசிய பேச்சில்லை அது! உள்ளத்திலிருந்து அப்படியே பசுமையாக வந்த வார்த்தைகள் அவை. அந்தச் சொற்கள் உதய சந்திரனுடைய உள்ளத்திலே பதிந்தன.

''இளவரசே! ஒரு மிகப் பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கே அந்தச் சிக்கலின் தன்மை தெரியாது! இந்த நிலையில், இந்தச் சிக்கலிலிருந்து உங்களை நான் விடுவிக்க வேண்டும் என்றால் நீங்கள் மகத்தான தியாகங்கள் செய்யச் சம்மதிக்க வேண்டுமே! உங்களுடைய இளம் உள்ளத்தில் அத்தனை உறுதி இருக்குமா என்றுதான் தயங்குகிறேன்!''



இவ்வாறு பேசினார் உதயசந்திரன். பூபதிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

"அமைச்சர் பிரானே! என்னை மேலும் மேலும் திகைப்பில் ஆழ்த்த வேண்டாம் என்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். எனக்கு எது நல்லது என்பது எனக்கே தெரியவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் உறுதி. என்னுடைய தாய் நாட்டுக்குப் பேரியாழ் போய்ச் சேருகிறவரை நான் நிம்மதியாக அமரப் போவதில்லை. அந்தப் பேரியாழோடு அந்தப் பேரியாழை வாசிக்கக் கூடிய..."



"நிறுத்துங்கள் நிறுத்துங்கள்!" என்று இடைமறித்தார் சமணத் துறவி. உதயசந்திரன் தம்முடைய மனத்தில் எழுந்த நகைப்பை அடக்கிக் கொண்டார்.

"இளவரசே! உங்களுடைய இலட்சியம் என்ன என்பதை நான் நன்றாக அறிவேன். அதே சமயம் அந்த இலட்சியத்தில் இப்பொழுது புதிதாக என்ன மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும்!..... சரி; எல்லா விருத்தாந்தங்களையும் விரிவாகப் பேசப் போகிறோம். இப்பொழுது என்ன அவசரம்! நிம்மதியாகஇருங்கள், இளவரசே! இப்பொழுது நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் என்னோடு புறப்பட வேண்டியது! அதாவது என் னிடம் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால்..!" உதயசந்திரன் இப்படிச் சொல்லி முடித்ததும், துறவி சொன்னார்:

"சித்திராங்கபூபதி! உங்களை இந்தக் குகைக்கு அனுப்பியவர் ஒரு மகா புருஷர் என்று நேற்றே சொன்னேனல்லவா? நினைவு இருக்கிறதா? எந்த மகா புருஷர் உங்களை இத்தனை காவலோடு சிவிகையிலே இங்கே அனுப்பி வைத்தாரோ, அதே மகா புருஷர்தான் இப்பொழுது உங்களை அவரோடு அழைக்கிறார்! இது வரை இந்த உத்தமரின் ஏற்பாட்டினால் உங்களுக்கு ஒரு விபரீதமும் நேர்ந்து விடவில்லை அல்லவா? உங்களுடைய தாய் நாட்டைப் பற்றிய வரலாற்றை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள், இங்கு வந்ததின் பயனாக! அது பெரிய நன்மைதானே? அதைப்போல இன்னும் நன்மைகள் ஏற்படுமே தவிர, விபரீதம் உண்டாகாது! ஆகையினால் நீங்கள் தயங்க வேண்டியதில்லை. உங்களை மயக்கம் போட்டு விழச் செய்து காட்டுக்குள்ளே கொண்டு போய் வைத்துப் பயமுறுத்துகிற சூழ்ச்சியெல்லாம் இந்த மகானிடம் கிடையாது! எத்தனை யுக்திகள் இருந்தாலும், அவையனைத்தும் அரச நெறியிலேதான் செல்லும்! பெருந்தன்மைக்கு ஒரு நாளும் குறைவு இராது; புரிந்ததா?"

சமணத் துறவி இத்தனை வார்த்தைகளைச் சொன்னபோதிலும், இவற்றிற்கு அவசியமே இல்லை என்பது போல, பூபதியின் மனநிலை இருந்தது!

"அமைச்சர் பெருமானே! நீங்களாகப் பார்த்து என்னை இந்தச் சித்தன்னவாசலின் தடாகத்திலே இறக்கினாலும் இறங்கி விடுவேன். சந்தேகம் இல்லை. ஆனால் என்னுடைய இலட்சியத்துக்கு மாறாகமட்டும் ஒரு காரியத்தைச் செய்ய மனம் இசைய மாட்டேன்!"

உதயசந்திரன் விடை கூறவில்லை. சிரித்துக் கொண்டார்!

## பதினைன்காம் அத்தியாயம்

# தஞ்சை அரண்மனை

"நிகம்பர தர்சன சாரம்" என்ற ஜைன நூலில் தமிழ் நாட்டின் பழங் காலச் செய்தி ஒன்று நமக்குக் கிடைக்கிறது. அதாவது கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் பாண்டியர்களுடைய மதுரை

# எக்லா
## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு



இந்த பரத நாட்டியக்காரியைப்போல்,
நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண
கால நிலையிலும்கூட குளுமையும் இத
மும் பெறலாம். மனோரம்மிய மணம்
பெற்ற எக்லா டால்க் உபயோகி
த்தால் குளுமையான நுண்ணிய
சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை
அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

*மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட*




கால்கேட்
# எக்லா
## டால்க் பவுடர்

யம்பதியில் பூஜ்ய பாதா
என்ற சமண முனிவரின்
மாணவராகிய வஜ்ர நந்தி
என்ற துறவி, "திராவிட
சங்கம்" என்ற பெயரில்
ஒரு மாபெரும் தமிழ்ச் சங்
கம் அமைத்தார். இந்தச்
சங்கம் தமிழ் மொழியின்
இலக்கண இலக்கிய வளர்ச்
சிக்காகவே அக் காலத்தில்
தொடங்கப்பட்டது. இந்
தச் சங்கத்தின் கிளைகள்
தமிழ் நாட்டின் பல பகுதி
களிலும் இருந்தன. சமண
முனிவர்கள் நடத்தி வந்த
எத்தனையோ பல ஜைன
சங்கங்களுக்கெல்லாம் தலை
மைச் சங்கமாக இந்தத்
திராவிட சங்கம் பணி
செய்து வந்தது. தமிழ் நாட்
டில் ஜைன சமயத்தைச்
சேர்ந்த பல அரசர்கள் அக்
காலத்தில் இருந்ததால் இந்
தச் சங்கங்களின் வளர்ச்சி
தடையின்றி நடைபெற்று
வந்தது. ஆனால் தஞ்சையில்
அரசாண்டு வந்த முத்தரை
யர்கள் சமண சமயத்தை
விட்டுச் சைவ சமயத்திலே
ஈடுபட்டதால், மதுரையி
லிருந்த சமண சங்கத்துக்
குத் தஞ்சையிலே ஒரு தீவிர
மான எதிர்ப்பு ஏற்பட்டு,
இந்த எதிர்ப்பிலே பலதுறவி
களும் பங்கு கொண்டார்
கள். சமணத்துறவிகளோடு
பழகியவாறே சமண சம
யத்துக்கு எதிராகப் பல
வேலைகள் செய்த தொண்
டர்களும் தஞ்சையிலே
இருந்தார்கள். எனவே,
உதயசந்திரன் இந்தச் சங்
கங்களைச் சேர்ந்த சமணத்
தொண்டர்களையும் தம்
வளர்ச்சியிலே சேர்த்துக்
கொண்டு அவர்களுடைய
ஒத்துழைப்பையும் பூரண
மாகப் பயன்படுத்தினார்.

பூபதியைச் சித்தன்ன
வாசல் மலையிலிருந்து குதி
ரைப் படையோடு இரகசிய
மாகத் தஞ்சைமா நகருக்கு
அழைத்துச் செல்லுகிற
முயற்சியில்பல துறவிகளின்
ஒத்தாசை உதய சந்திர
னுக்குக் கிட்டியது. திரு
ஞான சம்பந்தரும், திரு
நாவுக்கரசரும் தோன்றிய



ஸ்ரீ பண்டித மோதிலால் நேரு

பிறகு சமணர்களின் ஆதிக்கம் குறைந்து, சைவ சமயத்துக்கு விழிப்பு ஏற்பட்டதால், மதுரையிலிருந்த பல தொண்டர்களும் உதயசந்திரனின் முயற்சிகளுக்கு உதவி புரிந்தார்கள். இரகசிய உளவுப் படை காஞ்சிமா நகரத்தில் மட்டுமல்லாமல், தஞ்சையிலும், மதுரையிலுமே மிகவும் சாமர்த்தியமாக வேலை செய்து வந்தது. அதே சமயம் இந்த முயற்சிகளுக்கு எதிராகப் பாண்டியர்களும் வீர விக்கிரமனுடைய வீரர்களும் செய்து வந்த எதிர்ப்புக்களுக்குமே ஊத்தாசை கிடைத்து வந்தது! அன்றிருந்த நாட்டு நிலைமை அப்படி!

தஞ்சைமா நகரை நோக்கிப் புறப்படும் போது உதயசந்திரன் பூபதியிடம் இரத்தினச் சுருக்கமாக ஒரு



விஷயத்தைச் சொன்னார்: "இளவரசே! இப்பொழுது நான் உங்களை அழைத்துப் போவது, உங்கள் வலம்புரித் தீவின் மந்திரநாயகத்தைச் சந்திப்பதற்காகத்தான்!"

இவ்வாறு உதயசந்திரன் சொன்னதும், பூபதி சமணத் துறவியைப் பார்த்தான். அவர் கூறினார்:

"பூபதி! உங்களோடு நானும் இதோ நிற்கும் இந்த இசைத் துறவியும் ஒன்று சேர்ந்து யாத்திரை செய்ய வேண்டிய நாள் அதிக தூரத்தில் இல்லை. அப்படி நாம் எல்லாரும் சேர்ந்து யாத்திரை செல்லும்போது உங்களுடைய கேள்விகள் அனைத்துக்கும் விடை கூறுகிறேன்!"

இப்படிச் சொல்லி விட்டுப் பூபதியை வழியனுப்பினார்கள் சமணத் துறவிகள்!

உதயசந்திரனுடைய குதிரைப்படை தஞ்சையை நோக்கி விரைந்தது. வழியில் அங்கங்கே பல சமண சங்கங்களும், பல மடாலயங்களும், சத்திரங்களும் இவர்களுக்கு அளித்த வரவேற்பைப் பார்த்தபோது பூபதிக்குத் தலை சுற்றியது! "இவர்களில் யார் சமணர்கள்! யார் சைவர்கள்! யார் அரசப் பிரதானிகள்?" என்று தெரிந்து கொள்ள முடியாதபடி இருந்தது அவர்களுடைய நடைமுறை! இந்த அதிசயத்தையெல்லாம் பார்த்துக் கொண்டு தஞ்சைமா நகரை வந்து அடையும்போது பூபதி அந்த நகரத்தின் மதில்களையும், கோட்டை வாயிலையும், காவற்படைகளின் வைப்பு முறைகளையும் கண்டு பெரும் வியப்பில் மூழ்கினான். குதிரையில் சென்றுகொண்டே உதயசந்திரன் பூபதிக்கு முத்தரையர்களின் செல்வாக்கைப் பற்றியும், படைபலத்தைப் பற்றியும் வர்ணித்துக் கூறினார். "குஞ்சர மல்லர்" என்று அழைக்கப்பட்ட யானை வீரர்களைப் பற்றியும், "கைக்கோளர்" என்று அக்காலத்தில் அழைக்கப் பெற்ற படை வீரர்களைப் பற்றியும், "வில்லிகள்" என்றும் "வேளைக்காரர்" என்றும் பெயர் தாங்கிய மாபெரும் வீரர்களைப் பற்றியும் உதயசந்திரன் வர்ணித்தபோது, சித்திராங்க பூபதிக்குத் தமிழர்களின் வீரத்தைப் பற்றிய பெருமித உணர்ச்சியினால் தோள்கள் விம்மின; தமிழர்களின் பெருமையைக் கேட்டு உள்ளம் மலர்ந்தது.

"பூபதி! முத்தரையர்களிடம் பெருங் கடற்படை ஒன்று இருக்கிறது. வல்லத்து அரசரும் தஞ்சை முத்தரையர்களும் தாயாதிகள். இந்த இரண்டு அரச குடும்பங்களும் ஒன்று சேர்ந்து படை திரட்டி விட்டால், தமிழ்நாடு முழுவதையுமே ஒரு குடைக்கீழ் அடக்கி விடலாம்! அத்தனை பெரிய அரசர்கள் இவர்கள்! கடற்கரைப் பட்டினங்களிலே இவர்களுடைய செல்வாக்கு அபரிமிதமானது! இவர்களுடைய படைபலத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்றால், இந்தத் தஞ்சை மாநகரத்தில் * 'கடகம்' என்று அழைக்கப்படுகிற இடத்துக்கு உங்களை அழைத்துச் செல்லுகிறேன். நீங்களே உங்கள் கண்ணால் அதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்!"

இப்படியெல்லாம் முத்தரையர்களின் பெருமையை எடுத்துச் சொன்னார் உதயசந்திரன். இவ்வாறு அவர் சொல்ல வேண்டிய காரணம் என்ன என்பதை ஒருவாறு யூகித்தபோதிலும், சித்திராங்க பூபதிக்கு அதன் மர்மம் திட்டமாகப் புலப்படவில்லை. (தொடரும்)

* கடகம்—Cantonment.

# "ஆம், ஓவல்டின் எப்பொழுதும் நல்லது!"




வருஷக்கணக்கான அனுபவத்திலுல் 'ஓவல்டின்' எவ்வளவு நல்லது என்பது வயது முதிர்ந்த பெண்களுக்குத் தெரியும். அவளுடைய சின்னஞ்சிறு பேரனுக்கும் கூட அது நல்லதாக விளங்குகிறது. ஏனெனில் 'ஓவல்டின்'னின் தரம் ஒருபோதும் வித்தியாசப் படுவதில்லை. அதன் ஊட்டமளிக்கும் தன்மை மற்றும் வைடமின் பொருள்கள் எப்பொழுதும் அதே உன்னத நிலையில் இருந்து வருகிறது.

'ஓவல்டின்' பண்ணைகளில் அதில் உபயோகிக்கப்பட்டிருக்கும் சரக்குகளை சோதிக்கும் ஓர் 'நிரந்தர' 'அளவை' ஏற்படுத்தியுள்ளனர். 'ஓவல்டின்' லேபரட்டரிகளில் அதன் தயாரிப்பில் பிரதியொரு கட்டத்திலும் கடும் சோதனைகள் மேற்கொள்ளப் படுகின்றன. 'ஓவல்டின்'தான் வேண்டுமென்று கேளுங்கள். உலகெங்கிலும் வியாபித்துள்ள அதன் தரத்தின் கியாதி பிரதியொரு டின்னிற்கும் பக்கபலமாக விளங்குகிறது.

ரேடியோ சிலோன் ஓவல்டின் அமெச்சூர் நேரங்களைக் கேளுங்கள்: (ஷார்ட் 41.72மீட்டர்கள்) சனிக்கிழமைகளில் இரவு 8முதல 8-30மணி வரை. (ஆங்கிலம்–9520 கிலோ சைக்கிள்ஸ், 31 மீட்டர்கள்) ஞாயிற்றுக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30மணி வரை.

பிரதியொரு டின்னும் ஆரோக்கிய மயமான

# ஓவல்டின்



விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

IV. 497

## பிரகாசமுள்ள
## வெண்ணிறப் பற்கள்
## மட்டுமல்ல
## அத்துடன்
## ஆரோக்கியமான
## ஈறுகளும்!

ஈறுகளை கெட்டியாகவும் ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷ மாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பற்பசையில் டாக்டர் ஆர். ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறை யில் விசேஷ காரப் பொருள் கலக்கப்படுகிறது. ரத்தக்கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பி விடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரிய முள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப்படலாம்.

தன்த்வைதினால்
செய்யப்பட்ட டூத்பேஸ்ட்

**போர்ஹான்ஸ்**

ஈறுகளுக்குகந்தது



H.10



# பாச விலங்கு

சங்கர்

வேலூர் மத்திய சிறைச்சாலையிலிருந்து சேமங்கலம் ராமையாத் தேவர் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. தேவருக்கோ கண்களில் 'ஒளி' கிடையாது. அதாவது படிப்பு வாசனை இல்லை. ஆகவே மனைவியிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் கடிதத்தை எடுத்துக் கொண்டு ஓட்டமும் நடையுமாகக் கிராம முனிசீபு வீட்டை நோக்கி விரைந்தார்.

'கடிதம்' என்றதும் செல்லத்தம்மாளுக்கு, தேவரின் மனைவிக்கு, மகன் பூவலிங்கத்தின் முகம் கண்ணுக்குள் வந்து நின்றது.

''செல்லம்! பயல் அடுத்த மாதம் பதினோராம் தேதி வெளியில் வருகிறானாம். ஜெயில் அதிகாரியிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது'' என்று அவளை வீட்டுக்குள் அழைத்துக் கொண்டு போய் விஷயத்தைக் கூறினார் ராமையாத் தேவர்.

எதிர்பாராத இந்தச் செய்தியினால் செல்லத்தம்மாளுக்கு ஒரு மகிழ்ச்சி பிறந்தது; அதிர்ச்சி பிறந்தது; எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு ஆவேசமே பிறந்து விட்டது! ஏதோ பேச நினைத்தது வெளி வரவில்லை. பதிலுக்குக் கண்ணீர்தான் பொங்கிக் கொண்டு வந்தது! புருஷனின் கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி வெடிக்க ஆரம்பித்தாள்.

தேவரோ பதட்டம் சிறிதுமில்லாமல் ஒரு வறண்ட புன்னகையை நெளிய விட்டார். இதோடு மூன்றும் முறையாகப் பிள்ளையாண்டான் ஜெயிலுக்குப் போய்விட்டுத் திரும்புகிறான்! இன்னும் ஒரு மாதமோ, இரண்டு மாதங்களோ கழித்து மீண்டும் அடைபடப் போவது நிச்சயம்! அப்படியிருக்கும்போது பாசக் கண்ணீர் உகுப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? ஆகவே கல்லுப்போல இருந்தார் அவர். 'மகன் உருப்பட்டுவிடுவான்' என்ற நம்பிக்கை துளிக்கூடக் கிடையாது அவருக்கு. ஆனால் செல்லத்தம்மாள்?...அவள் தாயல்லவா! வயது இருபத்தைந்து ஆகியும் பூவலிங்கம் இன்னும் அவளுடைய மடியிலே ஒரு தவழும் சின்னஞ்சிறு குழந்தையாகத்தான் இருந்து வந்தான்.

''செல்லம்! அந்தத் தறிதலைப் பயலுக்காக நீ ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தினாலும் அது மகா பாவம்! என் மானம், மரியாதை, கௌரவம் எல்லாவற்றையும் தொலைத்தவன் அவன். இனிமேல் அவன் நமக்குப் பிள்ளையில்லை. ஏதோ ஒன்று பிறந்தது; பின்னாலே செத்துப் போய்விட்டது என்று மனசைத் தேற்றிக் கொண்டு விடு....''

கோவென்று வாய் விட்டுக் கதறினாள் செல்லம். பகற்பொழுது அந்த அழுகையிலே ஓய்ந்தது. அன்று இரவு படுக்கைக்குப் போன பிறகும் செல்லத்தம்மாளின் மனம் ஒருப்படவில்லை. மனத்துக்குள் ஏதேதோ திட்டங்களைப் போட்ட வண்ணம் குழம்பிக் கொண்டிருந்தாள். தேவரோ படுக்கையில் உணர்வற்று உறங்கிக் கொண்டிருந்தார். அவ்வளவு தூரம் வேதனையும் சோகமும் அவரை அடித்து வீழ்த்தியிருந்தன.

செல்லத்தம்மாள் மெல்ல எழுந்து வந்து, ''இந்தாங்க....'' என்று அவரை உசுப்பவும்

திடுக்கிட்டு விழித்தார். கடையோரத்தில் கண்ணீர் அரும்புகள் கரைகட்டி யிருந்தன.

"சொல்கிறேனென்று கோபித்துக் கொள்ளாதீர்கள். பூவலிங்கம் திருந்தி நல்லபடியாக ஆவதற்கு ஒரு மருந்து இருக்கு!"

"என்னது? உரம் போட்டாலும் எருக்கம் பூ மருக்கொழுந்தா மாறிடுமா? உடம்பை அலட்டிக் கொள்ளாமல் படுத்துத் தூங்கு. இனி நம்மாலே ஒண்ணும் முடியாது...." என்று கூறியவண்ணம் எழுந்து உட்கார்ந்தார் ராமையாத் தேவர்.

"நம்மாலே முடியா விட்டாலும் அதற்கு ஒரு வழி இருக்கு...."

"அப் .மன்னு?" என்று கேட்ட வண்ணம் மனைவியின் பேச்சிலுள்ள மர்மத்தைப் பிடிக்க முயன்ருர் தேவர்.

"எதற்கும் தாழக்குடிவரை போய் விட்டு வாருங்களேன். அந்த வீட்டில்தான் நம்ம பையனை நல்ல வழிக்குக் கொண்டு வருகிற மருந்து இருக்கிறது!"

ராமையாத் தேவருக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை!

*

"மருதம்! உனக்கு அத்தானை ஞாபகமிருக்கிறதா?" என்று கனிவோடு கேட்டுக் கொண்டே மருதத்தின் அடர்ந்த கூந்தலை வருடினுள் செல்லத்தம்மாள். சுருள் சுருளான கேசங்கள் அவள் விரல்களிலே சிக்காமல் பூப் போலக் கலைந்தன. மருதம் ஏதோ பேச வாயெடுத்தாள். அதற்குள் சீனித் தேவர் தோப்பிலிருந்து திரும்பி வந்துவிட்டார். வந்ததும் வராததுமாக வீட்டுக்குள் விளக்குக்கு முன்பாக வைக்கப்பட்டிருந்த பழக் குலையும், தாம்பாளத்தில் நிறைந்திருந்த தாம்பூலப் பொருள்களும் அவர் கண்களில் விழுந்தன.

மறு கணம் "மருதம்!" என்ற கம்பீரக் குரலும், "அப்பா! செமங்கலம் அத்தை வந்திருக்காங்க!" என்ற இன்னொலியும் ஒன்றையொன்று எதிர்கொண்டு தழுவின.

உடன் பிறந்தவள் வந்திருக்கிறுள், அதுவும் நெடு நாட்களுக்குப் பிறகு!

"வாம்மா செல்லம்! அத்தான் எல்லோரும் சௌக்கியம்தானே?" என்று கேட்டுக் கொண்டே பட்டகசாலைக்குள் நுழைந்தார் தேவர். அவரைக் கண்டதும் "அண்ணுச்சி!" என்று சொல்லி நிறுத்தினுள் செல்லம். சீனித் தேவர் அவள் வருகையின் நோக்கத்தைத் தெளிவாகப் புரிந்துகொண்டு விட்டார்!

மத்தியானச் சாப்பாடு முடிந்ததும் செல்லத்தம்மாள் பேச்சை ஆரம்பிக்க எண்ணித் தன் வெற்றிலைப் பெட்டியை எடுத்துக் கொண்டு தேவரின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். தேவரே பேச்சைத் தொடங்கினுர்:

"செல்லம்! நீ வந்திருக்கிற விஷயத்தைப் புரிந்து கொண்டேன். இந்த உலகத்திலே நாம் நினைக்கிறபடி என்னதான் நடக்கிறது? மருதம் தாயில்லாத பெண். அவளை ஒரு நல்ல இடத்திலே கொடுத்துவிட்டால் அப்புறம் எனக்கும் கவலை இல்லை. நான் இப்படி நினைத்திருக்கும் பொழுது மாப்பிள்ளையை ஜெயிலுக்குள்ளே வைத்துக் கொண்டு, நீயே பெண்ணுக்கு வந்தால் நான் என்னதான் சொல்ல முடியும்?" என்ருர் அவர்.

"அப்படி யென்ருல் மருதம் எங்கள் வீட்டுக்கு இல்லையென்று சொல்கிறீங்களா, அண்ணுச்சி?" என்று அழாக்குறையாகக் கேட்டாள் செல்லத்தம்மாள்.

"நான் என்னம்மா பண்ணுவேன்? ஊரு உலகம்னு ஒண்ணு இருக்கே!"

"அதனுலேதான் அண்ணுச்சி கேட்கிறேன். பூவலிங்கம் இனிமேலாவது நாலுபேருக்கு நல்ல பிள்ளையாக இந்த ஊரு உலகத்துக்கு முன்னுலே நடமாடணும்னு அது நம் மருதம் கையிலேதான் இருக்குது! அவனைச் சிறு வயசிலிருந்தே நல்லாத் தெரிஞ்சவள் அவள். அவள் மனம் வைத்தால் பூவலிங்கம் தங்கக் கம்பியாக ஆகிவிடுவான், அண்ணுச்சி! நீங்களும் இந்த விஷயத்திலே கொஞ்சம் யோசிக்கப் பார்க்க வேண்டும்...."

தங்கையின் பேச்சு சீனித் தேவருக்கு என்னவோபோல் பட்டது.

"தங்கச்சி! இனிமேல் என்னை வற்புறுத்தாதே! நான் மருதத்துக்கு ஒரு பெரிய இடமா பார்த்து விட்டேன். அடுத்த மாதம் முகூர்த்தத்துக்கும் ஏற்பாடு செய்தாச்சு. இந்த விஷயம் மருதத்துக்கே இன்னமும் தெரியாது. ஆகவே இந்தக் கல்யாணப் பேச்சிலே இனிமேல் புண்ணியமில்லை!"

செல்லத்தம்மாளின் ஆசைப் பூ வாடிக் குவிந்தது. ஆனுல் அதே சமயத்தில் கதவோரத்தில் நின்ற வண்ணம் இதுகாறும் நிகழ்ந்து கொண்டிருந்த பேச்சை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த மருதத்தின் மலர் வதனமும் கூம்பிக் கவிழ்ந்தது என்பது யாருக்குத் தெரியும்?

அன்னே சொரூப ராணியுடன் அருமை மகன் தேரு.





1947-ல் பாரத நாடு சுதந்திரம் பெற்றபோது தனிப்பெரும் தலைவர்கள் மந்திராலோசனை செய்யும் மெய் சிலிர்க்கும் காட்சி.

பின்னிலவுக் காலம். வானத்திலே உதயமாகிக் கொண்டிருந்த நிலாவை எங்கிருந்தோ வந்த கருமேகத் துண்டு ஒன்று விழுங்கப் பார்த்தது. அதற்கு இடம் கொடாமல் மேகத் திரைக்குமேல் தலைதூக்கிப் பார்த்தது வெண்ணிலா!

முற்றத்தில் கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த வண்ணம் குமும்பிக் கொண்டிருந்த சீனித் தேவருக்குப் பகீரென்றது.

"என்ன? வீட்டுக்குள்ளிருந்தா கேட்குது விம்மல் ஒலி?"

அப்படியே வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்த தேவர், பரபரப்புடன் "குழந்தே! கண்ணு!" என்று கதவைத் தட்டினார். கொஞ்ச நேரம் கழித்து எழுந்து வந்து தாழ்ப்பாளை நீக்கினாள் மருதம். வெளியிலிருந்து பாய்ந்து வந்த நிலவின் ஒளி அவள் முகத்தில் நிலாப் பூச்சியாகப் படர்ந்தது.

கலங்காத தேவரின் நெஞ்சம்கூட அப்போது கொஞ்சம் கலக்கமடைந்தது. மகளின் கண்களிலே கண்ணீர் என்றதும் அவருடைய உள்ளம் தவித்தது.

"குழந்தே! உனக்கு என்னம்மா வருத்தம்? எங்கிட்டே சொல்லக் கூடாதா?" என்று பரிவோடு கேட்டார். மருதம் இதுவரையும் அழுததால் உண்டான ஏக்கப் பெருமூச்சுக்களையெல்லாம் ஒவ்வொன்றாக வெளித் தள்ளினாள். இதயத்தை அமுக்கிக் கொண்டிருந்த பாரம் ஒருவாறு குறைந்ததும், தன்னையே தைரியப்படுத்திக் கொண்டு அவள் தந்தையிடம் கேட்டாள்:

"அப்பா! அத்தானுக்கே என்னைக் கட்டிக் கொடுத்து விடுங்களேன், அப்பா!"

"என்னம்மா குழந்தே! உன் புத்தி என்ன பிறழ்ந்து போச்சா? அவன் அயோக்கியன், போக்கிரி, முரடன்! அவனைப் போய்க் கட்டிக் கொள்கிறேன் என்கிறாயே! அப்பப்பா! அந்தச் சௌடால்க் கிராப்பையும் நறுக்கு மீசையும் நினைத்தாலே எனக்குக் குலை நடுங்குகிறது."

"அத்தானை மறுபடியும் நல்லவராக ஆக்க முடியாதா, அப்பா?"

"நல்ல கேள்வி கேட்டாய், அம்மா! அவன் நல்லவனாக ஆகவேண்டும் என்றால் நாம் சொந்தமாக ஒரு ஜெயிலைக் கட்டி அதிலே ஆயுள் முழுவதும் அவனை அடைத்து வைக்க வேண்டும். அப்போதுதான் அவன் காலையும் கையையும் வைத்துக் கொண்டு சும்மா இருப்பான்!"

"அத்தான் இப்போகூட ஜெயில்லேதான் இருக்காங்களாமே, அப்பா!"

"ஆமாம். மறுபடியும் திறந்து விட்டால் திருடப் போவானே, இல்லை கொலை செய்யப் போவானோ? யார் கண்டார்கள்? போம்மா கண்ணு! போய்ப் படுத்துக்கோ!" என்று சாமர்த்தியமாகப் பேசி மகளை அனுப்பிவிட்டு வெளியே வந்தார். வானத்தில் நிலாவை விழுங்க வந்த கருமேகத்துண்டு தோல்வியடைந்து போய்த் தூரத்திலே நீந்திப் போய்க் கொண்டிருந்தது.

★

பூவலிங்கம் விடுதலையாக இன்னும் கணக்காக ஏழு நாட்கள்தான் இருந்தன. செல்லத் தம்மாள் மகலை நேரில போய் அழைத்து வரப் புருஷனிடம் கெஞ்சிக் கூத்தாடினாள். ஏனையமாத் தேவரோ அவள் பேச்சை எடுத்



இடது புறம் நாற்காலியில் உட்கார்ந்திருப்பவர் அன்னை சொரூப ராணி, கைக்குழந்தை விஜயலக்ஷ்மியுடன் வலது புறத்தில் நிற்பவர் பண்டித மோதிலால் நேரு. நடுவில் நாற்காலி மீது உட்கார்ந்திருப்பவர் ஜவாஹர்லால்நேரு.

தனும் சீறிச் சீறி விழுந்தார். அந்தச் சந்தர்ப்பத்தில்தான் தாழைக்குடியிலிருந்து திருமண அழைப்பிதழ் அவர்களுக்கு வந்தது. அதாவது பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட மருதத்தின் கல்யாண அழைப்பிதழ் மேனி முழுவதும் மஞ்சளைப் பூசிக் கொண்டு வந்து நின்றது.

பூவலிங்கம் என்கிற பெயர் இருக்க வேண்டிய ஸ்தானத்திலே—யாரோ ஒரு சிங்காரம் போய் ஜம்மென்று உட்கார்ந்திருந்தான். செல்லத்தம்மாளுக்குக் கண்ணீர் தான்வந்தது.

அன்று ராமையாத் தேவர் தம்பதிகளுக்குள் எதிர்பாராத சமாதானமே நிலவியது. எல்லாவற்றுக்கும் மருதம்தான் காரணம்! மதலைப் பருவத்திலிருந்தே செல்லத்தம்மாளின் மடியிலே வளர்ந்தவளல்லவா மருதம்? இரண்டு தேவர்களின் குடும்பங்களும் ஒன்றாக இருந்த காலத்தில் பூவலிங்கமும் மருதமும் ஜோடிப் பறவைகளைப் போலப் பறந்து திரிந்த காலமும், அதன் விளைவாகப் பெற்றவர்கள் கட்டிய மனக் கோட்டைகளும் ஒரு கணம் அவர்களுடைய நினைவு வட்டத்துக்குள் தோன்றத்தான் செய்தன.

**தா**ழைக் குடியில்....

மங்கல வாத்தியங்களின் இன்னொலியும், குழந்தைகளின் ஆரவாரமுமாகக் கல்யாண வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. சீனித் தேவர் பம்பரம்போல் சுழன்ற வண்ணம் ஓடியாடிக் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் தம்பதி சமேதராய் வண்டியில் வந்து இறங்கினார் ராமையாத் தேவர். சீனித்தேவர் அத்தானையும் தங்கையையும் கண்டதும் வியப்பினால் அதிர்ச்சியடைந்து விட்டார். இவ்வளவு பெருந்தன்மையோடு அவர்கள் கல்யாணத்துக்கு வந்து சேருவார்கள் என்று அவர் கனவில்கூட எதிர்பார்க்கவில்லை.

''வாங்க அத்தான், வாம்மா செல்லம்!'' என்று வாய் குளிர வரவேற்று உபசரித்தார். அன்று நிச்சயதார்த்தம்! மறுநாள் காலையில் கல்யாணம்.

ஆனால் அன்றிரவு....

கல்யாண வீட்டின் அமர்க்களம் ஒரு விநாடி 'கப்சிப்' என்று அடங்கியது. 'கியாஸ்' லைட்டுகளின் அதிதமான இரைச்சலில் ஒருவர்க்கொருவர் 'கசமுச' என்று பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தனர்.

'' மாப்பிள்ளை எங்கே? மாப்பிள்ளையைக் காணவில்லையாமே!'' என்ற பேச்சு விசுவரூபம் எடுத்துக் கல்யாண வீட்டையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது!

'' இப்போ தானே நான் பார்த்தேன்! அங்கே தானே இருந்தார்!'' என்றவர்கள் எல்லாம் இரவு ஒரு மணிக்குப் பிறகு அடங்கியே போனார்கள். ஆக மொத்தம் நிச்சயதார்த்த இரவன்றே மாப்பிள்ளை சிங்காரம் மாயமாய் மறைந்து போய் விட்டார்!

சீனித்தேவர் அவமானத்தினால் குன்றிப் போய்விட்டார். அவருடைய உள்ளம் படபடவென்று துடித்தது. ராமையாத்தேவர் அவரைப் பலவாறு தேற்றினார். செல்லம்மாளோ ஒன்றும் புரியாமல் கையைப் பிசைந்தாள். முடிவில் கல்யாணத் தேதி ஒத்தி வைக்கப்பட்டது.

**ம**றுநாள் விடியற்காலை பலவித வதந்திகளுக்காக விடிந்தது! சீனித் தேவர் வீட்டை விட்டு வெளியில் தலைகாட்டவே இல்லை.

''அத்தான்! பூவலிங்கத்துக்கு என்றைக்கு விடுதலை?''

'' நாளன்னிக் காலையில்...!''

''வாங்க, அத்தான்! நாம் இரண்டு பேரும் போய் அவனை அழைச்சிக்கிட்டு வந்துடலாம். மருதத்துக்குத் தொந்தம் ஜெயிலுக்குள்ளே

# சுத்தமான முழு நறுமணமுள்ள காப்பி

நீங்கள் இலகுவாக வாங்கக் கூடிய விலையில்!









**Stanes**

ஸ்டேன்ஸ்
சிகப்பு லேபிள்
சுத்தமான காப்பி




ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த சுறு மணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது. நீங்கள் காப்பி வாங்கும்பொழுது, ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். இது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம்.

ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி காற்று புகாத ½, 1, 3, 7, 14, 20 பவுண்டு டின்களில் புத்தம் புதியதாக பாக் செய்யப்பட்டு உங்களுக்குக் கிடைக்கின்றன

**எல்லோரும் வாங்கக் கூடிய நல்ல காப்பி!**

## தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட்,

கோயம்புத்தூர், தென் இந்தியா

கோவை & சேலம் ஏஜண்டுகள் :

மெஸர்ஸ் புரொவிஷன் ஸ்டோர்ஸ், - ராஜா தெரு, கோயமுத்தூர்.

திண்டுக்கல் ஏஜண்டு :

மெஸர்ஸ் எம். எஸ். புகழகிரி நாடார் சன்ஸ், ஜெனரல் மர்ச்சண்ட், திண்டுக்கல்

இருக்கும் பொழுது நாம் என்ன செய்ய முடியும்?'' என்றார் சிவித் தேவர்.

ராமய்யாத் தேவரும் செல்லத்தம்மாளும் தங்கள் காதுகளையே நம்ப முடியாமல் திறங்கிப் போய் நின்று விட்டனர்!



மோதிலால் நேரு பாரத நாட்டுக்கு அளித்த சுயராஜ்ய பவனம்.

*

''கெட்டி மேளம்! கெட்டி மேளம்!'' என்று முழங்கினார் குருக்கள். நாயனத்தின் மங்கள இசை வெள்ளம் விம்மியது. பூவலிங்கம் எதிர்பாராது கிடைத்த இரட்டைக் குதூகலத்துடன் மருதத்தின் கழுத்திலே மூன்று முடிச்சுகளைப் போட்டான். இன்றைய நிகழ்ச்சி அவனுடைய உள்ளத்திலேயும் அவிழ்க்க முடியாத ஒரு பெரிய முடிச்சைப் போட்டு வைத்தது! தன்னையும் அறியாமல் ஒரு பாசபந்தம் அவன் கால்களை இறுகப் பிணைத்ததாக உணர்ந்தான்.

மாலையில் நலங்குக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. வேடிக்கை விநோதங்கள் பல நடந்தன. அப்போதுதான் சற்றும் எதிர்பாராதவிதமாக ஒரு பெரிய ஆச்சரியம் நிகழ்ந்தது. மாப்பிள்ளையையும் பெண்ணையும் வைத்துக் கொண்டிருந்த ஊஞ்சலின் 'கிரீச் கிரீச்' என்ற சத்தம் நின்றது. ''மாப்பிள்ளை! மாப்பிள்ளை!'' என்று கூடியிருந்தவர்களிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

''ஏன் இவன் எங்கே சிவபூஜையில் கரடி புகுந்த மாதிரி வருகிறான்?'' என்று ஒருவர் முணு முணுத்தார். வேறு சிலர் இவன் வந்ததால் ஏதாவது தகராறு நேர்ந்து விடக்கூடாதே என்று பயந்தனர்.

இத்தனை பேருடைய பயத்துக்கும் அங்கு திடீரென்று தோன்றிய ஓடிப்போன பழைய மாப்பிள்ளை சிங்காரம்தான் காரணம்!

விறு விறு என்று வந்தவன் பூவலிங்கத்தின் கையிலே ஒரு பொட்டலத்தைக் கொடுத்து விட்டு மின்னல் வேகத்தில் மறைந்தும் போய் விட்டான். தேவர் குடும்பத்தில் ஒருவராவது மூச்சுக் காட்ட வில்லை. காரியம் மங்களமாய் நிறைவேறி விட்டது. இனிமேல் பன்னிப் பன்னிப் பேசித்தான் பயன் என்ன?

மெல்லச் சிங்காரம் கொடுத்து விட்டுப் போன பொட்டலத்தைப் பிரித்தான் பூவலிங்கம். என்ன ஆச்சரியம்! ஒரு மரப்பாச்சிப் பொம்மை அதற்குள்ளே இருந்தது!

''பேஷ்! பூவலிங்கம், குழந்தையை எடுத்து உன் பெண்சாதியிடம் கொடப்பா!'' என்று சிரித்துக் கொண்டே அவனைத் தூண்டினாள் ஒரு பெண்மணி.

''பயல் ரொம்பப் போக்கிரியாக இருப்பான் போல இருக்கிறதே! பூவலிங்கத்தின் மகன் அல்லவா? அப்போ பெரிய 'ஜம்புலிங்க'மாகத்தான் இருப்பான்!''—கிழவர் ஒருவரின் கேலிப் பேச்சு இது.

கேலியா இது? பூவலிங்கத்தின் நெஞ்சிலே ஒரு கணம் புயல் வீசிற்று. திருநெல்வேலிச் சீமையிலே 'ஜம்புலிங்கம்' என்றால் பெரிய திருடன் என்று பொருள், அவன் பெயரைத் தன் பொம்மை மகனோடு இணைத்துச் சொன்னதைக் கேட்ட பொழுது அவனையும் அறியாமல் பூவலிங்கம் கண்களில் நீர் துளித்தது. நடுங்கும் கரங்களுடன் மரப்பாச்சி மகனைத் தன் அருமை மனைவி மருதத்திடம் நீட்டினான் அவன்.

* * *

மறுநாள் மருதம் தனிமையில் கணவனைச் சந்தித்தாள். பழைய சௌடால்த்தனத்தை யெல்லாம் உதறி விட்டு, பவ்யமாக வந்து நின்றான் பூவலிங்கம்.

''அத்தான்! நம்முடைய ராசாப் பயலுக்கு என்ன பெயர் வைக்கலாம்? தாத்தா சொன்ன மாதிரி ஜம்புலிங்கமா? இல்லே..'' என்று கேட்டாள் மருதம்.

''இல்லே, மருதம்! ஓடிப் போன மாப்பிள்ளை சிங்காரம் இருக்கிறானே அவன் பெயரைத்தான் வைக்க வேண்டும். என்னைத் திருத்தியவன் அவன். ஆனால் அவன் செய்த ஒரு குற்றத்துக்காகத்தான் நான் இந்தத் தடவை ஜெயிலில் இருந்தேன். அதற்குப் பிராயச்சித்தமாக உன்னை அவன் எனக்குக் கொடுத்து விட்டான். அழிந்து போக இருந்த என்னை ஆட்கொண்டவன் அவன். அவன் பெயரைவிட நம் குழந்தைக்குத் தகுதியான பெயர் ஏது?''

உணர்ச்சி வேகத்தில் பேசிக் கொண்டே போன பூவலிங்கத்தின் கரங்களை அன்போடு இறுகப் பற்றினாள் மருதம். பூவலிங்கம் புது மனிதனாகி விட்டான்.

இருபது வருஷங்களாக என்னிடமிருந்து, என் குடும்பத்துடன் ஒன்றிப் போனவள் கந்தாயி. அவளை எங்களிடமிருந்து வேறு பிரித்து நாங்கள் எண்ணுவதேயில்லை. என் குழந்தைகள் மூவரும் அவள் கையினால் எண்ணெய் தேய்த்துப் பால் புகட்டி வளர்ந்து வந்தவர்கள். இன்றும் என் கடைசிப் பையன் நீலமணி அவளிடம்தான் தூங்குவான். அவளாலும் அவனை விட்டு அரை நிமிஷம் பிரிந்திருக்க முடியாது. வீட்டுச் சாமான் ஒரு தூசு கூட வீண் போகச் சம்மதிக்க மாட்டாள். இத்தனைக்கும் அவளுக்கு நான் கொடுத்து வந்தது மாசம் பத்து ரூபாயும், சாப்பாடும், வருஷத்துக்கு இரண்டு புடவைகளும்தான். அதற்கு மேல் அவள் கேட்டதுமில்லை, நான் கொடுத்ததுமில்லை. மாதா மாதம் வாங்கும் அந்தப் பத்து ரூபாயையும் தன் வீட்டில் கொண்டு போய்க் கொடுத்துவிடுவாள். இப்படி எங்கள் குடும்பத்து மனுஷியாகவே பழகிவிட்ட அவளிடம் எனக்கு அதிகப்படியான பிரியம் இருந்ததற்கு இன்னொரு முக்கியமான காரணமும் இருந்தது.



இப்பொழுது நினைத்தாலும் வெட்கத்தினால் என் உடம்பு குன்றிப் போகிறது. அற்ப விஷயத்துக்காக அடி முட்டாளாகப் போய்க் கலகலவென்று சிரிப்பும் விளையாட்டுமாயிருந்த எங்களுடைய சின்னஞ்சிறு குடும்பத்தை அடியோடு பாழாக்கிவிடத் திட்டம் போட்டு விட்டேன் நான். என்னுடைய திட்டம் மட்டும் நிறைவேறியிருந்தால் குடும்பமே அழிந்து விட்டிருக்கும். அப்படிப்பட்ட விபரீதத்திலிருந்து எங்கள் குடும்பத்தைக் காப்பாற்றி, என் மனத்திலும் நிறைவை உண்டாக்கினவள் கந்தாயி. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் அது நடந்தது. அந்தக் கதைதான் இது.

என் கணவருக்குப் பெயரளவில் நான் இளையாளாய் வாழ்க்கைப் பட்டாலும் வயதில் எங்களுக்கு வித்தியாசமில்லை. என் கணவரின் முதல் மனைவியான மரகதம், தன்னுடைய முதல் குழந்தையைப் பெற்ற ஆறு மாதங்களுக்கெல்லாம் மரித்து விட்டாள். பச்சைப் பிள்ளையை எடுத்து, வளர்த்துக் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள அவருக்கு நெருங்கிய உறவினர் எவருமில்லை. ஆகவே, அந்தக் குழந்தைக்காகவேனும் சீக்கிரமாக மறுமணம் செய்து கொள்ள வேண்டிய நிலைமை அவருக்கு நேரிட்டது. என் தந்தையை அணுகிக் கேட்டார்.

எங்கள் குடும்பம் சுமாரான நல்ல நிலையிலேயே இருந்தது. என் பெற்றோருக்கு நாங்கள் இரண்டு பெண்களும் ஒரு பிள்ளையுமே. இரண்டாவது தாரமாக என்னைக் கொடுக்க அவர்களுக்கு விருப்பமில்லை. ஆனால் நான் பிரியப்பட்டு அவருக்கு வாழ்க்கைப் படுவதாகக் கூறியதால் அரை மனத்துடன் ஒப்புக் கொண்டார்கள்.

கல்யாணத்துக்கு ஒரு வாரம் முன்பு என் பெற்றோரின் சம்மதத்துடன் என்னைச் சந்தித்துப் பேசினார் என் கணவர்.

" குந்தளா !......எனக்கு ஒரு வயதில் பெண் குழந்தையிருக்கிறது என்று உனக்குத் தெரியுமல்லவா ?"

" நன்றாய்த் தெரியும் ; அதனுலென்ன ?" என்று கேட்டேன் நான்.

"அக் குழந்தையை நீ நன்றாய்க் கவனித்துக் கொள்ள வேண்டும் " என்று நேரிடையாகவே கூறி விட்டார் அவர்.

" உங்களுக்கு அதைப் பற்றிக் கொஞ்சம் கூடச் சந்தேகமே வேண்டாம் " என்று உறுதி






யாக நான் கூறியது அவர் மனத்தில் சந்தோஷத்தையுண்டாக்கியிருக்க வேண்டும். தெளிவடைந்த முகத்துடன் அவர் விடைபெற்றுக் கொண்டு போனார்.

* * *

திருமணம் முடிந்து நான் அவருடன் என்னுடைய புது இல்லத்துக்குள் நுழைந்த பொழுது என்னை முதன் முதலாக வரவேற்றது கந்தாயிதான். இடுப்பில் என்னுடைய கணவரின் முதல்தாரத்துக் குழந்தையை ஏந்தியபடி வாசலுக்கு வந்து, ''வாங்க, அம்மா!'' என்று மலர்ச்சியுடன் வண்டியிலிருந்து இறங்கிய என்னை, வாய் நிரம்ப அழைத்தாள். பின்னாலேயே வந்த அவள் புருஷன் பழனிசாமி வண்டியிலிருந்த சாமான்களை உள்ளே கொண்டு வந்து வைத்தான்.

என் கணவர், ''குந்தளா! கந்தாயியும் பழனிசாமியும் நாலைந்து வருஷங்களாக இங்கேயே யிருக்கிறார்கள். வீட்டில் உனக்கு எல்லா வேலைகளிலும் ஒத்தாசையாக இருப்பாள் கந்தாயி. பழனி வெளி வேலைகளையெல்லாம் கவனித்துக் கொள்வான்'' என்று அவ்விருவரையும் எனக்கு அறிமுகப்படுத்தி விட்டுக் குழந்தை ரஞ்சனாவை வாங்கி என்னிடம் கொடுக்க வந்தார். நானும் ஆவலுடன் கைகளை நீட்டினேன். பழக்கம் இல்லாத என்னிடம் வர மறுத்து விட்ட குழந்தை மீண்டும் கந்தாயியிடமே தாவி அவளுடைய தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு என்னுடைய முகத்தை ஓரக் கண்ணால் கவனித்தாள். வரப் போகும் அழுகைக்கு அறிகுறியாக அவளுடைய சிறிய பவள இதழ்கள் துடித்தன. என்னுடைய கணவர் இதைக் கவனித்தபடி இலேசாகச் சிரித்துக் கொண்டே உள்ளே போய் விட்டார்.

''பழக்கமில்லாததனாலே வரமாட்டேனென்குது. இரண்டு நாட்கள் பழகிவிட்டால், உங்களை விட்டு நகரவே நகராதுங்க'' என்று என்னைப் பார்த்துக் கூறினாள் கந்தாயி. பிறகு குழந்தையின் முதுகை அன்போடு தடவியபடியே, ''உன்னுடைய அம்மா, கண்ணு. நம்ம வீட்டுக்கு விளக்கேற்றப் போகிற லட்சுமி!'' என்றாள்.

என்ன செய்தும் குழந்தை என்னைப் பார்க்கக் கூட மறுத்து விட்டாள்.

''போகட்டும், அவளாகவே வருவாள்!'' என்று சொல்லி விட்டு நானும் சிரித்தபடியே உள்ளே போனேன்.

என்னைத் தொடர்ந்து உள்ளே வந்த கந்தாயி, ''இதுதான் சமையலறை; இது தான் சாப்பாட்டுக் கூடம்; இதுதான் பூஜை அறை'' என்று ஒவ்வொன்றாக எனக்குக் காட்டிக் கொண்டே வந்தாள்.




கூடத்தின் நடுவில் என் கணவரின் மூத்த தாரத்தின் பெரிய படம் மாட்டப்பட்டு, அதற்குப் பெரிய அழகான ரோஜாப் பூ மாலை சூட்டப் பட்டிருந்தது.

அதன் அருகில் வந்ததும் சற்று நின்றாள் கந்தாயி. ''ரஞ்சனாவின் அம்மாவுங்க!'' என்று கூறினாள்.

அந்தப் படத்தைக் கூர்ந்து பார்த்தேன். என் கணவரின் மூத்த மனைவி நல்ல அழகியாக இருந்திருக்க வேண்டும். சாந்தம் ததும்பிய பெரிய விழிகளுடன் புன்னகை தவழ அப் படத்தில் நின்று கொண்டிருந்தாள்.

பலவிதமான உணர்ச்சிகள் உள்ளத்தில் போட்டியிட நெடுநேரம் நான் அங்கேயே நின்றேன். கந்தாயி ஸ்நானத்துக்கு அழைத்த பொழுதுதான் அங்கிருந்து சென்றேன்.

ஒரு வாரத்திலேயே குழந்தை ரஞ்சனா என்னிடம் ஒட்டிக் கொண்டு விட்டாள்.

ஸிரோலின்
உங்கள்
இருமலின்
மூலகாரணத்தை
நீக்குகிறது

...நீங்கள்
இருமலை நீக்க
மட்டுமல்ல
அது செய்வது
ஸிரோலின்




அதில் எனக்கு அசாதரியப் பெருமை. என்னை அம்மாவென்று கூப்பிட அவளுக்குச் சொல்லிக் கொடுத்தேன். மழலை மொழியால் அவள் என்னை அழைத்தபொழுது என் உள்ளம் மகிழ்ச்சியினால் பூரித்தது.

கந்தாயிக்கு இப்பொழுது முன்னளவு வீட்டில் அவ்வளவு வேலையில்லை. ரஞ்சனாவைப் பற்றிய பொறுப்பையெல்லாம் நான் ஏற்றுக் கொண்டு விட்டமையால் பகல் வேளைகளில் சற்று நேரம் தன்னுடைய வீட்டுக்குப் போய் வருவாள். சிற்சில சமயங்களில் இரண்டு மூன்று குழந்தைகள் அவளுடன் வரும். கந்தாயியின் தங்கையான மாராயியும் வருவாள். வீட்டில் ஏதாவது அதிகப்படியான வேலை யிருந்தால் மாராயி கூடமாட ஒத்தாசை செய்வாள்.

ஒரு தினம் கேட்டேன். ''இந்தக் குழந்தைகள் எல்லாம் யார்?'' என்று.

'' என் குழந்தைகள் தானுங்க!'' என்றாள் கந்தாயி மலர்ந்த முகத்துடன்.

நான் அதிசயத்துடன் அவளைப் பார்த்தேன்.

'' சின்னக் குழந்தைகளா யிருக்கிறார்களே! நீ இங்கே வந்து விட்டால் அவர்களை எல்லாம் யார் பார்த்துக் கொள்வது?''

''என் தங்கச்சி மாராயி இருக்குதுங்களே?'' என்றாள் அவள் சிரித்தபடியே.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. '' உன் தங்கச்சி புருஷனும் உங்களுடனேயே இருக்கிறானா?'' என்று கேட்டேன்.

'' ஆமாமுங்க '' என்று மீண்டும் சிரித்து விட்டுக் கையில் சோப்புக் கட்டியை யெடுத்துக் கொண்டு துவைக்க வேண்டிய துணி மூட்டைகளையும் வாரிக் கொண்டு கிணற்றங் கரையை நோக்கிப் போய் விட்டாள்.

கந்தாயி எதையோ மறைக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்ட நான் அதற்கு மேல் அவளைத் தூண்டித் துளைக்காமல் விஷயத்தை அதோடு விட்டு விட்டேன். அவளும் ஒன்றும் சொல்லவில்லை.

* * *

ரஞ்சனாவுக்கு ஆறுவது வயது நடந்து கொண்டிருக்கையில் என்னுடைய முதல் பையன் குமார் பிறந்தான். என் கணவருக்கு ஒரே சந்தோஷம். கந்தாயி, '' ஆசைக்குப் பெண்ணும் ஆஸ்திக்குப் பிள்ளையுமென்று சொல்லுவாங்க. அது போலப் பொறந்திருக்குங்க எல்லார் கண்ணும் ஒண்ணுபோலே இராது. கண்டவங்களுக் கெல்லாம் குழந்தையைக் காட்டாதீங்க'' என்றபடி இரண்டு நாளுக்கொருதரம் ரஞ்சனாவுக்கும் குமாருக்கும் திருஷ்டி கழித்து விடுவாள்.

இரண்டு வருஷங்கள் என் குடும்பத்தில் இன்பம் பொங்கி வழிந்தது. அதைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கக் கங்கணம் கட்டிக் கொண்டது போல் ஒரு தினம் என்னுடைய பழைய சினேகிதி பங்கஜம் அங்கே வந்து முளைத்தாள்.

அவள் சிறு வயதில் என்னுடன் விளையாடியவள். எனக்குக் கல்யாணமான பிறகு அவளை நான் சந்திக்கவேயில்லை. இப்பொழுது அவளுடைய கணவனுக்கும் இதே ஊருக்கு மாற்றலாகி யிருக்கிறதாம். ஆகவே நாங்க

ளும் அதே ஊரில் இருப்பதை யறிந்துகொண்டு என்னைத் தேடிக்கொண்டு வந்திருந்தாள்.

உள்ளே வந்தவள் கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்த ரஞ்சனுவைக் கண்டதும், "ஏண்டி குந்தளா! இதுதான் உன்னுடைய மூத்தாள் பெண்ணு?" என்று கேட்டாள் வெடுக்கென்று. அது எனக்கு என்னவோ போலிருந்தது. குழந்தை ஒன்றும் புரியாமல் அவளைப் பார்த்து விழித்தாள்.

"அப்படிச் சொல்லாதே, பங்கஜம்! ரஞ்சனு என்னைத்தான் தன் தாயாரென்று எண்ணிக் கொண்டிருக்கிறுள்!" என்று மெதுவாகக் கூறிவிட்டுக் குழந்தையை என்னிடம் கூப்பிட்டு அணைத்துக் கொண்டேன்.

பங்கஜம் ஒன்றும் பதில் சொல்லாமல் என்னை ஒரு தினுசாகப் பார்த்தாள். அந்தப் பார்வை "ஐயோ, அசடே!" என்று சொல்லு வதைப் போலிருந்தது.

அன்றிலிருந்து என் மனம் அமைதியை இழந்து விட்டது. பங்கஜம் இரண்டு நாளைக் கொருதரம் வந்தாள். வீட்டில் எனக்கும் என் கணவருக்கும் சில்லறைச் சச்சரவுகளை ஆரம்பித்து வைத்தாள். சிறு குழந்தைத் தனமாக ரஞ்சனு பேசும் ஒவ்வொரு பேச்சும், விளையாட்டுக்களும் விபரீதமானபொருளுடன் எனக்குத் தோன்றலாயின. என் கணவர் ரஞ்சனுவுக்கே அதிகம் சலுகை கொடுப்ப தாகவும், குமாரை அவர் லட்சியமே பண் ணுவதில்லை யென்றும் எனக்குக் கற்பித்துக் கொடுத்தாள் பங்கஜம். எனக்கும் அப்பொழு தைய மனநிலையில் அது வாஸ்தவமென்றே தோன்றியது.

ஒரு வெள்ளிக்கிழமை காலை கந்தாயி "குழந்தைக்கு எண்ணெய் தேய்க்கணுமே! நான் தேய்க்கட்டுமா?" என்று கேட்டாள்.

"நீயே தேய்த்துவிடு; எனக்கு வேலை தலைக்குமேலே கிடக்கு" என்று அலட்சிய மாய்க் கூறிவிட்டு உள்ளே போய் விட்டேன். பாவம் கந்தாயிக்குச் சுருக்கென்று பட்டிருக்க வேண்டும். ஏதோ சொல்ல வாயெடுத்த வள் சட்டென்று வாசற்பக்கம் பார்த்தாள். அவள் முகம் மாறியது. பங்கஜம் உள்ளே வருவதைக் கண்டதும் ரஞ்சனுவின் கையைப் பிடித்து, "வா, கண்ணு! குளிச்சிட்டு வர லாம்" என்று கூறியபடியே அவளை அழைத் துக் கொண்டு போய்விட்டாள்.

அதைத் தொடர்ந்து, "அம்மா தான் குளிப்பாட்டணும், நீ வேண்டாம் போ!" என்று ரஞ்சனு பெரிதாக அழுவது என் காதில் விழுந்தது. நான் என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டேன். எவளோ பெற்றுச் சென்ற பெண்ணுக்காக நான் எதற்குச் சிரமப்படவேணும்? பங்கஜம் சொல்லுவது போல் 'ரஞ்சனு என்ன பத்து மாசம் சுமந்து நான் நொந்து பெற்ற பெண்ணு?' என்று எண்ணியபடியே என் சிநேகிதியை வரவேற்க வாசலுக்குச் சென்றேன்.

அன்று இரவு என் கணவர் ஆபீஸிலிருந்து வரும்பொழுது நகைப் பெட்டியுடன் வந்தார்.

"குந்தளா! இதைப் பார்த்தாயா? மலை யப்ப செட்டியார் யாருக்காகவோ பண்ணி வைத்திருக்கிறுர். நம்ப ரஞ்சனுவுக்கு வேண்டு மானால் வாங்கலாமென்று தோன்றியது.


# சுலேகா

## பவுண்டன் பேனு மை

இராவகத்தால் அரிக்கப்படு வதைத் தடுத்து எழுதும் பொழுதே பேனுவைச்சுத்த மாக்கிப் பாதுகாக்கும் "S-50" சுலேகா மையில் சேர்க்கப் பட்டிருக்கிறது.




Contains SOLVENT "S-50"

சுலேகா ஒர்க்ஸ் லிட்.

கல்கத்தா - டெல்லி - பம்பாய்-சென்னை





# EPHRILIME

## எப்ரிலைம்



அவன் கொடுக்கும் இந்த மருந்தை உட்கொண்ட ஒரு சில நிமிஷங் களிலேயே அவனது ஆஸ்த்மா உபாதைகள் மாயமாய் மறையும்.

நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

யூனியன் டிரக் கம்பெனி லிட்.

மதராஸ் டிப்போ:

ஜோன்ஸ் லேன் — மதராஸ்-1

# நரஸூ காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான ருசியை
அநுபவியுங்கள்



நரஸூ மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிமிட்.,
சேலம் & சென்னை

NCZ-21 ATM






## டியூபுகளில் ஏன்
பாட்டில்களல்ல ?

* கலவைப் பொருள்கள் புத்தம் புதியதாகவும் சுருசுருப்புடனும் இருக்கும்.
* தூய்மை கெட்டுப் போக முடியாது.
* வேண்டிய அளவில் வெளியே எடுக்க முடியும் ஆகையால் சிக்கனமானது.

**நோபெயின் பாம்**

சுகாதார முறையில்
அடைக்கப்பட்ட ட்யூபுகளில்

தலைவலி, தசைச்
சுளுக்கு வலி, மார்ச்
சளி இவைகளுக்கு

ஒரு கல்கத்தா கெமிக்கல்
தயாரிப்பு

CF-3 TM8-53

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை -1



*1949-ல் நேருஜி இமாலயமலையில் உள்ள லடாக்கிற்கு விஜயம் செய்த போது பௌத்த உடையுடன் தோன்றிய காட்சி. பௌத்த சங்கத் தலைவர்களையும் மேலே படத்தில் காணலாம்.*

---

நாலு பவுனும்; உனக்குப் பிடித்தால் அவளுக்கு இதே போல் ஒரு மாலை செய்யலாம்'' என்று கூறி அதை என் கையில் கொடுத்தார்.

நான் அதை வாங்கிப் பார்த்து விட்டு அவரிடமே திரும்பக் கொடுத்து விட்டேன். '' ஏன்? நம்ம குமாருக்கு ஒன்று பண்ணக் கூடாதா?'' என்று கேட்டேன்.

'' குமாருக்கா? அவனுக்கு எதற்கு? ஆண் குழந்தைக்கு நகையே கூடாதென்பது என்னுடைய அபிப்பிராயம்'' என்று கூறிவிட்டு வியப்போடு என்னை நோக்கினார்.

'' ஏன்? ரஞ்சனா மட்டும்தான் உங்கள் குழந்தையா? அவனும் உங்கள் குழந்தை தானே!'' — பங்கஜம் என்னுள் ஊறி விட்டிருந்த குரோதம் இவ் வார்த்தைகளாக வெட்டித் தெறித்து வெளியே கொட்டியது.

என் கணவரின் முகம் மாறியது. அவர் ஒன்றுமே பேசவில்லை. உதடுகளை இறுக மடித்த வண்ணம் நகைப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு வேகமாய் அறையை விட்டு வெளியே போய் விட்டார்.

அன்றிலிருந்து அவருக்கும் எனக்குமுள்ள பந்தம் விலகிவிட்டது போல் நடந்து கொண்டார். அவருக்குச் சாப்பாடு, படுக்கை, எல்லாம் தனியாகவே நடந்தது. ரஞ்சனாவைத் தாமே சிரத்தையாகக் கவனித்துக் கொண்டார். என் பக்கமே அண்டவிடுவதில்லை. அவளும் எப்படியோ என்னிடமிருந்து விலகி, அவரிடம் ஒட்டிக்கொண்டு விட்டாள்.

நாலு நாட்கள் கழித்து. ''இந்தா, உன் பிள்ளைக்கு!'' என்று சொல்லியபடியே என் கணவர் ஒரு நகைப் பெட்டியை என் எதிரில் கொண்டு வந்து வைத்தார். அவர் கையில் இன்னொன்று இருந்தது. அது ரஞ்சனாவுக்கு என்று தெரிந்து கொண்டேன்.

பதினைந்து நாட்கள் சென்றன. அவருக்கும் எனக்கும் பேச்சுக்கூட நின்று விட்டது. என் மனம் வேதனையினால் புழுங்கியது. 'இந்த நிலைமைக்கு நான்தானே காரணம்' என்று என் மனச்சாட்சி குத்திக் காட்டியது. ஆனாலும் என் மனத்தில் சூழ்ந்திருந்த குரோதம் என் அறிவை மறைத்தது.

* * *

''அம்மா!'' என்று அழைத்துக் கொண்டு கூடத்துக்கு வந்தாள் கந்தாயி. நான் ஊஞ்சலில் படுத்துக் கொண்டிருந்தேன். என்னுடைய மனம் எரிநெருப்பாய்க் குமம்பித் தவித்துக் கொண்டிருந்தது.

''நான் வீட்டுக்குப் போகிறேன். இரண்டு நாட்கள் கழித்துத்தான் வருவேன். மாராயிக்குப்பிரசவமுங்க; எல்லாம் நல்லபடியாக ஆணபிறகுதான் வேலைக்கு வருவேன்'' என்றாள் கந்தாயி.

எழுந்து உட்கார்ந்தேன். ''துணைக்கு அவளுடைய புருஷன் இல்லையா?'' என்று கேட்டேன்.

கந்தாயி இலேசாகச் சிரித்து, ''அவள் புருஷனா?'' என்று இழுத்தாள்.

அதைக் கேட்ட எனக்குத் திகைப்பா யிருந்தது. இதென்ன கூத்து?

கந்தாயி தொடர்ந்தாள்:

''அவளுக்கு வேறு புருஷன் இல்லீங்க. என் புருஷனுக்குத்தான் அவளை இரண்டாந் தாரமாகக் கட்டி வைத்திருக்கிறேன்!''



புதல்வி இந்திராவுடனும் பேரக் குழந்தைகளுடனும் நேரு தாத்தா.

"எதற்காக?" என்று வினவினேன். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

கந்தாயி மீண்டும் சிரித்து விட்டுத் தொடர்ந்தாள்:

"சொல்லுகிறேன், கேளுங்க; எனக்குக் கல்யாணம் கட்டிப் பத்து வருஷங்கள் வரைக்கும் குழந்தை பிறக்கலீங்க. எங்க மாமியார் தன் மகனுக்கு வேறு பொண்ணு தேட ஆரம்பிச்சாங்க. அப்புறம் நான்தான் என் தங்கச்சியையே பேசி என் புருஷனுக்குக் கல்யாணம் முடிச்சு வைச்சேனுங்க. எங்க அப்பனுக்கும் அம்மாவுக்கும் கூட அதிலே விருப்பமில்லே. மாராயியும் முதலில் இவங்களைக் கட்டிக்க மாட்டேன்னு சொல்லி விட்டாள். புதுசா ஒரு பொண்ணு இங்கே வந்து சேர்ந்தால் எனக்குத்தானே கஷ்டமாயிடப் போகிறது என்று கடைசியிலே எல்லாரும் அதற்கு ஒத்துக்கிட்டாங்க."

"அப்போது இந்தக் குழந்தைகள் எல்லாம்?...." வியப்புடன் கேட்டேன் நான்.

"எல்லாம் என் தங்கச்சியுடையது. ஆனால் என்னைத்தான் அம்மான்னு கூப்பிடும்."—பெருமை தொனிக்கும் குரலில் இதைச் சொன்னாள் கந்தாயி. அவள் மனத்திலிருந்த நிறைவும் கனிவும் அவள் விழிகளில் பிரதிபலித்தன. அசந்து போனேன் நான்.

கந்தாயி போய் விட்டாள். படுத்தவண்ணமே அவளையும் என்னையும் ஒப்பிடத் தொடங்கினேன் நான்.

தங்கையையே தன்னுடைய புருஷனுக்குத் தாரமாகக் கட்டி, அவளுடைய குழந்தைகளையெல்லாம் தன்னுடையவைகளாகவே கருதி வளர்த்து, தன்னுடைய வீட்டில் ஆனந்தத்தையும் அமைதியையும் நிலைநாட்டி வந்திருக்கிறாள், படிப்பும் நாகரிகமும் தெரியாத இப் பாமர ஸ்திரீ. ஆனால் நானோ?....ஐயோ வெட்கம்!....வெட்கம்! என்னைப் பற்றி நினைக்கவே எனக்குப் பிடிக்கவில்லை. குரோதம் மறைந்து இதயம் இலேசாகி விட்டது.

வெளியே ரஞ்சனாவின் அழுகை கேட்டது. வேகமாய் எழுந்து என் கணவரின் அறைக்குள் நுழைந்தேன். குமார் அவளை விளையாடு கையில் அடித்து விட்டானாம். அப்பாவின் மடியில் முகத்தைப் புதைத்தபடி ரஞ்சனா விசித்துக் கொண்டிருந்தாள்.

"ரஞ்சனா! இங்கே வா, கண்ணு!" என்று வேகமாய் அவளை இழுத்து அன்புடன் அணைத்துக் கொண்டேன்.

பயத்துடன் என்னிடமிருந்து விலக முயன்றாள் குழந்தை. என் நெஞ்சில் முள் குத்தியது போன்ற வேதனை தோன்றியது. மீண்டும் அவளை என் மார்போடு அணைத்துக் கொண்டேன். என் மனத்திலுள்ள பாரம் மறைந்தது. என் கணவரின் முகத்தை நிமிர்ந்து பார்த்தேன். என்னை ஏறெடுத்து நோக்கினார் அவர். என் விழிகளில் நீர் ஊற்றெடுத்துப் பெருகியது. விம்மி விம்மி அழலானேன். எனக்குப் புத்தி வந்து விட்டது.

பங்கஜம் உள்ளே வந்தாள். என் கணவர் மெதுவாக வெளியே நழுவினார். என்னை ஏளனமாக நோக்கினாள் அவள்.

"என்ன குந்தளா? பெண்ணைக் கொஞ்சுகிறாயா?" என்று கேட்டாள் பங்கஜம்.

"ஆமாம். ரஞ்சனா என் பெண்" என்று அழுத்தம் திருத்தமாய்ச் சொன்னேன்.

* * *

**ப**ன்னிரண்டு வருஷங்கள் ஓடின பிறகு ரஞ்சனா புக்ககத்திலிருந்தாள். அவள் மாமனாரிடமிருந்து வந்த மஞ்சள் தடவிய கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தார் என் கணவர் மலர்ந்த முகத்துடன்.

"குந்தளா! உனக்குப் பேரன் பிறக்கப் போகிறானாம்" என்று கூவினார். சமையலறையிலிருந்து அவசரமாக வெளியில் வந்தேன் நான்.

"நிஜமாகவா? எத்தனை மாசமாம் ரஞ்சனாவுக்கு?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"ஐந்து மாசமாம். வளைகாப்பு சீமந்தத்துக் கெல்லாம் தயார் பண்ணிக் கொள்" என்றார் கணவர் என்னிடம்.

எனக்கு ஒரே சந்தோஷம். கந்தாயியிடம் இந்தச் சுப சமாசாரத்தைத் தெரிவிக்கக் கிணற்றண்டை போனேன். தொட்டியில் ஜலம் நிரப்பிக் கொண்டிருந்தாள் கந்தாயி. விஷயத்தைச் சொன்னதும், "ஆண்பிள்ளைக் குழந்தை பொறக்கணுங்க. என் மகள் வீராயி கூட முழுகாமல் இருக்குது. பூமுடிக்கக் கூட்டி வரணும்" என்றாள் குதூகலத்துடன்.

அதிசயப் பிறவியான அந்த எளிய ஸ்திரீயின் நிறைந்த உள்ளத்தை எண்ணி வியந்தபடியே உள்ளே வந்தேன். என் மனத்தில் சாந்தியும் இன்பமும் நிறைந்தன.

# அழகிற்கு

## ஐடெக்ஸ் பிந்தி சாந்து, ஐடெக்ஸ் கண் மை

தற்பொழுது நாங்கள் இந்தியாவிலேயே முதல் முதலாகவும், புதியதாகவும் ஐடெக்ஸ் பிந்தி சாந்து (EYETEX BINDI) என்ற பெயருடன் அழகான திருகு பாட்டிலில் கண்ணாடிக் கம்பியுடன், மனத்தைக் கவரும்படியான வாசனையுடன், பெண்மணிகளின் அழகிற்கென்றே, பண்டைகால சாஸ்திரீய முறைப்படி சாந்து தயாரித்து விற்பனை செய்கிறோம்.

இந்த ஐடெக்ஸ் பிந்தி சாந்தின் மூடியைத் திறந்தால், நீங்கள் அதிலேயே கண்ணாடிக் கம்பியைக் காணலாம். அதனால் இனிமேல், நீங்கள் சாந்து இடுவதற்காகக் கம்பியோ குச்சியோ தேட வேண்டிய அவசியமில்லை.

இந்த ஐடெக்ஸ் பிந்தி சாந்தும், மிக குணமுள்ளதும், பொதுமக்களின் ஆதரவையும், விருப்பத்தையும் பெற்றுள்ள ஐடெக்ஸ் கண் மை (EYETEX) அரவிந்த் பிந்தி சாந்து (ARAVIND BINDI CHANDU) முதலியவைகள் தயாரிக்கும், அரவிந்த் லாபரட்டரீஸாரால் தயாரிக்கப் பட்டதுதான்.

குறிப்பு:—நீங்கள் கடைகளில் வாங்கும்போது, போலிகளை வாங்கி ஏமாறாமல் இதில் காணும் மார்க்கைச் சரியாகப் பார்த்து வாங்குமாறு கேட்டுக் கொள்கிறோம். எல்லா ஊர்களிலும் கிடைக்கும்.

அழகிற்கும் கண் குளிர்ச்சிக்கும் உகந்தது
ஐடெக்ஸ் கண் மை, ஐடெக்ஸ் பிந்தி சாந்து

SUNBEAM


















தயாரித்து விநியோகிப்பவர்கள் :

**அரவிந்த் லாபரட்டரீஸ், ஆற்காடு ரோடு, மதராஸ் - 26.**

GP



# நீங்களே நியாயம் சொல்லுங்கள்!

## அறிவாளிக்குகந்த ப்ளேடு எதுவென்று

ப்ளேடுகளிலிருந்து நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? நெடு நாட்கள் மழுங்காமல் உழைக்கும் கூர்மை. பல நாட்களுக்கு மழமழப்பான சுக க்ஷவரம்.

நீங்கள் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை உபயோகிக்காவிடில் இவைகளை எங்ஙனம் அடைவீர்கள்? அனேகமாக முடியாது.

நீங்களே நியாயம் சொல்லுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை ஏது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றெந்த ப்ளேடுகளினாலும் இத்தகைய மிருதுவான சுக க்ஷவரம் பெற முடியாது. மற்ற ப்ளேடுகள் அனேக நாட்களுக்கு கூர்மையாக இருந்து உழைக்காது.

உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுப்பது ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே. மட்ட ரக க்ஷவரம் பெற வேண்டிய அவசியமும் இல்லை. ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளே வேண்டுமெனக் கேட்டு வாங்குங்கள்.




**7 o'clock BLADES**

**ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்**





## பிள்ளைப் பிராயத்திலே!

ஒரு வயது நிரம்பிய தேரு!
அன்னை சொரூபராணியுடன்
தள்ளுவண்டியில் சவாரி.
மூன்று வயதில் குதிரை சவாரி.
துப்பாக்கி வீரர், ஜாக்கிரதை!









உச்சிக் குடுமியுடனும் பூச்சட்டை, குல்லாயுடனும் நிற்கும் நாலு வயதுக் குழந்தை. சைக்கிள் சவாரி செய்யும் ஐந்து வயதுப் பாலகன். விசித்திர இராணுவ உடையில் குழந்தை வீரர்! தங்கை விஜயலக்ஷ்மியுடன் அண்ணன்.









உபநயனத்தின்போது ஒரு காட்சி. இங்கிலாந்தில் இராணுவப் பயிற்சி உடையிலே நிற்கிறார். கூர்க்க சிப்பாய் உடையில் தோற்றம். ஹாரோ கலாசாலை மாணவன் (1907)





## புது பாட்டரி வாங்கப் போகிறீர்களா?

## அதிக காலம் உழைப்பது

# ஓக்ஸ் பாட்டரி

**பெட்ரோல் அல்லது டீஸல் மூலம் இயங்கும் எவ்வித வாஹனம் மற்றும் டிராக்டருக்கும் ஏற்றது கிடைக்கும்**

இந்தத் தடவை நீங்கள் பாட்டரி வாங்கும்பொழுது அதிக காலம் உழைக்கும் ஓக்ஸ் பாட்டரியையே வாங்குங்கள். எவ்வித கடின சந்தர்ப்பங்களையும் சமாளிப்பதற்காக அதிக உறுதியுடன் தயாரிக்கப்படும் இந்த பாட்டரி குறைந்த செலவில் சிறந்த உழைப்பை அளிக்கிறது.




**ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிட்.**

இந்தியா முழுவதிற்கும் அங்கீகரிக்கப்பட்ட
[illegible] விநியோகஸ்தர்கள்
[illegible] க்வீன்ஸ் ரோடு, பம்பாய் 4

GO. 4161




# வலம்புரிச்

பூமாலை யோசித்துப் பார்த்தான். 'அன்றைக்குச் சங்கு குளிக்கப் போவதா? வேண்டாமா?' என்று எண்ணினான். குடிசைக்குள் அவன் மனைவி கோமதி வலி பொறுக்க முடியாமல் முனகிக் கொண்டிருந்தாள். எப்படியும் அன்றைக்கு உச்சிப் போதுக்குள் குழந்தை பிறந்து விடும் என்று மருத்துவச்சி சொல்லி விட்டுப் போயிருந்தாள்.

"ஏலே, பூமாலே! இன்னிக்கு ஒரு நாளைக்குப் போவாட்டி என்னடா குடிமுழுகிப் போச்சு? குழந்தை முகத்தைப் பார்த்திட்டுப் பிறகு போகலாம்டா!" வயதானவளாகிய அவன் தாய் கூறினாள்.

"அதுக்கில்லே அம்மா! வருஷம் முழுதுமா சங்கு குளிக்க முடியுது? ஏதோ இந்த இரண்டு மூணு மாசத்திலே நாலு காசு பார்த்தால் தானே உண்டு?...."

"காசு கிடக்குதுடா....விடு! தாயும் குழந்தையுமா இவங்களைப் பார்க்கிறதை விடவா காசு பெரிசு?"

"சரி, உன் இஷ்டம்! இருக்கேன்.... கண்டிராக்டர் எசமான் கூப்பிட்டு விடாமல் இருக்கணும்!"—பூமாலை குடிசையிலேயே தங்கி விட்டான். அன்று அவன் சங்கு குளிக்கப் போகவில்லை.

சங்கு குளிக்க மற்ற ஆட்கள் வந்திருந்தார்கள். ஆனால் கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளைக்குப் பூமாலை வராததுதான் பெரிய நஷ்டமாகப் பட்டது. பூமாலையைப் போல

நா. பார்த்தசாரதி

வேகமாகச் சங்கு குளிக்கக் கூடிய ஆட்கள் அந்தப் பிரதேசத்திலேயே வேறொருவரும் இல்லை. சல்லடத்தைக் கட்டிக் கொண்டு கடலில் குதித்தால் பொழுது சாய்வதற்குள் சங்குகளை வாரிக் குவித்து விடுவான். மற்றக் கூலிக்காரர்களோ, பத்து இருபது சங்குகளைக் குளிப்பதற்குள்ளேயே மூச்சுத் திணறிக் கூலியை வாங்கிக் கொண்டு ஓடி விடுவார்கள். நான்கு மாதங்கள்தான் அவரது கண்டிராக்டின் ஆயுள். ஆயிரக்கணக்கான பணத்தைக் கொட்டிக் 'கண்டிராக்டு' எடுத்திருந்தார். இந்த நான்கு மாதங்களுக்குள் லாபம் பார்த்தால் தான் உண்டு. இல்லையானால் நஷ்டமடைந்து கையைச் கட்டுக் கொண்டு போக வேண்டியது தான்.

''இன்றைக்கு ஏண்டா பூமாலையை இன்னும் காணோம்?'' என்று கேட்டார் பரமசிவம்.

'' அவன் பொஞ்சாதி பிள்ளைத்தாச்சியா இருக்காங்க. .அதுக்கு இன்றைக்கு நாளுங்க. . அதனாலே அவன் வரமாட்டானுங்க. . . . ''

'' நான் கையோடே கூட்டிக்கிட்டு வரச் சொன்னேன்னு போய்க் கூட்டிட்டு வாடா!. . உடனே திரும்பிடலாம்னு சொல்லு. [அப்பொழுதுதான் பயல் வருவான்.''

கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளையின் கட்டளையைச் சிரமேல் தாங்கிக் கொண்டு பூமாலையைக் கூட்டி வருவதற்குப் புறப்பட்டான் ஒரு கூலியாள்.

காலை எட்டு மணிக்கு மேல் ஆகிவிட்டது. தூத்துக்குடி துறைமுகத்திலிருந்து கொழும்புக்குச் செல்லும் முதல் கப்பல் புறப்படுவதற்குத் தயாராக ஒலியை முழக்கிக் கொண்டிருந்தது. துறைமுகத்தில் போவோரும் வருவோருமாக ஒரே கூட்டம். கடல் நீரின் மூடை நாற்றத்தை ஏற்றுமதி இறக்குமதிக்காகக் குவிக்கப்பட்டிருந்த சாமான்களின் வாடை அமுக்கிக் கொண்டிருந்தது. பரமசிவம் பிள்ளையும் அவருடைய கூலியாட்களும் பூமாலையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் சங்கு குளிக்கச் செல்ல வேண்டிய பகுதி கடலில் சிறிது தொலைவு தள்ளி இருந்தது. அங்கே போவதற்குப் பெரிதும் சிறிதுமாகப் படகுகள் துறைமுகத்தில் தயாராக இருந்தன.

போனவன் அரை நாழிகையில் பூமாலையோடு திரும்பி வந்து சேர்ந்தான்.

'' ஏண்டா பூமாலே! குழந்தை பிறந்தால் வீட்டிலேயிருந்து ஆள் அனுப்ப மாட்டாங்

# சங்கு



களா? அதற்காக நீ வீட்டிலேயே இருக்கணுமோ?'' என்று கேட்டார் பரமசிவம்.

''இல்லீங்க....அம்மா சொல்லிச்சுங்க.. இன்றைக்கு ஒரு நாளைக்கு மட்டும் போக வேண்டாம்னு....''

''போடா போ! ஒரு நாள் சம்பாத்தியத்தை வீணாக்கணும்கிறியே? சல்லடத்தைக் கட்டிக்கிட்டு வேலையைப் பாருடா! குழந்தை பிறந்த தகவல் வந்த உடனே உன்னை வீட்டுக்கு அனுப்பிச்சுடறேன்....''

''இல்லை எசமான்! இன்றைக்கு வேண்டாமுங்க....என் மனசு சரியாயில்லீங்க..ஞாபகத்தை எல்லாம் வீட்டிலே வைச்சுக்கிட்டு இங்கே வேலை செய்யறதுன்னு....?''

''அட சரிதான்! பெரிய மனசைக் கண்டவன் கணக்காகப் பேசுகிறியே? நான் சொல்கிறேன்..கேளு பூமாலை!'' பரமசிவம் பிள்ளை வற்புறுத்தினார்.

பூமாலை துணிந்து மறுக்கும் சக்தியை இழந்தான். வேறு வழியில்லை. சல்லடத்தைக் கட்டிக் கொண்டு மற்றக் கூலியாட்களோடு படகில் ஏறி உட்கார்ந்துகொண்டான். கண்டிராக்டர் பிள்ளை பூமாலையைச் சம்மதிக்க வைத்த மகிழ்ச்சியோடு தாமும் ஒரு தனிப் படகில் ஏறி உட்கார்ந்து கொண்டார். படகுகள் 'முத்துக் குளித்தல், சங்கு குளித்தல்'—முதலியவற்றுக்காக ஒதுக்கப்பட்டிருந்த கடல் பகுதியை நோக்கிச் சென்றன.

விநாடிக்கு விநாடி பின்னுக்கு நகர்ந்து மங்கிக் கொண்டிருக்கும் துறைமுகத்தையும், ஊரையும், கரையையும் வெறித்துப் பார்த்தவாறே படகில் போய்க் கொண்டிருந்தான் பூமாலை. அவன் மனத்தில் நிம்மதி இல்லை. வழக்கம் போல் நிறையச் சங்குகளை வாரிக் குவிக்க வேண்டும் என்ற ஆசையும் இல்லை. வேண்டா வெறுப்பாக ஒரு மனநிலை.

''டேய்! பூமாலைக்கு என்ன குழந்தை பிறக்கும்டா?''

''ஆம்பளைக் கொழந்தைதாண்டா..''

''இல்லேடா! பொம்பளைக்குழந்தைதான்!''

''என்ன பந்தயம்டா கட்டறே?''

''இன்றைக்குச் சங்கு குளிக்கிற கூலி முழுதும்டா....!''

''அட! என்ன குழந்தையானால் என்ன? நல்லதாகப் பிறக்கட்டும். அதுதான் வேணும். நீங்க ஏண்டா பந்தயம்போட்டு மடியறீங்க?'' கூட இருந்த கூலிக்காரர்கள் வேடிக்கையும் விளையாட்டுமாக ஏதேதோ பேசிக் கொண்டே வந்தனர். பூமாலை அதில் கலந்து கொள்கிறவனைப் போலச் சிரித்துத் தலையைக் குனிந்து கொண்டானே ஒழிய மனமார அவனால் அந்தக் குதூகலத்தில் ஈடுபட முடியவில்லை.

படகுகள் குறிப்பிட்ட இடத்தை அடைந்தன. உடலின் சூடு குறையாமல் இருப்பதற்காகக் கொழுப்புக் கலந்த ஒரு வகை எண்ணெயைச் சங்கு குளிப்பவர்கள் எல்லோரும் தடவிக் கொண்டிருந்தார்கள். பூமாலை சும்மா உட்கார்ந்திருந்தான்.

''ஏய் பூமாலை! நீ என்ன சும்மாக் குந்திகிட்டிருக்கே? எண்ணெய் பூசிக்கிட்டு இறங்கு. சொல்கிறேன்..வீட்டை நினைச்சுக் கவலைப் படாதே. எல்லாம் நல்லபடியாக முடியும்..!'' பரமசிவம்பிள்ளை இரைந்தார்.

பூமாலை கொழுப்பு எண்ணெயைச் சூடு பறக்கத் தேய்த்துத் தடவிக் கொண்டான்.

சங்கு குளிப்பவர்கள் நாலா திசைகளிலும் மூழ்கி எடுத்துக் கொண்டு வருவதற்கு வசதியாகப் படகோட்டிகள் படகுகளை ஒருவிதமான வியூகத்தில் வளைத்து நிறுத்தினார்கள்.

ஆட்கள் ஒவ்வொருவராகக் கடலில் குதித்தனர். கடைசியாகப் பூமாலை குதித்தான். ஆவலோடு கடற் பரப்பைப் பார்த்துக் கொண்டு படகில் உட்கார்ந்திருந்தார் கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளை.

நேரம் ஆக ஆகப் படகுகள் சங்குகளால் நிறைந்து கொண்டிருந்தன. பூமாலை ஒருவன் மட்டும் மற்றவர்கள் எல்லோரும் சேர்ந்து எடுத்த அவ்வளவு சங்குகளையும் போல இரண்டு மடங்கு எடுத்துக் குவித்திருந்தான். பரமசிவம் பிள்ளைக்குப் பரம சந்தோஷம். உச்சிப்போது ஆகிவிட்டது. எல்லாக் கூலியாட்களும் அலுத்துப் போய்ப் படகுகளில் ஏறி உட்கார்ந்து கொண்டு சோற்று மூட்டைகளை அவிழ்க்க ஆரம்பித்து விட்டனர்.

பூமாலை இன்னும் சங்கு குளித்துக் கொண்டுதான் இருந்தான்.

''போதும்டா பூமாலை! வா; படகிலே ஏறு. சாப்பாட்டுக்கு மேலே மறுபடியும் பார்க்கலாம்.'' பிள்ளை அவனைக் கூப்பிட்டார்.

''இருங்க எசமான்! கடைசித் தடவையாக ஒரே ஒரு மூழ்கு போட்டுட்டு வந்துடறேன்.''

''சரி செய்து பார்!....'' பூமாலை மூழ்கினான். அவன் தலை தண்ணீருக்குள் மறைந்ததும் கரைப் பக்கமிருந்து படகு ஒன்று வருவதைக் கவனித்தார் பரமசிவம் பிள்ளை. படகு அருகில் வந்தது. பூமாலையின் தம்பி அதைச் செலுத்திக் கொண்டு வருவதைக் கவனித்தார் அவர்.

அவனுடைய தோற்றத்தையும் முகபாவத்தையும் கவனித்ததுமே அவருக்குத் தெரிந்து விட்டது விஷயம்.






FLOROZONE

# கருநிற மேனியை அழகு படுத்த ஓர் புதிய சாதனம்

ஆயிரக்கணக்கான ஆண், பெண்களின் சமூக வெற்றிக்குக் காரணம் புளோரோஸோன். ஓசோனும் அமோனுக்ஷினும் கலந்த அற்புதமான புளோரோஸோன் சருமத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக பிரகாசமடையச் செய்து பருக்கள், கரும்புள்ளிகள் சுருக்கங்கள் முதலியவற்றைப் போக்குகின்றன.

புளோரோஸோன் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், பிரகாசமாகவும் இளமையாகவும் வைத்துக் கொள்ள உதவும். புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4-4-0 புளோரோஸோன் கான்ஸன்டிரேட்டட் கிரீம் ஒரு புட்டி ரூ. 5-8-0 (வி. பி. சார்ஜ் தனி) எல்லா மருந்து ஷாப்புகளிலும் கிடைக்கும். அல்லது கீழ்க் கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

ஹைஜினிக் ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்
த. பெ. 1192, பம்பாய்-1

ஏஜன்டுகளும் ஸ்டாக்கிஸ்டுகளும்
ஆர். எல். கெனடர் & கோ., 59, பர்தர் தெரு, சென்னை
அப்பா & கம்பெனி, சென்னை
வில்பிரட் பெயிரா லிமிடெட், சென்னை
ஜாக்ஸன் மெடிகல் சப்ளைஸ், கோட்டயம்
ஹெக்டர் மெதர் & கோ., கொழும்பு-14

HV

# மலச் சிக்கல்

## உங்களை சோர்வடையச் செய்கிறதா?



மலச் சிக்கல் ஒரு துன்பகரமான நோய். அது உங்களுக்கு சோர்வும், தலைச்சுற்றும், மேனிக்குறைவும் உண்டாக்குகிறது. ஆயினும் உலகில் லக்ஷக்கணக்கான பேர்கள் ஒருங்கு கூட இம்மாதிரி துன்பம் அடைவதில்லை. காரணம் அவர்கள் உபயோகித்து வரும் ப்ரூக்லாக்ஸ் என்ற சக்தி வாய்ந்த எளிய விரேசனிதான். இந்த ருசி மிகுந்த சாக்லேட் பேதி மருந்து குடல் வேலையை சகஜமான முறையில் ஊக்கி, உட்புற அசுத்தங்களை வெளிப்படுத்துகிறது. படுக்கும்போது ஒரு சிறிய துண்டு உட்கொள்ளுங்கள். மறுநாள் அதன் பயனை அனுபவியுங்கள். உற்சாகமும், புத்துணர்ச்சியும் தேகசக்தியும் பெறுவீர்கள். மேலும், சுறுசுறுப்புடன் காண்பீர்கள்.




### ப்ரூக்லாக்ஸ்

ஒரே இரவில்
உங்களை குணமாக்கும்
(லண்டன் வெண்ட்மின்ஸ்டர் லாபரேட்டரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜன்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்—1

BMA 39

# “நான் எப்போதும் விரும்புவது

# காவேரி சூபர் சோப்”

‘‘காவேரி சூபர் சோப் தேய்த்து குளித்தவுடன் என் உடல் சோர்வு நீங்கி நான் உற்சாகமடைகிறேன். உடலும் தூய்மையடைகிறது. காவேரி சூபர் சோப்பை உபயோகித்து குளிப்பதனால் ஏற்படும் இன்பமே அலாதி! தேக துர்நாற்றத்தையும் அழுக்கையும் அறவே அகற்றி எனக்கு ஒரு புத்துணர்ச்சியை அளிப்பது காவேரி சூபர் ஒன்றுதான்!’’

ஒளஷத குணம் நிறைந்த சால் மூக்ரா தைலம் கலந்து தயாரிக்கப்படும் காவேரி சூபர் சோப் ஒரு உன்னத ஸ்னான சோப். கையடக்கமான சைஸ். எப்போதும் நீங்கள் கேட்டுவாங்க வேண்டிய சோப் காவேரி சூபர் சோப்.






*தயாரிப்பு:*

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**
**மேட்டூர் அணை**
**சேலம் ஜில்லா**

*மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.*

''என்னடா? இவ்வளவு அவசரமாய்ப் படகிலே வந்திருக்கே?''

''கோமதி மதினி காலமாயிடிச்சுங்க. அண்ணனைக் கூட்டிட்டுப் போக வந்தேன்.''

''ஐயையோ!....குழந்தை பிறக்கலையாடா?''

''அது பொறக்கும் போதே செத்துப் போய்த்தான் பிறந்திச்சுங்க....மதினி அதுக்கப்புறம் வலி எடுத்து வேதனை தாங்க முடியாமே....''

''அட் கண்றாவியே....!'' அவர் பூமாலையின் தம்பியை விசாரித்துக் கொண்டிருந்த போது, கடல் நீர் அலம்பி வடிந்தது. பூமாலை குபுக்கென்று வெளியே வந்தான்.

''எசமான், எசமான்! இதோபாருங்க, என் கையிலே 'வலம்புரிச் சங்கு!' அதிர்ஷ்டம்னு இதுல்லே அதிர்ஷ்டம்!'' — பூமாலை மூச்சுத் திணற நீரின் மேல் தத்தளித்துக் கொண்டே வலது கையை அலைக்கு மேல் உயர்த்திக் காட்டினான். எல்லோரும் வியப்புத் தாங்காமல் திரும்பிப் பார்த்தனர்.



உள்நாட்டு மந்திரியும் வெளிநாட்டு மந்திரியும்

'வலம்புரிச் சங்கு' என்றால் சாதாரணமானதா அது? ஒரு சங்கே லக்ஷக்கணக்கில் விலை போகக் கூடியது. நூறு இருநூறு வருஷங்களுக்கு ஒரு முறை எப்போதாவது அபூர்வமாகக்கடலில் கிடைக்கக் கூடியது. அதை வைத்திருப்பவர்களுக்குச் சகல சித்திகளும் கூடி வரும் என்பதனால் சமஸ்தானாதிபதிகளும் கோடீசுவரர்களும் போட்டி போட்டுக் கொண்டு வாங்குவதற்கு ஓடி வருவார்கள்.

பரமசிவம் பிள்ளை கண்களை அகல விரித்துப் பார்த்தார். பூமாலையின் கையில் ஒரு நல்ல செவ்விள நீர் அளவுக்கு வலப்புறம் வளைந்து திருகிய அற்புதமான வலம்புரிச்சங்கு ஒன்று இருந்தது. ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். பூமாலை அதைப் படகில் வைக்கக் கையைத் தூக்கினான்.

''அண்ணாச்சி! கோமதி மதினி காலமாயிடிச்சு''....விக்கி அழுது கொண்டே பூமாலையின் தம்பி அவன் அருகில் படகைக் கொண்டு வந்தான்.

விலை மதிக்க முடியாத அந்த வலம்புரிச் சங்கு பரமசிவம் பிள்ளையின் படகில் விழுவதற்குள் பூமாலையின் கையிலிருந்து நழுவிக் கடலில் விழுந்தது.

''ஐயோ! பூமாலை....அது ஆழத்திலே போகுதுடா....எடு! எடு! எடுடா.... லக்ஷக்கணக்கிலே பெறுண்டா..'' — அவர் இரைந்து கத்தினார்.

பூமாலை எடுக்க வில்லை. தம்பியின் படகைப் பிடித்துக் கொண்டு உணர்வுகளைச் சோகத்தில் புதைத்துக் கொண்டிருந்தான் அவன்.

பரமசிவம் பிள்ளை துடித்தார். பூமாலை அசையவில்லை. ''டேய்! அப்புறம் சோறு தின்னலாம். நீங்க குதிச்சு எடுங்கடா''— சாப்பிட்டுக் கொண்டிருந்த மற்றவர்களைத் தூண்டினார். அத்தனை கூலியாட்களும் உடனே சாப்பிடுவதை நிறுத்தி விட்டுத் தண்ணீரில் குதித்தனர். தமக்குத் திடீரென்று கிடைத்த வலம்புரிச் சங்கை இழந்த சோகத்தில் அவன் மனைவியையும் குழந்தையையும் இழந்து நிற்கிறான் என்பது கூட அவருக்கு மறந்து போய் விட்டது

''அடா! நாசமாய்ப் போகிற பயலே! அவன் சங்கைப் படகில் வைத்துவிட்டுக் கரையேறினபின் உன் சமாசாரத்தைச் சொல்லித் தொலைச்சா என்ன! நல்லசமயத்தில் கெடுத்து விட்டாயேடா!'' அவர் பூமாலையின் தம்பியைத் திட்டினார். அந்தச் 'சின்னப் பயல்' அவரை முறைத்துப் பார்த்தான். பூமாலை கேவிக் கேவி அழுது கொண்டிருந்தான். அவன் தம்பி கைகொடுத்துத் தூக்கி அவனைப் படகுக்குள் ஏற்றிக்கொண்டு கரையை நோக்கிச் செலுத்தினான்.

பரமசிவம் பிள்ளை உள்ளே மூழ்கிய மற்றக் கூலிகளை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருந்தார். ஒவ்வொருவனாக வெளிவந்தான்.

''எசமான்! அது அகப்படலீங்க.'' அத்தனை கூலிகளும் இதே பதிலைத்தான் கூறினார்கள். திடீரென்று கண் பெற்றுப் பிறகு உடனேயே பழைய குருடனாக ஆனாற்போல இருந்தது அவர் நிலை. இன்னும் பத்து வருஷங்கள் இதே கண்டிராக்டு எடுத்தாலும் பெற முடியாத லட்சாதிபதிப் பதவியை இந்த ஒரே ஒரு வலம்புரிச் சங்கின் மூலம் அவர் பெற்றிருக்க முடியும். அதைப் பூமாலை கெடுத்துவிட்டான்! பூமாலையின் தம்பியையும் அவன் கொண்டு வந்த இழவுச் செய்தியையும் அவர் வாய் ஓயத் தூற்றினார்.

'எப்படியும் அந்த வலம்புரிச் சங்கை எடுக்காமல் விடுவதில்லை' என்று உறுதி பூண்டு விட்டார் அவர். கூலிகளைத் திரும்பத் திரும்ப அதே இடத்தில் மூழ்கச் செய்தார். சங்கு குளிப்பதில் பூமாலைக்கு அடுத்தபடி திறமைசாலிகளான வேறு சிலரை வருவித்துக் குளிக்கும்படி ஏவினார். எல்லோரும் சேர்ந்து ஏமாற்றம் ஒன்றையே அவருக்கு அளித்தார்கள். வலம்புரிச் சங்கு கிடைக்கவேயில்லை.

## மண்ணினைக் கௌரவித்தான்

**லால்குடி கிருஷ்ணமூர்த்தி**

*

இப்புறம் கண்விரித்தால்
'இங்கு நீ வருக'வென்பார்
அப்புறம் செவிமடுத்தால்
'அறிவுரை தருக'வென்பார்
எப்புறம் திரும்பினாலும்
'எங்களின் தோழ'னென்று
கப்பிடும் புகழும், அன்பும்
கடமையே! நேருஉன்னை!

பிறந்திடில் நேருவைப்போல்
பிறந்திட வேணுமம்மா!
சிறந்திடில் அவரைப்போலச்
சிறந்திட வேணுமம்மா!
துறந்திடில் ஜவஹரைப்போல்
சுயநலம் துறக்கவேணும்
உயர்ந்திடில் அவரைப்போலச்
சேவையால் உயரவேணும்!!

தனியனாய் நின்று அன்பால்
தரணியை ஆளும் நேரு
மனிதனாய்த் தோன்றி இந்த
மண்ணினைக் கௌரவித்தான்
இனியனும் எங்குமுள்ள
இறைவனும் நெடுநாள்சிருட்டிப்
பணியினில் வெற்றிகண்டான்
பயனுள செய்கை செய்தான்!!

ஏமாற்றத்தின் நடுவே விளைகின்ற ஆத்திரம் பஞ்சுப் பொதியின் இடையே விழுகின்ற நெருப்புத் துண்டுபோலப் பயங்கரமானது.

நீண்ட நேர ஆலோசனைக்குப் பிறகு 'போலீஸ் ரிப்போர்ட்' செய்வது என்ற முடிவுக்கு வந்தார் பரமசிவம் பிள்ளை.

"என்னிடம் வெகு நாட்களாகச் சங்கு குளிக்கும் கூலியாக வேலை பார்த்து வரும் பூமாலை என்பவன் நேற்றுக் காலை லக்ஷக்கணக்கான ரூபாய்கள் விலையுள்ளதும் எனக்குச் சேரவேண்டியதுமான ஒரு வலம்புரிச் சங்கைக் கடலில் எறிந்து விட்டான். அவன் எறிந்த இடத்தில் அவனையே மூழ்கச் செய்து அந்தச் சங்கை எடுத்துக் கொடுத்து உதவ வேண்டும். அல்லது அவனைத் தகுந்த நடவடிக்கையின் பேரில் சரியானபடி தண்டிக்க வேண்டும்."

பெரும்பான்மை பொய்யும் சிறுபான்மை மெய்யும் கலந்த இந்த ரிப்போர்ட்டைப் போலீஸுக்கு மறுநாள் காலையில் பரமசிவம் பிள்ளை அனுப்பி வைத்தார். அதோடு நேரில் போய்ப் போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்து, "சார்! நீங்கள் அந்தப் பயலை மிரட்டி அழைத்துக் கொண்டு வந்தால் எப்படியும் சங்கைப் போட்ட இடத்திலிருந்து எடுத்துக் கொடுத்து விடுவான்" என்று அவர் கூறியிருந்தார்.

"நீங்கள் சங்கு குளிக்கும் துறையில் தயாராக இருங்கள்! நான் அந்தப் பயலுடைய குடிசைக்குப் போய் ஆளை அதட்டி அங்கே இழுத்துக் கொண்டு வருகிறேன். எப்படியும் அந்த வலம்புரிச் சங்கை எடுத்துவிடச் செய்வோம்" என்று இன்ஸ்பெக்டரும் வாக்களித்தார்.

வலம்புரிச் சங்கு என்றால் அது இலேசான விஷயமா? பரமசிவம் பிள்ளை தலைகீழாக நின்றாவது அதை எடுத்தாக வேண்டும் என்று உறுதியான மனத்தோடு இருந்தார்.

குழந்தையையும், தாயையும் கொண்டு போய்ப் பொசுக்கிவிட்டு வந்த வேதனையோடு குடிசைத் திண்ணையில் சுருண்டு விழுந்து கிடந்தான் பூமாலை. நேற்றும் சரி, இன்றும் சரி, அவன் சாப்பிடவில்லை. எதுவும் தோன்றாமல் அழுது கொண்டேயிருந்தான். உள்ளே பூமாலையின் தாய் இரைந்த குரலில் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள்.

"வலம்புரிச் சங்கு கை நழுவிட்டுதேயின்னு துடிச்சானே தவிர அண்ணாச்சி சம்சாரத்தையும் குழந்தையையும் பறிகொடுத்திட்டு நிற்கிறாரேன்னு அந்தக் கண்டிராக்டர் கொஞ்சமாவது வருத்தப்படவில்லையே? அவனுக்கு என்ன திமிரு?" என்று தனக்குள் பரமசிவம் பிள்ளையைக் கறுவிக் கொண்டிருந்தான் பூமாலையின் தம்பி.

போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரண்டு மூன்று கான்ஸ்டேபிள்களும் அமைதியாகக் குடிசை வாயிலுக்கு வந்தனர். திண்ணையில் சுருண்டு கிடந்த பூமாலையை அவன் தூங்குவதாக எண்ணிக் கொண்டு கைத்தடியினால் தட்டினான் ஒரு கான்ஸ்டேபிள். முழித்துக் கொண்டிருந்த பூமாலை துள்ளி எழுந்தான். இன்ஸ்பெக்டர் அவனை அருகில் வருமாறு சைகை காட்டி அழைத்துக்கொண்டு போனார். அவனிடம் விஷயத்தைக் கூறினால் அவன் ஏதாவது குழப்பம் விளைவிப்பான் என்று எண்ணியே அவர் இப்படிச் செய்தார்.

"என்னை எங்கே கூட்டிக்கிட்டுப் போறீங்க? நான் ஒண்ணும் தப்புத் தண்டாச் செய்யலீங்களே? குழந்தையையும் மனைவியையும் பறிகொடுத்திட்டுச் சாக மாட்டாமல் இருக்கிறவனை நீங்க வேறே..."

"ஏய், பூமாலை! பேசாமல் வரமாட்டே? இப்போ நீ ஜெயிலுக்குப் போகும்படியான நிலை உனக்கு வந்திருக்கு. அதிலிருந்து நீ தப்ப வேணுமானால் நான் சொல்கிறபடி ஒழுங்காகச் செய்துவிடு."

"ஐயையோ! அப்படி நான் என்னங்க செய்தேன்? ஒரு பாவமும் தெரியாதுங்களே!" என்று அழுதான் அவன்.

"புலம்பாதே, அப்பனே! நேற்று சங்கு குளிக்கிறபோது ஒரு வலம்புரிச் சங்கைக் கடலிலே போட்டுட்டே இல்லே? அதை

# களைப்புற்ற

# தந்தையர்களுக்குத்

# தேநீர்



தந்தையர்களே — நீங்கள் நாள் முழுதும் வேலை செய்து களைப்புற்று வீடு திரும்பிய பொழுது, புத்துணர்ச்சியூட்டும் ஒரு கோப்பை தேநீர் கொண்டு தணிவடையுங்கள் அது வெகு விரைவில் உங்கள் சோர்வையகற்றி, குழந்தைகளின் சிரிப்பொலி, நண்பர்களின் அரட்டை இவை நிறைந்த ரம்மியமான மாலை நேரத்தை எதிர்பார்க்கச் செய்கிறது. ஆம், தேநீர் உங்களுக்கு மலர்ச்சியளிக்கிறது. அத்துடன் உங்கள் வீட்டையும் மலரச் செய்கிறது.



**நான்தான் டீ** — நான் குடும்பத்தை ஒன்று சேர்க்கிறேன்



இன்றைக்கு எடுத்துக் கொடுத்திடு. எடுத்துக் கொடுக்கல்லேன்னு ஜெயில்தான், அடிதான், உதைதான். ஆமாம்! பார்த்துக்க..''

''நான் அதை வேணும்னு போடலீங்களே? அதை எடுத்துக்கிட்டு வெளியிலே வந்தப்போ 'என் சம்சாரம் பிரசவிக்கக் குழந்தையோடு செத்துப் போய் விட்டாளுன்னு' தம்பி வந்து சொன்னுங்க. அந்த அதிர்ச்சியிலே அது தவறி விழுந்திடிச்சுங்க....''

''அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது! கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளை 'ரிப் போர்ட்' பண்ணி யிருக்காரு. நீ இரும்பக் குளிச்சு அதை எடுத்தாலொழிய உன்னை இலேசில் விடமாட்டோம்.''

இன்ஸ்பெக்டர் மிரட்டினுர். கான்ஸ்டேபிள் கள் பூமாலையைப் பிடித்து இழுத்தபடியே, அவன் ஓடி விடாமல் ஜாக்கிரதையாகக் கொண்டு போனுர்கள்.

துறையில் பரமசிவம் பிள்ளை ஆட்களோடும் படகுகளோடும் காத்துக் கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர், கான்ஸ்டேபிள்கள், பூமாலை



போல இருந்தது. மூச்சை அடக்கித் 'தம்' பிடித்துக் கொண்டு கடலில் குதித்தான்.

'வலம்புரிச் சங்கு கிடைத்துவிடும்' என்று ஆவலோடு அவன் குதித்து மூழ்கிய இடத் தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் பரமசிவம் பிள்ளை.

கால் நாழிகை ஆயிற்று! அரை நாழிகை ஆயிற்று! அதற்கு மேலும் ஆயிற்று! பொறுமை இழந்த பிள்ளை வேறொரு ஆளையும் பூமாலையைப் பின்பற்றி அதே இடத்தில் குதிக்கச் சொன்னுர். ஆள் குதித்தான். குதித் தவன் சீக்கிரமே எதையோ பற்றி இழுத்துக் கொண்டு மேலே வந்து விட்டான்.

எல்லோருடைய கண்களும் ஆவலோடு கடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருள் என்ன வென்று தேடின.

அவன் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தது வேறொன்றுமில்லை! பூமாலையின் பிணம்! கான்ஸ்டேபிள்கள் தண்ணீரில் இருந்தவனுக்கு உதவியாகக் கைகொடுத்துத் தூக்கினுர்கள். பூமாலையின் சவம் படகுக்கு வந்தது.

என்ன ஆச்சரியம்? சவத்தின் வலது கையில் அந்த வலம்புரிச் சங்கு இறுகப் பிடித்துக் கொள்ளப் பட்டிருந்தது!

போலீஸ் இன்ஸ்பெக்டரும் பரமசிவம் பிள்ளையும் தங்களையும் மறந்து 'ஆ' வென்று அதிசயத்தால் கூவினர்.

''சங்கை எடுத்துக்கொண்டு வருகிறபோது மூச்சுத் தாங்காமல் இறந்திருக்கணுமுங்க.'' மற்றவன் முணுமுணுத்தான். பரமசிவம் பிள்ளை போர்ட்' பண்ணி யிருக்காரு. நீ இரும்

பாருங்கள்!

ஒரு அரை வில்லை
ஸன்லைட்தான்
இவ்வளவு சலவையும்
செய்து முடித்தது!

அதன் அதிகப்படியான நுரையே இதைச் சாதித்தது!

ஸன்லைட்
சோப்



பளிச்சென்று வெண்மையாக வெளுக்கிறது

S. 242-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# வருகிறது! இரட்டை மூடி உடைய புதிய டின்

## உங்கள் டால்டா அதனுள் தூய்மை யோடும் புதுமையோடும் இருக்கும்

மேற்புற மூடி

ஸீலிட்ட உட்புற மூடி

- தூய்மையோடும், புதுமையோடும் இருக்கும் — நீங்கள் வாங்கும் போது. ஏனென்றால், காற்றுப்புகாத ஸீலிட்ட உட்புற மூடி, தயாரித்த கணமுதலாக உங்கள் டால்டாவைப் பூரண பாதுகாப்புடன் வைத்திருக்கிறது.
- தூய்மையோடும், புதுமையோடும் இருக்கும்— நீங்கள் சமையலுக்கு உபயோகிக்கும்போதுகூட. ஏனென்றால் மேற்புற மூடியானது நன்றாக அடக்கம் செய்வதோடு, உள்ளேயிருக்கும் டால்டாவை தூசியினின்றும், ஈ முதலிய ஜந்துக்களினின்றும் பாதுகாக்கிறது.
- மேலும் திறப்பதற்கு மிக எளிது— உபயோகிப்பதற்கும் மிக சௌகரியமானது.
- மிகவும் பயன்படக் கூடியது! காலியாகும் டால்டா டின்கள் சாமான்கள் வைப்பதற்கு வசதியாகப் பயன்படும்.

½ பவுண்டு, 1 பவுண்டு, 2 பவுண்டு*, 5 பவுண்டு*, 10 பவுண்டு* டின்களில் டால்டா விற்கப்படுகிறது.
*இரட்டை மூடி உடைய டின்கள்.

**டால்டா ப்ராண்ட் வனஸ்பதி**




HVM. 282-50 TM